

# புலத்தில்

தாயக தாகத்தின் குரல்

PULATHIL Tamil Weekly | 03 March - 09 March | இதழ்:10





அபிவிருத்திப் பணிகளில் இராணுவத்தினர் ஏன்?

## ஐரோப்பிய ஒன்றியப் பிரதிநிதிகளுக்கு புது விளக்கம் கொடுத்த யாழ். அரச அதிபர்!





## அன்னை இட்ட தீ!



## ஈழத்தாயின் மரணம் எமக்கு உணர்த்திச் சென்ற செய்திகள்



## தம்பியை ஓரங்கட்டிவிட்டு மகனை மன்னனாக்கும் மகிந்தவின் கனவு!



## கடாபி தாக்குப் பிடிப்பாரா? தப்பியோடுவாரா?
































www.bmsic.com

- Residential & Commercial
- 1st & 2nd Mortgages
- ReFinance
- Debt Consolidation



# Suren Nathan AMP

## Mortgage Broker

BonaFide
Mortgage Solutions Inc.
the true freedom...




**Dir: 416.723.2204**
Office: 416.548.7475
Fax: 416.548.7496
E-Mail: suren@bmsic.com

7 Eastvale Drive, Unit 203 - Markham, ON. L3S 4N8

Debt is the Slavery of the Free. Our ambition is Your Freedom.

# புலத்தில்

தாயக தாகத்தின் குரல்

MEDIA HOUSE

முரசு 01 | 02 - 08 March 2011 | இதழ் 10


"நாம் தமிழீழப் பெண் சமூகம் மத்தியில் ஒரு பெரிய புரட்சியை நிகழ்த்தியிருக்கின்றோம். தமிழர் வரலாற்றிலேயே நடைபெறாத புரட்சி ஒன்று தமிழீழத்தில் நடைபெற்றிருக்கின்றது."



தமிழீழத் தேசியத்தலைவர் மேதகு வே.பிரபாகரன்

## அபிவிருத்திப் பணிகளில் இராணுவத்தினர் ஏன்?

# ஐரோப்பிய ஒன்றியப் பிரதிநிதிகளுக்கு புது விளக்கம் கொடுத்த யாழ். அரச அதிபர்!

(25.02.2011, வெள்ளிக்கிழமை)

சர்வாதிகாரம் நடைபெறும் நாடுகளைத் தவிர உலகின் ஏனைய ஜன நாயக முறையில் இயங்கும் நாடுகளில் அவசரகால நிலைமை ஏற்படும் காலங்களைத் தவிர ஏனைய காலங்களில் சமூக கட்டமைப்பு நிர்வாகங்களில் (சிவில் நிர்வாகம்) ஆயுதம் தரித்த இராணுவம் ஈடுபடுத்தப்படுவதில்லை. ஈடுபடுத்தவும் முடியாது.

ஆனால் கடந்த பல தசாப்தங்களாக சிறீலங்காவின் இராணுவம், இலங்கையின் சமூக நிர்வாகங்களில் முழுமையான ஆளுமையைச் செலுத்திவருகின்றது. குறிப்பாக தமிழர் தாயகப் பகுதிகளில் முழுமையான இராணுவ ஆட்சி நடைபெறுகின்ற நாட்டிற்கு ஒப்பாகவே நிர்வாக நடவடிக்கைகளில் இராணுவத்தின் முழுமையான ஆளுமை இருக்கின்றது.

கடந்த பல ஆண்டுகளாக போர் நடைபெற்ற நிலையில் போரைக் காரணம் கூறி இராணுவம் சமூக நிர்வாக நடைமுறைகளில் தலையிட்டிருந்தது. ஆனால், போர் முடிவடைந்துவிட்டதாக சிறீலங்கா அறிவித்து இன்னும் சில மாதங்களில் இரண்டு ஆண்டுகள் நிறைவடையவுள்ள நிலையில், இன்னமும் அங்கு இராணுவத்தின் முழுமையான ஆளுமையே நிலவுகின்றது.

இந்நிலையில், யாழ்.மாவட்டத்துக்கு கடந்த புதன்கிழமை பயணம் செய்த ஐரோப்பிய ஒன்றிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் குழு, மக்கள் சமூகத்தில் ஏன் இராணுவத்தினரது அதிகரித்த பிரசன்னங்கள், இராணுவத்தினர் ஏன் அபிவிருத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர் என கேள்வி எழுப்பியுள்ளனர்.

இந்தக் கேள்விக்கு யாழ் மாவட்டத்தின் ஒரு பொம்மை அதிபராகச் செயற்பட்டுக் கொண்டிருக்கும் திருமதி இமெல்டா சுகுமார் அளித்துள்ள பதில் பெரும் நகைப்பிற்கு இடமாக இருந்துள்ளது.

சிறீலங்கா இராணுவத்தினர் அபிவிருத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுவது தொடர்பாக ஐரோப்பிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் எழுப்பிய கேள்விகளுக்குப் பதிலளித்த அரச அதிபர் இமெல்டா சுகுமார், நாங்களும் அரசாங்க ஊழியர்கள். இராணுவத்தினரும் அரசாங்க ஊழியர்கள் மக்களுக்குச் சேவை...

தொடர்ச்சி 06ம் பக்கம் ...



சிறீலங்காவின் இராணுவ முற்றுகை வலயத்தில் இருந்து விடைபெற்றுச் செல்லும் அன்னை பார்வதியம்மையார்.

# இவ்வாரத்தின் சிறப்பு விலை வீடுகள்

என் ஊடாக வாங்கும் வீடுகளுக்கு (புதிய /பழைய) WARRANTY ஒழுங்கு செய்து தரப்படும்

அண்ணளவான மோட்கேஜ் கணிப்புகள் 5% Down, Calculatoon 2.3% Call more details



**$519000** — **E-Markham/N-14th Ave**

Absolutely Stunning , Excellent Layout Home In High Demand Markham Location Of Markham And 14th Av , Open Concept , Hardwoodfloors On Main Floor , 6 Parkingspaces ,Can Accomodate Large Family , Newer Renovated Kitchen In Bsmnt Apt , Closer To All Amenities Incl. Major Chain Stores And Ttc ,

Mortgage Payment 4+3 Bedroom **$1800 /m***

**OPEN HOUSE SATURDAY 3-5pm**



**$129900** — **Mornigside & Finch**

Excellent Location!! 24 Hrs Gatehouse Security,Close To School,Ttc,Malvern Town Centre,Medical Centre,Bank 401 And More. Fridge,Stove,Washer,Dryer,B/I Dishwasher,Existing Window Coverings.

Mortgage Payment 2+1 Bedroom **$450 /m***

**OPEN HOUSE SATURDAY 11-1pm**

**Weston/Armel $69,900** — Power of sale



Mortgage Payment $244 /m* 2 Bedrooms

**Weston/Albion $79,900** — Power of sale



Mortgage Payment $277 /m* 2 Bedrooms

**Kennedy & Ellesmere $92,500** — Power of sale



Mortgage Payment $318 /m* 1 Bedrooms

**Caldeonia & Lawrence $97,900** — Power of sale



Mortgage Payment $335 /m* 2 Bedrooms

**Jane & Yorkwoods $97,900** — Power of sale



Mortgage Payment $335 /m* 3 Bedrooms

**Kipling/Dixon $105,500** — Power of sale



Mortgage Payment $363 /m* 2+1 Bedrooms

**Morningside/Ellesmere $118,900** — Power of sale



Mortgage Payment $377 /m* 2+1 Bedrooms

**Finch/Jane $124,900** — Power of sale



Mortgage Payment $432 /m* 3 Bedrooms

**Morningside/ Ellesmere $126,000** — Power of sale



Mortgage Payment $436 /m* 2 Bedrooms

**Albion & Kipling $126,500** — Power of sale



Mortgage Payment $436 /m* 3 Bedrooms

**Midland/Lawrence $129,900** — Power of sale



Mortgage Payment $446/m* 3 Bedrooms

**Kennedy/Sheppard $135,900** — Power of sale



Mortgage Payment $467 /m* 3 Bedrooms

**Kipling & Steeles $141,900** — Power of sale



Mortgage Payment $488 /m* 2 Bedrooms

**Weston Rd/Sidney Belsey $238,900** — Power of sale



Mortgage Payment $824 /m* 4 Bedrooms

**Box Grove Bypass & 14th Ave $377,888** — FREE HOLD



Mortgage Payment $1305 /m* 3 Bedrooms

**Markham Rd/Highglen $419,900**



Mortgage Payment $1454 /m* 3 Bedrooms

**9th Line & 14th Avenue $439,000**



Mortgage Payment $1523 /m* 4 Bedrooms

**Markham/Steel $469,900** — Rental Income Houses



Mortgage Payment $1627 /m* 4+2 Bedrooms

**Markham/Denison $499,900**



Mortgage Payment $1727 /m* 4 Bedrooms

**Mccowan/ Highglen $525,000** — Rental Income Houses



Mortgage Payment $1818 /m* 4+3 Bedrooms

***New Houses - 0 -5yrs *Bank Power Of Sale Houses *Bansement Rental Income Houses**

**GTA யின் எப்பாகத்திலும் உங்கள் வருமானத்திற்கும், சகல தேவைகளுக்கும் ஏற்ற வீடு வேண்டுமாயின்**

என்னுடன் தொடர்பு கொண்டபின் உங்கள் முடிவை எடுங்கள்






**Home life / Future**

Realty Inc . Brokeage

**Bus: 905 -201-9977**

www.shankarhomes.com

மறைமுக கட்டணமில்லை

Dimond Awad Winner

**Shankar Manickam**

Realtor, Mortgage Advisor Certifed Home Inpection

**Cell: 416-453-6666**

Email: ravi.viphome@gmail




புலத்தில்
தாயக தாகத்தின் குரல்

# லிபியா சொல்லும் பாடமும் தமிழர் விடுதலையும்

லிபியாவில் 42 ஆண்டுகளாக கொடுங்கோல் ஆட்சி நடத்தி வரும் அதிபர் முவம்மர் கடாபிக்கு எதிராக ஜனநாயக ஆட்சியை வலியுறுத்தி அந்நாட்டின் மக்கள் போராடி வருகின்றனர். இந்த போராட்டத்தை இராணுவ பலத்தை கொண்டு கடாபி அடக்கமுனைந்திருக்கின்றார். போராட்டத்தில் குதித்துள்ள மக்களின் மீது கடாபியின் ஆதரவாளர்களும் தாக்குதலை நடத்தி வருகின்றனர். தனது நாட்டின் மக்கள் மீதே விமானத் தாக்குதலை நடத்துகின்ற அளவிற்கு கடாபியின் நிலைமை சென்றிருக்கின்றது.

கடாபியின் இந்த நடவடிக்கை உலகின் வல்லரசு நாடுகளையே சீற்றம் கொள்ள வைத்துள்ளன. சொந்த நாட்டின் மக்கள் மீதே வான் தாக்குதல் நடத்துவதா? என ஆவேசத்துடன் ‘தன் நாட்டு மக்கள் மீது கடாபிக்கு இல்லாதளவிற்கு’ உலகின் பல நாடுகள் அக்கறை எடுத்து நடவடிக்கையில் இறங்கியுள்ளன.

மக்கள் மீது குண்டு வீசும் போர் விமானங்களை சுட்டு வீழ்த்துவோம் என்று பிரித்தானியப் பிரதமர் கேமரூன் எச்சரித்துள்ளார். தாக்குதல் நடத்துவதற்கான தயார் நிலையில் அமெரிக்கா தனது போர் விமானங்களுடன் கூடிய கப்பலை மத்திய தரைக்கடலுக்கு நகர்த்தியுள்ளது.

ஐ.நா. பாதுகாப்பு சபை அவசரமாக ஒன்றுகூடி விவாதித்து கடும் நடவடிக்கை எடுத்துள்ளது. கடாபி குடும்பத்தின் சொத்துகளை முடக்கியதுடன் நின்றுவிடாது, சர்வதேச போர்க்குற்ற நீதிமன்றில் வழக்கு உள்ளிட்ட தீர்மானங்கள் ஒரு மனதாக எந்தவொரு எதிர்ப்பும் வராமல் ஐ.நா. பாதுகாப்பு சபை அவசர அவசரமாக நிறைவேறியுள்ளது.

கடாபியின் ஆட்சி முறை சரியா, பிழையா என்பதற்கும் அப்பால், லிபியா மீதான உலக நாடுகளின் நடவடிக்கைகள் குறித்தே இங்கு நாங்கள் அதிகம் அக்கறை கொள்ளவேண்டியுள்ளது.

கடந்த 42 வருட கால தனது ஆட்சியில், லிபிய மக்கள் மீது அடக்குமுறைகளை பிரயோகித்து வந்திருந்தாலும், கடந்த சில நாட்கள் மட்டுமே மக்கள் மீதான விமானத் தாக்குதலுக்கு அதிபர் கடாபி உத்தரவிட்டுள்ளார். ஒரு சில நாட்கள் மட்டுமே நடந்துள்ள தாக்குதலுக்கு உலகமே கொதிப்படைந்து போயுள்ளது. லிபியா அதிபரை ஆட்சியில் இருந்து தூக்கியெறியவும் நடவடிக்கையில் இறங்கியுள்ளன.

ஆனால், கடந்த 30 வருடங்களாக ஆட்சியில் அமர்ந்திருந்த சிறீலங்கா அரசுகள் தமிழ் மக்கள் மீது நடத்திய விமானத் தாக்குதலும், கொல்லப்பட்ட மக்களின் எண்ணிக்கையும் இன்றுவரை முழுமையாக தெரியவராதவை. சிறீலங்கா வான் படையின் தாக்குதலில் விடுதலைப் புலிகள் கொல்லப்பட்டனர் என்பதற்கும் அப்பால், நவாலித் தேவாலயம் முதல் வள்ளிபுனம் வரையான பொது மக்கள் மீதான இனப்படுகொலைக்கான ஆதாரங்கள் ஏராளமாக உள்ளன. 1983ம் ஆண்டு தொடங்கிய தமிழ் மக்கள் மீதான சிறீலங்காவின் விமானத் தாக்குதல்கள் முள்ளிவாய்க்காலில் நடத்திய பாரிய இன அழிப்புடன் நின்றுபோயுள்ளபோதும் இனிமேலும் தொடராது என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை.

வானத்தில் சாகசம் செய்து சிங்களவர்களை மகிழ்விக்கும் சிறீலங்காவின் போர் விமானங்கள், நாளையே தமிழர்களின் தலை மீது குண்டுகளைக் கொட்டலாம்.

லிபியாவில் ஒரு சில நாட்கள் நடந்த தாக்குதலுக்கே இத்தனை வேகமாக துள்ளியெழுந்த உலகமும் ஐ.நா சபையும் 30 வருடங்களாக தனது நாட்டில் உள்ள மக்கள் மீது சிறீலங்கா நடத்திய தாக்குதலுக்கு எதிராக இன்றுவரை வாய் திறக்கவில்லை. சிறீலங்காவின் மீது எந்தவொரு தடையையும் விதிப்பதற்கு ஐ.நா சபைகூட முனையவில்லை. ஆனால், அதற்கு மாறாக சிறீலங்காவுடன் ஐ.நா. பொதுச் செயலர் இரகசியச் சந்திப்புக்களை மேற்கொள்வதாக ஐ.நாவிற்குள் இருந்தே செய்திகள் கசிகின்றன. ஐ.நாவின் இந்த முரணான போக்குக் குறித்து மனித உரிமை அமைப்புக்களே குற்றம்சாட்டுகின்றன. சிறீலங்காவின் மீதான யுத்தக் குற்றச்சாட்டுக்கள் மற்றும் பல்வேறு மனித உரிமை மீறல்கள் தொடர்பில் உரிய கவனம் செலுத்தப்படாதிருப்பதாக சர்வதேச மன்னிப்புச் சபை ஐ.நா சபை மீது கடந்த வாரம்கூட குற்றம் சுமத்தியுள்ளது. ஆனாலும், இன்றுவரை ஐ.நா சிறீலங்காவின் போர்க் குற்றம் தொடர்பாக வாய்திறக்கவேயில்லை.

ஒரு கண்ணுக்கு வெண்ணையும், ஒரு கண்ணுக்கு சுண்ணாம்பும் என முரண்பட்ட சிந்தனையில் செயற்படுவதற்கு என்ன காரணம்?

அண்மையில் பிரான்சில் நடைபெற்ற நிகழ்வொன்றில் கலந்துகொண்ட ஒரு நகரபிதா, ‘லிபியா போன்ற நாடுகளில் உள்ள மக்களின் போராட்டங்களுக்கு ஆதரவு வழங்கும் உலகம், ஏன் உங்களின் நியாயமான போராட்டத்திற்கு ஆதரவு வழங்க மறுக்கின்றது என்பது புதிராகவே இருக்கின்றது. எனவே, தமிழர்கள் ஒன்றிணைந்து இன்னும் வேகமாகப் போராட வேண்டும் என்பதையே இது காட்டுவதாக’ அவர் தெரிவித்தார். எனவே, தமிழர்கள் இன்னும் அதிகமாகப் போராடவேண்டியுள்ளது. சுயநலன்களுக்கும் அப்பால், தமிழர்கள் ஒன்றிணைந்து பேரெழுச்சி கொள்ளாது போனால் உலகம் கண்டுகொள்ளாமலே போகும் என்பதே உண்மை.

# வெளிநாடுகளில் உள்ளவர்களின் விபரங்களை சேகரிக்கிறார் கோத்தபாய!

## சைபர் தாக்குதலை எதிர்கொள்ள தயாராகுமாறு சிப்பாய்களுக்கு அழைப்பு

வெளிநாட்டுத் தமிழ் மக்களின் எழுச்சியை விரைவில் அடக்குவேன் என சூழுரைத்திருந்த சிறீலங்காவின் பாதுகாப்பு செயலர் கோத்தபாய ராஜபக்ச, வெளிநாடுகளில் அரசியல் தஞ்சம் பெற்றுள்ள இலங்கையின் அரசியல் கட்சியின் பிரமுகர்கள் மற்றும் ஊடகவியலாளர்கள் ஆகியோரின் விபரங்களை திரட்டிவருவதாக நம்பகரமான தகவல்கள் தெரிவிக்கின்றன. இதனை இலங்கையில் இருந்து வெளிவரும் ஊடகங்களும் உறுதிப்படுத்தியுள்ளன.

புலம்பெயர்ந்த தமிழர்கள் வாழும் பல நாடுகளின் தூதுவராலயங்களில் இதற்காக தமது சிறப்பு புலனாய்வு அதிகாரிகளை பணிக்கு அமர்த்தியுள்ளதாகவும் அவர்கள் மூலமாகவே குறிப்பிட்டவர்களின் தகவல்கள் திரட்டப்படுவதாகவும் கூறப்படுகின்றது. இதன் முதற்கட்டமாக தற்போதைக்கு சுவிட்சர்லாந்தில் வசிக்கும் 80 பேரின் முழு விபரங்களும் அவர் வசம் சென்றிருப்பதாக உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. அதில் சிலருடைய நிழற்படங்களும் உள்ளடங்கியுள்ளன.

தற்போது புலம்பெயர்ந்த நாடுகளில் உள்ள ஊடகவியலாளர்கள் மற்றும் பிரமுகர்களை பின்தொடர்ந்து சென்று சிறீலங்காப் புலனாய்வாளர்கள் படம்பிடிப்பது அதிகரித்துள்ளதாக ஊடகவியலாளர்கள் சிலர் உறுதிப்படுத்தியுள்ளனர். பிரான்ஸ் நாட்டில் அண்மையில் வாகனத்தில் சென்றுகொண்டிருந்த ஊடகவியலாளர்கள் சிலரை பின்தொடர்ந்து வந்த வாகனம் ஒன்றில் இருந்தவர்கள், சிவப்பு விளக்கில் நின்றுகொண்டிருந்தபோது திடீரென் எதிர்பாரதவேளையில் அவர்களைப் படம்பிடித்ததுடன், பச்சை விளக்கு விழுவதற்கு முன்பாகவே அங்கிருந்து தங்கள் வாகனத்தில் தப்பிச் சென்றனர் என இந்தச் சம்பவத்தின்போது அங்கிருந்த ஊடகவியலாளர் ஒருவர் எமக்கு உறுதிப்படுத்தியுள்ளார்.

இதற்கு மேலாக அரசாங்கத்தின் உயர்பதவிகளில் இருந்துவிட்டு அரசுடன் முரண்பட்டுக் கொண்ட ஊடகவியலாளர்கள் மற்றுத் அதிகாரிகள் எந்தெந்த நாடுகளில் பதுங்கியுள்ளார்கள் என்பதை தேடிக்கண்டறியவும் விபரங்களை சேகரிக்கவும் புலனாய்வாளர்கள் களத்தில் இறக்கப்பட்டுள்ளனர் எனச் செய்திகள் தெரிவிக்கின்றன.

இந்த விபரம் சேகரிக்கும் பணிகளுக்கு சிறீலங்காவுடன் இணைந்து இயங்கும் கே.பி அணி, ஈ.பி.டி.பி அணி மற்றும் உதிரி தமிழ் ஒட்டுக்குழுக்களின் வெளிநாட்டில் உள்ள பிரதிநிதிகளும் அவர்களுடன் வெளிநாட்டவர்களும் அமர்த்தப்பட்டுள்ளதாக தெரியவருகின்றது.

இதுஇவ்வாறிருக்க, விடுதலைப் புலிகளின் ஆதரவாளர்கள் மற்றும் சிறீலங்காவிற்கு எதிரான சக்திகளிடமிருந்து தனது இணைய வெளியை பாதுகாப்பதற்கு இணைய சிப்பாய்கள் தேவைப்படுவதாக சிறீலங்கா இராணுவத் தளபதி லெப். ஜெனரல் ஜகத் ஜயசூரிய கூறியுள்ளார். கொழும்பில் கடந்த 22ம் திகதி செவ்வாய்கிழமை நடைபெற்ற இணைய வெளி யுத்தம் தொடர்பான கருத்தரங்கொன்றில் உரையாற்றுகையிலேயே அவர் இவ்வாறு தெரிவித்தார்.

இணைய தடயவியல் என்பது மிகக் கடினமானதாகும். ஆனால் தேசிய மற்றும் நிறுவன ரீதியில் உயர்தரமான இணைய தடயவியல் பொறிமுறையைக் கொண்டிருப்பது மிக அவசியம். இந்த நோக்கத்திற்காகவும் இணைய பாதுகாப்பை உறுதிப்படுத்தவும் இணைய யுத்தத்தை எதிர்கொள்ளவும் இணைய சிப்பாய்கள் தேவை என அவர் தெரிவித்தார். இராணுவத்தின் மனிதாபிமான நடவடிக்கையின்போது இராணுவத்தின் இணையத்தளமும் தாக்குதலுக்கு இலக்கானது. தற்போது கூட எமது இணையத்தளத்தில் ஊடுருவி தாக்குவதற்கு தொடர்ச்சியான முயற்சிகள் நடைபெறுகின்றன. இதுவரை எமது இணையத் தளத்தை நாம் வெற்றிகரமாக பாதுகாத்து வந்துள்ளோம் என இராணுவத் தளபதி மேலும் கூறியுள்ளார்.

30 வருட கால பௌதிக ரீதியான யுத்தத்தில் நாம் வென்றுள்ளோம். ஆனால் பயங்கரவாதிகளை நாட்டில் இருந்து ஒழித்ததால் ஆயுதங்கள் முடிவுக்கு வரவில்லை. நாமும் முழு உலகமும் பௌதிக ரீதியான யுத்தம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் இணைய யுத்தம் எனும் யுத்தத்திற்கு முகம் கொடுத்துள்ளோம். பொய்யான பிரசாரங்களை மேற்கொள்ளும் புலிகளின் ஆதரவு இணையத் தளங்களைப் பார்வையிடுவோர் இப்போது கூட இலட்சக் கணக்காக இருக்கலாம். இவற்றை வாசிப்பவர்கள் இந்த நாட்டை பயங்கரமானதாக பார்க்கின்றனர். இப்போது சிறீலங்கா மீது எவரும் பௌதிக யுத்தமொன்றை நடத்த முடியாது. ஆனால் இணைய வெளி மீது தாக்குதல்களை நடத்த வாய்ப்புகள் உள்ளன எனவும் இராணுவத் தளபதி லெப். ஜெனரல் ஜகத் ஜயசூரிய மேலும் தெரிவித்தார்.

# மனித உரிமையாளர்கள் மீது திட்டமிட்ட பிரச்சாரம்

## உண்மையான ஊடகவியலுக்கு ஏற்படுத்தும் கேவலமாகும்!

- ச.வி.கிருபாகரன்

மனித உரிமையாளர்கள் மீது திட்டமிட்ட பிரச்சாரம் உண்மையான ஊடகவியலுக்கு ஏற்படுத்தும் கேவலாமாகும் என பிரான்ஸ் மனித உரிமைகள் மையத்தின் பொதுச் செயலர் விசுவலிங்கம் கிருபாகரன் தெரிவித்துள்ளார். அண்மைக்காலமாக மிகவும் திட்டமிட்ட ரீதியில் அவரையும் வேறு சிலரையும் பெயர் குறிப்பிட்டு வெளியிட்டுவரும் செய்திகள் தொடர்பாக பதிலளிக்கும் முகமாக இந்த அறிக்கையை அவர் கடந்த 24ம் திகதி வெளியிட்டுள்ளார்.

அதில் அவர் கூறியுள்ளதாவது, மிக அண்மைகாலங்களில் சிறீலங்காவின் உள்நாட்டு சிங்களப் பத்திரிகையான ‘திவயின’ விலும், வெளிநாடுகளில் சில இணையதளங்களிலும், சில மனித உரிமையாளர்கள் ‘இன்ரர்போல்’ நிறுவனத்தினால் தேடப்படுவதாகவும் சில கட்டுரைகளும் செய்திகளும், வெளியாகியிருந்தன. ஆனால் சர்வதேச போர்குற்றத்தில் ஈடுபட்ட சில சிறீலங்கா அரசின் உத்தியோகத்தர்கள் பற்றிய செய்திகளை இதே பத்திரிகையும் இணைய தளங்களும் முடிமறைந்து செய்திகளை வெளியிடுகின்றன.

இப்படியான பொய்யான பிரச்சார செய்திகளை வெளியிடுவதன் மூலம் தமது பத்திரிகைகளுக்கும், ஏற்கனவே தரம் அற்ற இணைய தளங்களுக்கும், தாம் எவ்வளவு கேவலமான நிலையை உருவாக்குகிறோம் என்பதனை இவர்கள் அறியாதாது மிகவும் கவலைக்குரியது.

சிறீலங்கா அரசிற்கு வக்காலத்து வாங்கும் இப் பத்திரிகைகளும், வெளிநாட்டில் இயங்கும் சில இணைய தளங்களும், தமக்கு கைதேர்ந்த இழிவான செயல்கள் மூலம் தமது ஏஜமான்கள் யார் என்பதை காண்பிப்பது மட்டுமல்லாது, சர்வதேச விடயங்களில் தமது மட்டுப்படுத்தப்பட்ட அல்லது அறவே தமக்கு எந்த அறிவும் இல்லை என்பதை வெளிப்படுத்துகிறார்கள். இவர்கள் உண்மையில் ‘இன்ரர்போல்’ என்ற சொற்பதத்தையே உச்சரிக்கவோ, அல்லது அது பற்றிய எந்த அறிவும் அற்றவர்கள்.

சிறீலங்கா ஜனாதிபதியும், வெளிநாட்டு அமைச்சரும், சர்வதேச அரங்குகளில் உரையாற்றும் வேளைகளில், பல் இன சமூதாயம் கொண்ட அமைப்பை தாம் உருவாக்க முன்வருவதாக கூறிக்கொள்ளும் அதேவேளை, இப்படியான கீழ்தரமான செயற்பாடுகளுக்கு இவர்களது மறைமுக ஆதரவு, சிறீலங்க அரசின் உண்மை நிலைப்பாட்டை உலகுக்கு பறை சாற்றுகிறது.

மிக அபாண்டமான பொய்யான பிராச்சரத்தை மேற்கொள்ளும் இப்பத்திரிகைகளும், இணையதளங்களும் மனித உரிமையாளர்களை ஓரம் கட்ட முனையும் அதேவேளை, சிறீலங்கா அரசின் மனித உரிமை மீறல்கள் பற்றிய உண்மையான தகவல்கள் சர்வதேச ரீதியாக வெளிவராது தடுக்கவும் முனைகிறார்கள். சிறீலங்கா அரசும் அதனது கபடமான ஊழியர்களும், காடையர்களும் தொடர்ந்து எம்மை பயமுறுத்தினாலும், எமது உயிரை பணயம் வைத்து தொடர்ந்து சிறீலங்காவின் உண்மை நிலைகளை வெளியில் தொடர்ந்து கொண்டுவருவோம் என்பதை இதன் மூலம் அறிவிக்க விரும்புகின்றேன்.

(10ம் பக்கம் பார்க்க)




புலத்தில்

தொடர்புகளுக்கு:

**Pulathil Weekly**

e.mail: pulathilcanada@gmail.com
P.O.Box # 4068, 1235 Mc Cowan Rd,
Scarborough, ON, M1H OA4

**416 418 0822**

Redacteur: K. Jeisanthar
Editor in chief: K. Jeisanthar
ஆசிரியர்: கி.ஜெய்சந்தர்
உதவிஆசிரியர்: தெ.புனிதன்
நிர்வாகி: D.P.ஜெயா

ஆலோசனைக் குழு:
தேவசபாபதி ரூபனராம்
வரதராஜன்
திருநாவுக்கரசு

விளம்பரம்:
ஈசன் குலசேகரம்
416 418 0822

விநியோகம்:
சின்னவன்
குகன்
கலை
ராகவன்
ஜெயம்
அகிலன்
வரதன்
அன்ரன்
வினோ
ஜீவன்
அரி
குமார்
பரா
தவம்
குலம்
தர்மசீலன்
திரு
நாதன்
கோபி
ரூபன்
சிவா
அருள்
சந்திரன்

**தலைமைப் பணியகம்**
அனைத்து தொடர்புகளுக்கும்:
MAISON DES MEDIAS
22, Rue Perdonnet,
75010 Paris, France
Tel: 00 33 1 40 05 95 15
Fax: 00 33 1 40 05 95 16
இணையத்தளம்
www.eelamurazu.com
ஆசிரியர்பீட தொடர்புகளுக்கு:
E.Mail-eelamurazu@gmail.com
விளம்பர விநியோக தொடர்புகட்கு:
E.Mail-eelamurazuadm@gmail.com

**ஏனைய பதிப்புகள்**
**பிரித்தானியா:**
Eelamurasu Weekly
078 8679 0198
MOHAN

**அவுஸ்திரேலியா:**
Eelamurasu
P.O.Box 80, Kingsville
Victoria 3012
Australia

**குறிப்பு:**
இவ்விதழில் பிரசுரிக்கப்படும் விளம்பரங்களுக்கு அந்தந்த விளம்பரதாரர்களே பொறுப்பு. இவ்விதழில் வெளிவரும் ஆக்கங்களை மறுபதிப்புச் செய்பவர்கள் முன்னனுமதி பெறவேண்டும்.


# அபிவிருத்திப் பணிகளில் இராணுவத்தினர்...

செய்யவேண்டிய கடப்பாடு இருப்பதனால் அவர்கள் தமது திட்ட நடைமுறைகளைத் தமக்கு ஏற்றவாறு நடைமுறைப்படுத்துகின்றனர் என்றார்.

யாழ்.மாவட்டத்துக்கு சென்ற ஐரோப்பிய ஒன்றிய நாடாளுமன்ற உறுப்பினர்கள், யாழ். மாவட்ட செயலகத்தில் அரச அதிபருடன் கலந்துரையாடினர். அந்தச் சந்தர்ப்பத்திலேயே இந்தக் கேள்விகள் எழுந்தன. தற்போதைய யாழ். மாவட்டத்தின் நிலைமை தொடர்பாக ஆராய்வதற்காகவே மேற்படி 14 பேர் கொண்ட குழுவினர் அங்கு சென்றிருந்தனர்.

அரச அதிபருடன் குழுவினர் கலந்துரையாடிய வேளையில் யாழ்.மாவட்டத்தில் மேற்கொள்ளப்பட்டு வருகின்ற அபிவிருத்திப் பணிகள் தொடர்பிலும், மேற்கொள்ளப்பட்ட அபிவிருத்தி நடவடிக்கைகள் தொடர்பிலும் கேட்டறிந்துகொண்டனர். அத்துடன் இதுவரை மக்கள் மீளக்குடியமர்த்தப்பட்டமை தொடர்பான விவரங்களையும் அவர்கள் கேட்டறிந்துகொண்டனர். மேற்கொள்ளப்படவிருக்கும் அபிவிருத்தித் திட்டங்களுக்குத் தேவையான நிதிகள் தொடர்பிலும் கலந்துரையாடப்பட்டுள்ளது.

மக்களை மீள்குடியமர்த்தும் நடவடிக்கைகள் மந்தமான கண்ணிவெடி அகற்றலினால் தாமதமடைவதாகவும், கண்ணிவெடி அகற்றுவதற்குப் போதிய ஆளணி மற்றும் நிதிவளம் இல்லையெனவும் அரச அதிபர் அவர்களிடம் காரணம் கூறியுள்ளார்.

ஆனால், மக்களுக்கு வாழ்வாதார உதவிகள் வழங்கப்பட்டபோதும் மக்களின் வருமான மட்டம் அதிகரிக்கவில்லை என்று ஐரோப்பிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் பதில் கேள்வியெழுப்பினர். இதற்குப் பதிலளித்த அரச அதிபர் 'மக்களுக்கான வாழ்வாதார உதவிகள் வழங்கப்பட்டபோதும்`` ஏனைய உட்கட்டுமான வசதிகள் விருத்தியடையவில்லை. வீதிகள் திருத்தப்படவில்லை. அவற்றைவிட உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைச் சந்தைப்படுத்துவதற்கான வாய்ப்புக்கள் குறைவாகவே உள்ளது என்று பதிலளித்தார்.

ஏனைய பகுதிகளையும் விட யாழ். மாவட்டத்துக்கு எவ்வாறு அதிக நிதி கிடைக்கின்றது என்று எழுப்பப்பட்ட கேள்விக்குப் பதிலளித்த அரச அதிபர், தமது பிரதேசத்தில் தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் மூலம் அதிகளவான அபிவிருத்திப் பணிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அத்துடன் உலக வங்கி, ஆசிய அபிவிருத்தி வங்கி என்பன கடனுதவிகளை வழங்கிவருகின்றன என்றார். உள்ளூராட்சிச் சபைத் தேர்தல் ஏன் ஒத்திவைக்கப்பட்டுள்ளது என்பது தொடர்பாக ஐரோப்பிய நாடாளுமன்ற உறுப்பினர்களால் எழுப்பப்பட்ட கேள்விகளுக்கு பதிலளிக்கையில், இது தேர்தல் ஆணையாளரால் எடுக்கப்பட்ட முடிவு. இது தொடர்பில் என்னால் ஒன்றும் கூறமுடியாது என்றார். இந்தக் கலந்துரையாடலில் அரச அதிபர் திருமதி இமெல்டா சுகுமார் யாழ்.மாவட்ட செயலகத் திட்டமிடல் கிளையைச் சேர்ந்த பிரதித் திட்டமிடல் பணிப்பாளர் திருமதி இ.மோகனேஸ்வரன், ஐரோப்பிய நாடாளுமன்றக் குழு சார்பில் தலைமையாளராக திருமதி ஜோன் லம்பேட், ஜோன் அர்ராட் மொன்ரல்ரோ, தோமஸ் மான், லிடா ஜோனா, நிக்கோலா ரிஷாட்டி, சிலாலி, நிராஜ் டேல் ஆகியோர் கலந்துகொண்டனர்.

இதற்கிடையே, இலங்கையில் இடம்பெற்ற போர்க்குற்றம் தொடர்பில் தாம் பெரிதாக கருத்துக்களை முன்வைக்க முயற்சிக்கவில்லை என ஐரோப்பிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் குழுவின் தலைவர் திருமதி ஜோன் லெம்பர்ட் தெரிவித்துள்ளார்.

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தை தமது தீவிரவாத அமைப்புக்களின் பட்டியலில் ஐரோப்பிய ஒன்றியம் தொடர்ந்து வைத்துள்ளது. ஐரோப்பிய ஒன்றியத்தின் விதிமுறைகளின் 2011ம் ஆண்டு ஜனவரி 31ன் 83/2011 ஆம் இலக்க சட்டத்தின் படி இந்த அறிவிப்பு விடுக்கப்பட்டுள்ளது. மேலும், ஐரோப்பிய ஒன்றியத்தின் தீவிரவாத பட்டியலில் 26 அமைப்புக்கள் உள்ளடக்கப்பட்டுள்ளதாகவும் தமது உறுப்பு நாடுகளில் இத்தீவிரவாத அமைப்புக்களின் நடவடிக்கைகள் முடக்கப்படும் எனவும் ஐரோப்பிய ஒன்றியம் தெரிவித்துள்ளது. சமாதானப் பேச்சுக்களில் விடுதலைப் புலிகள் ஈடுபட்டுக்கொண்டிருந்த 2006ம் ஆண்டு மே மாதத்தில் வெளியிட்ட பட்டியலில் விடுதலைப் புலிகள் அமைப்பின் பெயர் முதல் முறையாக இடம்பெற்றது குறிப்பிடத்தக்கது.

இதேவேளை, ஐரோப்பிய ஒன்றியத்தின் விடுதலைப் புலிகள் மீதான தடைக்கெதிரான சட்ட நகர்வு சட்டவல்லுனர் விக்ரர் கொபே ஊடாக முன்னெடுக்கப்பட்டுள்ளது. சுவிஸ் ஈழத்தமிழர் அவை

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மீதான தடைக்கு எதிராக லக்சம்பேர்க்கில் அமைந்திருக்கும் ஐரோப்பிய நீதிமன்றில் வழக்கு தாக்கல் செய்வதற்க்கான வேலைத்திட்டத்தை ஆரம்பித்திருப்பதாக நெதர்லாந்து நாட்டைச் சேர்ந்த பிரபல வழக்கறிஞரான விக்ரர் கொப் தமிழ்நெற் செய்தித் தளத்திற்கு அண்மையில் வழங்கிய பேட்டியில் தெரிவித்திருந்தார்.

விக்ரர் கொபேயை இந்த வழக்கிற்கான சட்ட ஆய்வில் ஈடுபடுத்தியிருக்கும் சுவிஸ் ஈழத் தமிழர் அவையின் பேச்சாளர்களில் ஒருவரான அருள்நிதிலா தெய்வேந்திரன், இந்த சட்ட நகர்வு பற்றி தெரிவிக்கையில், 'ஈழத்தமிழர்களின் தனித்துவமான தேசியத்தை அங்கீகரிக்கக் கோருவோரையும் ஈழத்தமிழர்களின் இறைமை பற்றி குரல் எழுப்புவோரையும் ஐரோப்பிய ஒன்றிய நாடுகளில் சட்டத்தை மீறும் குற்றவாளிகள் போல அணுகப்படும் நிலைமை தொடர்வதனால், தமிழீழ விடுதலைப் புலிகள் மீதான தடையை சட்ட ரீதியாக முகங்கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது' எனத் தெரிவித்தார்.

பிரபல சட்ட வல்லுநர்களை மாத்திரம் வேலைக்கு அமர்த்தி சவால்களை எதிர்கொள்ளும் சட்ட அணுகு முறையை விடவும் தமிழர்களான நாமே குறித்த சட்டச் சவால்களை ஆராய்ந்து அணுகும் ஒரு முறையை வகுத்துள்ளதாகவும் தெரிவித்தார். இதன்படி, சட்ட விவகாரங்களில் தம்மை முழுமையாக ஈடுபடுத்தி, அவற்றின் நுட்பங்களை அலசி ஆராய்ந்து, சிறீலங்கா அரசின் இன அழிப்புக்கெதிரான சட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டுவரும் ஆற்றல் கொண்ட இரண்டாம் தலைமுறையின் ஒரு ச்ர்வதேச முன்னெடுப்பு கருக்கொண்டுள்ளது என்றார்.

தம்மிடம் சர்வதேச ரீதியான தெளிவான சட்ட நடவடிக்கைகளுக்கான தெரு வரைபு (ரோட் மப்) உருவாக்கம் பெற்றுள்ளதாகவும் கருத்து வெளியிட்டார். 'சவால்களை முகம் கொடுக்கும்போது தான் எமது திறமையும் கூர்ப்படைகிறது' என்று தெரிவித்த அவர், புலம்பெயர் சூழலில் தமிழீழ வாக்கெடுப்பிற்குப் பின்னர் அனைவரும் ஒன்றாய் நின்று செயற்படுவதற்கு இரண்டாம் தலைமுறையின் அறிவு ரீதியான முன்னெடுப்பாக இந்த முன்னெடுப்பு அமைவதாகவும் கூறினார். போர்க்குற்றம், இன அழிப்பு, சமாதானத்துக்கு எதிரான குற்றங்கள், ஈழத் தமிழரின் இறைமையை நிறுவுவதற்கான நகர்வுகள், தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு எதிரான தடை என்ற போர்வையில் தொடர்ந்தும் மறுக்கப்படும் ஜனநாயக உரிமைகளை எதிர்கொண்டே ஆகவேண்டியதன் அவசியம் போன்ற அனைத்து சட்ட விடயங்களும் எழுந்தமானமான முறையில் அன்றி தெளிவாக



வகுக்கப்படுகின்ற வேலைத்திட்டமாக ஒருங்கிணைக்கப்பட்டு பரிணமித்துள்ளதாக சட்ட நடவடிக்கையில் ஈடுபடுவோர் மேலும் தெரிவித்தனர்.

இதுஇவ்வாறிருக்க, வெள்ளைக் கொடியுடன் சென்ற போராளிகளை படுகொலை செய்தது தொடர்பில் ஐ.நா.வுக்கான சிறீலங்காவின் நிரந்தர வதிவிடப் பிரதிநிதி கலாநிதி பாலித கோஹணவுக்கு எதிராக சர்வதேச குற்றவியல் நீதிமன்றத்தில் வழக்கு தாக்கல் செய்யப்பட்டுள்ளது. புலம்பெயர் அமைப்புகளால் தாக்கல்செய்யப்பட்டுள்ள இந்த வழக்கில், வடக்கில் இடம்பெற்ற இறுதிக்கட்ட யுத்தத்தின் போது அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் இடையில் பாலித கோஹண மத்தியஸ்தராக செயற்பட்டார் என்றும் இவரது உத்தரவாதத்தின் பேரிலேயே புலிகளின் பிரமுகர்கள் வெள்ளைக்கொடியுடன் வந்தார்கள் எனவும், அவர்கள் கொல்லப்படுவதற்கு பாலித கோஹண தான் காரணம் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.

அதேவேளை, ஹேக் கில் அமைந்துள்ள சர்வதேச குற்றவியல் நீதிமன்றத்திற்கு சிறீலங்காப் பிரசையை விசாரணை செய்யும் அதிகாரம் இல்லையாகினும், பாலித கோஹண அவுஸ்திரேலிய குடியுரிமை பெற்றவர் என்பதால் அவரை விசாரிக்க முடியும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

ஆனால் இதனை அசட்டை செய்துள்ள பாலித ஹோகன, விடுதலைப் புலி ஆதரவாளர்களின் போர்க் குற்றச்சாட்டுகளுக்கு பதிலளிக்கப் போவதில்லையயன தெரிவித்துள்ளார். ஊடகங்களின் கவனத்தை ஈர்க்கும் நோக்கில் சில விடுதலைப் புலி ஆதரவாளர்கள் தம்மீது குற்றச்சாட்டுக்களை சுமத்தி வருவதாகவும் அவர் கூறியுள்ளார்.

# ஈழத்தாயின் மரணம் எமக்கு உணர்த்திச் சென்ற செய்திகள்

**- வேல்ஸ் இல் இருந்து அருஷ்**

> 2009 ஆம் ஆண்டு முள்ளிவாய்க்காவில் இருந்து விடுதலைப் புலிகளின் கடற்புலிகளின் தளபதி கேணல் சூசை அவர்கள் விடுத்த இறுதி உரையும் அதனைத்தான் சுட்டிக்காட்டி நிற்கின்றது. அந்த உரையை அவர் விடுத்தபோது கடலில் வைத்து அவரின் மனைவி, பிள்ளைகள் கைது செய்யப்பட்டு, திருமலை சிறீலங்கா கடற்படைத்தளத்தில் தடுத்து வைக்கப்பட்டிருந்தனர். ஆனால் தனது குடும்பத்தின் அவலத்தை சூசை அவர்கள் கருத்தில் எடுக்கவில்லை. அவர்கள் சிறீலங்கா கடற்படையின் கைகளில் சிக்கியபோதும், அவர் அடிபணிவு அரசியலை கையில் எடுக்கவில்லை. தனது குடும்பத்தின் அவலத்தை முன்நிறுத்தவில்லை.

தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்களின் தாயார் திருமதி வேலுப்பிள்ளை பார்வதி அம்மாளின் மறைவு ஈழத்தமிழ் மக்களை மீண்டும் ஒரு துயரத்திற்குள் தள்ளியுள்ளது.

பல தசாப்தங்களாக சிங்கள அரசுகளின் அடக்குமுறைக்குள் வாழ்ந்த ஈழத்தமிழ் மக்கள் தமது உரிமைக்காக பேராடுவதற்கு துணிச்சலும், தன்னம்பிக்கையும், விவேகமும், படைத்துறை நிபுணத்துவமும், அசைக்கமுடியாத இனப்பற்றும் கொண்ட ஒரு தலைவனை தமிழ் இனத்திற்கு தந்தது



மட்டுமல்லாது, அவர் வரித்துக்கொண்ட இலட்சியத்திற்காக தனது வாழ்க்கையை அர்ப்பணித்திருந்தார் ஈழத்தாய் பார்வதி அம்மா.

ஆதற்கு சிறு உதாரணமாக ஒரு சம்பவத்தை இங்கு குறிப்பிடலாம். 1970களில் விடுதலைப் புலிகளின் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் கெரில்லா போராளியாக தனது வாழ்க்கையை ஆரம்பித்தபோது, அவரை வந்து சந்தித்திருந்தார் ரெலோ அமைப்பின் முன்னாள் தலைவர் சிறீசபாரத்தினம். தனது வீட்டுக்கு கூட்டிவந்த சிறீசபாரத்தினத்திற்கு உணவு அளித்து மீண்டும் அவரின் இடத்தில் விட்டுவிட்டு வேறு பணிக்காக புறப்பட்டிருந்தார் பிரபாகரன்.

ஆனால் சிறீலங்கா காவல்துறையினரின் கைகளில் சிக்கிய சபாரத்தினம், வேலுப்பிள்ளை பிரபாகரனின் இல்லத்திற்கு, சாதாரன உடை அணிந்த சிறீலங்கா காவல் துறையினரின் புலனாய்வுப் பிரிவினருடன் சென்றிருந்தார். அந்தசமயம் பிரபாகரன் வீட்டில் இல்லாததால் அவர்களின் நோக்கம் நிறைவேறவில்லை.

ஆனால் சபாரத்தினத்தின் மூலம் பெற்றுக்கொண்ட தகவல்களைக்கொண்டு, மறுநாள் அதிகாலை வீட்டை முற்றுகையிட்டு பிரபாகரனை கைது செய்வது என்பதே காவல்துறையினரின் திட்டமாக இருந்தது. இயக்கத்தின் பணிகளை முடித்துவிட்டு மாலை வேளையில் வீட்டுக்கு திரும்பிய பிரபாகரனுக்கு பார்வதி அம்மா நடந்தவற்றை விளக்கினார்.

ஒருமுறை தான் பார்த்தாலும் சிறீசபாரத்தினத்தை அவர் தெளிவாக இனம் கண்டிருந்தார். அவருடன் வந்தவரின் குட்டையான தலைமயிரின் தோற்றத்தை கொண்டு அவர் சிறீலங்கா காவல்துறையை சேர்ந்தவராக இருக்கலாம் எனவும் அவர் கணிப்பிட்டிருந்தார். பிரபாகரனின் கேள்விகளுக்கு சளைக்காது தகவல்களை வழங்கிய அம்மாவின் மதிநுட்பம் பிரபாகரனை அன்று இரவு துாங்காது எச்சரிக்கை நிலையில் வைத்திருக்க உதவியது.

அவர்கள் எதிர்பார்த்தது போலவே அதிகாலையின் அமைதியை குலைத்தது சிறீலங்கா காவல்துறையினரின் ஜீப் வண்டியின் சத்தம். ஜீப் வண்டி பிரபாகரனின் வீட்டு வாசலில் நிற்பதற்கு முன்பாகவே வீட்டின் பின்வழியாக தப்பித்துவிட்டார் வேலுப்பிள்ளை பிரபாகரன். இவ்வாறு ஆரம்பகாலம் தொட்டே தனது மகனின் விடுதலைப் போராட்டத்திற்கு ஆதரவுகளை வழங்கிய பார்வதியம்மா, வன்னியில் நடைபெற்ற போரில் ஈழத்தமிழ் மக்கள் பட்ட துன்பங்களை தானும் சுமந்திருந்தார்.

பனாங்கொட இராணுவமுகாமில், பல மாதங்கள் தடுத்துவைக்கப்பட்டு துன்புறுத்தலுக்கும், அவமானத்திற்கும் உள்ளாகிய அவர், தனது இனத்தின் உரிமைக்கான இலட்சியத்தை இழக்கவில்லை. மாதந்தை திருவேங்கடம் வேலுப்பிள்ளையின் இழப்பிற்கு பின்னர் பார்வதியம்மா விடுவிக்கப்பட்டபோதும், அவர் நோயுடன் போராடிக்கொண்டிருந்தார்.

சிறீலங்கா அரசின் புறக்கணிப்புக்கும், அவமதிப்புக்கும் உள்ளாகிய தயார், இந்தியா சென்று மருத்துவ சிகிச்சையை பெறமுனைந்தபோது, அதனை நிராகரித்தன இந்திய மற்றும் தமிழக அரசுகள். விமான நிலையத்தில் வைத்து அவரை திருப்பி அனுப்பி அவமரியாதை செய்திருந்தார் தமிழக முதல்வர் கருணாநிதி.

பின்னர் தமிழக முதல்வரின் மனிதாபிமானற்ற தன்மையை இந்திய நீதிமன்றம் மூலம் நிரூபித்திருந்தனர் தமிழ் உணர்வாளர்கள். நீதிமன்ற உத்தரவால் அச்சமடைந்த கருணாநிதி, தனது அரசியல் நலனுக்காக பார்வதி அம்மாவை அழைத்தபோது, அதனை நிராகரித்து மரணத்தை விட தமிழ் மக்களின் உரிமையும், மானமும் பெரிதானது என நிரூபித்திருந்தார் பார்வதி அம்மா அவர்கள்.

உரிய சிகிச்சை அளிக்காதுவிட்டால் தனது உயிர்வாழும் காலம் குறைந்துவிடும் என்று தெரிந்தும், மக்களோடு மக்களாக, தனது சொந்த ஊரில் உள்ள வசதிகள் குறைந்த மருத்துவமனையில் கிடைக்கும் சிகிச்சையை பெற்று, தனது உயிரை தியாகம் செய்துள்ளார் அம்மா.

விடுதலைப் போராளிகளின் வாழ்வில் தியாகங்கள் தான் முதன்மையானவை. தியாகத்தையும், அர்ப்பணிப்பையும், இலட்சிய உறுதியையும் கொண்டவர்கள் போராளியாகின்றனர். அதில் இருந்து தவறி அற்பசலுகைகளுக்கு அடிமையாகின்றவர்கள் ஒட்டுக்குழுக்களாகின்றனர். இரண்டுக்கும் இடையிலான இடைவெளி மிகவும் குறைவானவை.

இன்று அவலம், அவலம் என கூக்குரல் போட்டு போராட்டத்தின் இலட்சியத்தை மழுங்கடிக்க நினைப்பவர்களுக்கு பார்வதியம்மாவின் இறுதிக்கால வாழ்க்கை மிகவும் முக்கியமாக பாடத்தை விட்டுச் சென்றுள்ளது. நோயின் துன்பத்தில் (அவலத்தில்) இருந்து விடுபடுவதற்கு கருணாநிதி போட்ட அரசியல் பிச்சையை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை.

விடுதலைப் போராளிகளுக்கு அவர்களின் இலட்சியத்தின் முன், அவர்கள் அனுபவிக்கும் அவலங்கள் ஒன்றும் பெரிதல்ல. 2009 ஆம் ஆண்டு முள்ளிவாய்காலில் இருந்து விடுதலைப் புலிகளின் கடற்புலிகளின் தளபதி கேணல் சூசை அவர்கள் விடுத்த இறுதி உரையும் அதனை தான் சுட்டிக்காட்டி நிற்கின்றது.

அந்த உரையை அவர் விடுத்தபோது கடலில் வைத்து அவரின் மனைவி, பிள்ளைகள் கைது செய்யப்பட்டு, திருமலை சிறீலங்கா கடற்படைத்தளத்தில் தடுத்து வைக்கப்பட்டிருந்தனர்.

ஆனால் சூசையின் குரல் தெளிவாகவே ஒலித்தது, போராடுங்கள், தொடர்ந்து போராடுங்கள். எமது நிலை தொடர்பில் நீங்கள் கவலை கொள்ளவேண்டாம் என அவர் தெரிவித்த இறுதி வாசகங்கள் இன்றும் காதுகளில் ஒலிக்கின்றன. தனது குடும்பத்தின் அவலத்தை சூசை அவர்கள் கருத்தில் எடுக்கவில்லை. அவர்கள் சிறீலங்கா கடற்படையின் கைகளில் சிக்கியபோதும், அவர் அடிபணிவு அரசியலை கையில் எடுக்கவில்லை. தனது குடும்பத்தின் அவலத்தை முன்நிறுத்தவில்லை.

மாறாக தமிழகத்தில், நாம் தமிழர் கட்சி அலுவலகத்தில் இருந்து தேம்பி அழுத தம்பிக்கும் தமிழர்கள் தமது உரிமைக்காக போராடவேண்டிய திசை நோக்கி கையை காண்பித்திருந்தார். அவலம் என்பது விடுதலைப் போராளிகளுக்கு மட்டுமானதல்ல, அவர்களின் உறவுகளுக்கும் தான். ஏன் அது உரிமைக்காக போராடும் மக்களுக்கும் சொந்தமானது தான்.

இரண்டு மில்லியன் மக்களை பறிகொடுத்த தென் சூடான் இன்று சுதந்திரக் காற்றை சுவாசிக்கின்றது. ஈழத்தில் சிறிய தொகையை கொண்ட நாமும் எமது உரிமைக்கான போரில் ஏறத்தாள இரண்டு இலட்சம் மக்களை இழந்துவிட்டோம்.

ஆனால் இந்த இழப்பினால் நாம் பெற்றுக்கொண்ட நகர்வுகள் முக்கியமானவை. அவை தற்போது ஐக்கிய நாடுகள் சபையில் இருந்து உலகின் முக்கிய நாடுகளின் வாசல் கதவுகளை தட்டுகின்றன.

ஒடுக்கப்படும், இனஅழிப்புக்கு உள்ளாகும் ஒரு இனமாக எமது இனத்தை உலகம் பார்க்கும் நிலையை இந்த இழப்புக்கள் எமக்கு ஏற்படுத்தி தந்துள்ளன. எனவே இனிவரும் காலத்தில் எமது உரிமைக்கான போரை நகர்த்துவது மிகவும் இலகுவானது. தமிழ் மக்களின் விடுதலைப் போர் அழிக்கப்பட்டுவிட்டதாக சிறீலங்கா அரசு மார்தட்டும்போதும், விட்ட இடத்தில் இருந்து போரை பல வடிவங்களின் ஊடாக நகர்த்தும் பாதைகளை விடுதலைப் புலிகள் எமக்கு ஏற்படுத்தி கொடுத்துள்ளார்கள்.

சிறீலங்கா அரசுக்கு துணைபோகிறவர்கள் கூறுவது போல விடுதலைப் புலிகளின் வரலாற்றை அழித்துவிட்டு புதிதாக போராட்டத்தை ஆரம்பிக்கவேண்டிய தேவை தமிழ் இனத்திற்கு இல்லை. முள்ளிவாய்க்காலின் தொடர்ச்சியாகவே எமது விடுதலைப் போர் தொடரப்போகின்றது.

அது விடுதலைப் புலிகளின் வரலாற்றுடன் தான் நகரும். அதனைத் தான் விடுதலைப் புலிகளின் அரசியல் பிரிவுத் தலைவர் திரு பா.நடேசன் அவர்களும் தெரிவித்திருந்தார். அதாவது 'விடுதலைப் புலிகளுக்கு பின்னரான காலம் என்பது ஒன்று இல்லை' என்று.

எமது இனத்திற்கு ஒரு உன்னதமான போராளியை, தலைவரை தந்த தாயின் மரணத்தின்போது அணிதிரண்ட உலகத்தமிழ் மக்களின் எழுச்சிகளும் அதனைத் தான் மீண்டும், மீண்டும் எமக்கு உணர்த்தி நிற்கின்றன.



### கடற்றொழிலாளர்களுக்கு செல்பேசிச் சமிஞ்சை

தமிழ்நாடு கடற்றொழிலாளர்கள் இலங்கைக் கடற்பரப்புக்குள் நுழைவதைத் தடுக்கும் வகையில், செல்பேசிச் சமிஞ்சை சேவையை அவர்களுக்கு வழங்குவது பற்றி இந்தியா ஆராய்ந்து வருகின்றது. இதற்கென இந்திய கப்பல்துறை அமைச்சு, வைஸ் அட்மிரல் பி.ஆர்.ராவோ தலைமையில் குழுவொன்றை அமைத்து ஆராய்ந்து வருகின்றது. கடற்றொழிலாளர்கள் ஜி.பி.எஸ் கருவிகளுக்கு அப்பால் செல்பேசிகளையும் வைத்திருப்பதால், அவர்கள் வழிதவறி எல்லை மீறும்போது அவர்களின் செல்பேசிக்கு தானியங்கி சமிஞ்சை வழங்குவதற்கான ஏற்பாடுகள் தொடர்பாகவே ஆராயப்பட்டு வருவதுடன், இது தொடர்பாக இந்தியாவின் முன்னணி செல்பேசிப் பரிவர்த்தனை நிறுவனத்துடனும் பேச்சு நடத்தப்பட்டுள்ளது. இதேவேளை, கடல் எல்லைகளை வரையறுக்கும் வகையில் கடலில் கயிறுகளால் மிதப்பு எல்லையிடுவதற்கான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டு வருவதாக கூறப்படுகின்றது.

### அல்லைப்பிட்டியில் கிடங்கில் வீழ்ந்து குழந்தை மரணம்

யாழ்ப்பாணம் அல்லைப்பிட்டியில் வீட்டு முற்றத்தில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தையொன்று கிடங்கில் வீழ்ந்து பரிதாபகரமான முறையில் உயிரிழந்துள்ளது. மேற்படி சம்பவத்தில் ஜெனோசன் என்ற ஒன்றரை வயது குழந்தையே பலியாகியுள்ளது. குழந்தை முற்றத்தில் இருந்து விளையாடியதாகவும் இதனைக் கவனிக்காது பெற்றோர்கள் வீட்டில் தமது வேலைகளில் ஈடுபட்டு இருந்ததாகவும் சிறிது நேரத்தில் குழந்தையைக் காணாது தேடிய போது குழந்தை முற்றத்தில் காணப்பட்ட கிடங்கில் கிடப்பதைக் கண்டதாகவும் தெரிவிக்கப்படுகின்றது.

### உடலில் கம்பிகள் ஏற்றப்பட்ட நிலையில் இன்னொரு பெண்

சவூதி அரேபியாவிலிருந்து மற்றுமொரு சிறிலங்காப் பணிப் பெண் சித்திரவதைக்குட்படுத்தப்பட்டு உடலில் ஊசி போன்ற நான்கு கம்பிகள் ஏற்றப்பட்டு திருப்பியனுப்பப்பட்டுள்ளார். காலியை பிறப்பிடமாகக் கொண்ட 30 வயதுடைய திருமணமான பெண்ணொருவரே இவ்வாறு சித்திரவதைக்குட்படுத்தப்பட்டு திருப்பியனுப்பப்பட்டுள்ளார். அவர் உடலில் ஏற்



றப்பட்டிருந்த கம்பிகள் சத்திர சிகிச்சையின் மூலம் அகற்றப்பட்டுள்ளன. குறித்த பெண் கடந்த வருடம் நவம்பர் மாதம் 18ம் திகதி சவூதி அரேபியாவிற்கு வீட்டுப் பணிப் பெண்ணாக சென்றுள்ளார். அங்கு அவ்வீட்டு உரிமையாளரால் அவர் துன்புறுத்தப்பட்டமையால் குறித்த பெண் அதனை வீட்டிற்கு தெரியப்படுத்தியுள்ளார். அதனை தொடர்ந்து அப் பெண்ணின் கணவர் சிறிலங்கா வெளிநாட்டு வேலைவாய்ப்பு பணியகத்தோடு தொடர்பு கொண்டு கடும் முயற்சிகளை மேற்கொண்டு குறித்த பெண்ணை மீண்டும் நாட்டிற்கு அழைத்து வர நடவடிக்கை எடுத்துள்ளார். சவூதி அரேபியாவில் வீட்டுப் பணிப் பெண்ணாக பணிபுரிந்த குறித்த பெண்ணை வீட்டு உரிமையாளர் பாலியல் பலாத்காரத்துக்குட்படுத்த முயன்றுள்ளார். அதற்கு அப்பெண் இணங்காமையினாலேயே இவ்வாறு சித்திரவதை மேற்கொள்ளப்பட்டதாக தெரிவிக்கப்படுகிறது.

### சிறிலங்கா – பாகிஸ்தான் விமான சேவை

பாகிஸ்தான் காரச்சி மற்றும் சிறிலங்கா இடையிலான இடைநிறுத்தி வைக்கப்பட்ட விமானசேவை 60 வருடங்களுக்குப் பிறகு கடந்த வாரம் மீண்டும் ஆரம்பமானது. இதன் நிகழ்வாக 190 பயணிகள், 8 பணியாளர்களை கொண்ட ஏ310 விமானம் பாகிஸ்தான் காராச்சியில் இருந்து கொழும்பிற்கு வந்தனர். இவ் விமானச் சேவை இரு வாரத்துக்கு ஒரு தடைவை இடம்பெறும் என்று கூறப்பட்டுள்ளது.

### நெற்கதிர் குவியலுக்கு தீவைப்பு

சூடடிப்பதற்காக வயலில் குவித்து வைத்திருந்த நெற்கதிர்க் குவியல் ஒன்றுக்கு இனந்தெரியாதோர் இரவுவேளை தீ வைத்ததனால் நெற்கதிர்க் குவியல் எரிந்து நாசமானது. யாழ்ப்பாணம் உடுப்பிட்டியைச் சேர்ந்த சி.நல்லைநாதன் என்பவரது பொச்சுணையில் உள்ள வயலில் சில தினங்களுக்கு முன் இச்சம்பவம் நடைபெற்றுள்ளது. இவர் தனது வயலில் அறுவடை செய்த நெற்கதிர்களைக் குவியல்களாக குவித்து வைத்துவிட்டு, சூடடிப்பதற்காக மறுநாள் காலையில் வந்து பார்த்தபோது நெற்கதிர்க் குவியல் எரிந்து நாசமாக இருக்கக் காணப்பட்டது. அக்குவியலில் இருந்து 16 மூடை நெல்லைப் பெறக்கூடியதாக இருந்தது என்றும், அதனை தீயிட்டு நாசப்படுத்தியமையால் தமக்கு சுமார் 50 ஆயிரம் ரூபா வரை நட்டம் ஏற்பட்டுள்ளதாகவும் நெற்செய்கையை மேற்கொண்ட அவ்விவசாயி தெரிவித்தார்.

### சிப்பாய் சாவு

துப்பாக்கிச்சூட்டு காயத்துடன் காணப்பட்ட சிறிலங்கா இராணுவ சிப்பாய்

10ம் பக்கம் பார்க்க

## 20 தாயகத்திலும் புலம்பெயர் மண்ணிலும் தமிழர் சொத்துக்களை சூறையாடும் சிங்களம்

கொள்ளை
நிலஆக்கிரமிப்பு
கப்பம்

– கந்தரதன்

# இறுதி உரிமையையும் சிதைக்கிறது சிங்களம்!

கடந்த 20.02.2011 திங்கட்கிழமை உலகத் தமிழர்களை சோகத்தில் ஆழ்த்திய சம்பவம் ஒன்று நடந்தேறியது. அதாவது தமிழீழத் தேசியத் தலைவர் மேதகு வேலுப்பிள்ளை பிரபாகரன் அவர்களின் தாயார் பேரன்னை பாவதிப்பிள்ளை அவர்கள் இறைவனடி சேர்ந்து விட்டார் என்ற செய்தி தமிழ் மக்களை செய்வதறியாது திகைக்க வைத்தது. புலம்பெயர் நாடுகளிலுள்ள மக்கள் தாம் நேரில் சென்று தமது அஞ்சலியைத் தெரிவிக்க முடியாத நிலையில் தாம் புலம்பெயர்ந்து வாழும் நாடுகளிலும் இந்தியாவில் தமிழ்நாட்டு மக்கள் பல பாகங்களிலும் தமது அஞ்சலிகளைத் தெரிவித்தனர். ஆனால், யாழ்.குடாநாடு உட்பட தமிழீழ மாவட்டங்களைச் சேர்ந்த மக்களுக்கு கைக்கெட்டியும் வாய்க்கெட்டாத நிலையே ஏற்பட்டது.

சிறிலங்காப் படையினரால் பேரன்னைக்கு அஞ்சலி செய்யச் சென்ற மக்கள் தடுத்து நிறுத்தப்பட்டனர். உலகிலேயே எந்த ஒரு நாட்டிலும் நடைபெறாத கொடுமை எமது தாயகத்தில் இடம்பெற்றுள்ளது. இந்த இழிவான செயலின் மூலம் தமிழ் மக்களின் உணர்வுகளையே சூறையாடியுள்ளது சிங்கள இன வெறிக் கொடுங்கோல் அரசு.

இதேவேளை அன்னை பார்வதியம்மாளின் இறுதிக் கிரியைகளில் கலந்து கொண்டு அஞ்சலி செலுத்துவதற்குப் புறப்பட்ட யாழ்.பல்கலைக்கழக மாணவர்கள் படையினரால் இரும்புக்கரம் கொண்டு தடுக்கப்பட்டுள்ளனர். கடந்த செவ்வாய்க்கிழமை நண்பகல் 11 மணியளவில் தனியார் பஸ் ஒன்றினை வாடகைக்கு அமர்த்தி, வல்வெட்டித்துறையில் நடைபெற்ற அன்னை பார்வதியம்மாளின் இறுதிக்கிரியைகளில் கலந்துகொண்டு அஞ்சலி செலுத்துவதற்குப் புறப்படத் தயாராக இருந்த வேளை திடீரென வாகனங்களில் வந்திறங்கிய யாழ்ப்பாணக் காவற்றுறை அதிகாரிகளும், காவற்றுறையினரும் மாணவர்களுடன் வாக்குவாதத்தில் ஈடுபட்டனர்.



மாணவர்களை பல வழிகளிலும் காவற்றுறையினர் மிரட்டியதை அவதானிக்க முடிந்ததாக சம்பவத்தை நேரில் பார்த்தவர்கள் தெரிவித்தனர். மரணச் சடங்குக்குச் செல்கிறீர்களா? மரணமானவர் உங்களுக்கு என்ன உறவு? என்று காவற்றுறை அதிகாரி ஒருவர் கேட்ட கேள்விக்கு மாணவர்கள், நாம் தமிழர்கள் – அன்னையின் பிள்ளைகள் என்று உணர்ச்சிப்பிரவாகத்துடன் பதிலளித்தனர். நீங்கள் எங்களை மீறிச் செல்வீர்களானால் கைது செய்யப்படுவீர்கள், தனிப்பட்ட முறையில் பிரச்சினைகளைச் சந்திக்க வேண்டிவரும் என்றெல்லாம் காவற்றுறையினர் தம்மை மிரட்டியதாக மாணவர்கள் தெரிவித்தனர்.

மாணவர்கள் விட்டுக்கொடுக்காமல் வாக்கு வாதுப்பட்டதைத் தொடர்ந்து, வாடகைக்கு அமர்த்தப்பட்ட வாகன சாரதியையும், உரிமையாளரையும் அழைத்து, நீங்கள் இவர்களை அழைத்துச்சென்றால் கைது செய்யப்படுவீர்கள் என்ற தொனியில் கடுமையாக எச்சரித்து, வாகன உரிமையாளர் அவ்விடத்திலிருந்து வாகனத்துடன் அப்புறப்படுத்தப்பட்டார்.

இருந்த போதிலும் போயே தீருவோம் என்று மாணவர்கள் உறுதியுடன் கோசமிட்டனர். பல்கலைக்கழக வாசலை மூடி காவற்றுறையினர் கடமையில் ஈடுபடுத்தப்பட்டனர். இது இவ்வாறிருக்க – பிரச்சினைகளைத் தவிர்க்கும் நோக்கில் துணைவேந்தர் பின் கதவு வழியாக நழுவிவிட்டார் என மாணவர்கள் மன வருத்தத்துடன் தெரிவித்தனர். இதேவேளை – சம்பவத்தை புகைப்படமெடுத்த மாணவர்களிடமிருந்து புகைப்படக்கருவிகளைப் பறித்தெடுத்த காவற்றுறையினர், சம்பவம் தொடர்பான புகைப்படங்களை அழித்த பின்னர் கருவிகளை மீளளித்ததையும் அவதானிக்கக்கூடியதாக இருந்தது. யாழ். பல்கலைக்கழக ஊடகவள நிலையம் தொடர்பான கலந்துரையாடல் ஒன்றுக்காக பல்கலைக்கழகத்துக்கு வருகைதந்திருந்த வெளிநாட்டு ஊடகவியலாளர்கள் இருவரும் நிகழ்வுகளைப் பதிவுகளாக்கியிருந்தனர்.

இதேவேளை, விடுதலைச் சிறுத்தைகள் கட்சியின் தலைவரும் எம்பியுமான தொல்.திருமாவளவன் பேரன்னை பார்வதி அம்மாளின் மரணச் சடங்குகளில் கலந்து கொள்வதற்காக கடந்த செவ்வாய்கிழமை அதிகாலை கொழும்பில் இறங்கியபோது அனுமதி மறுக்கப்பட்டு, அடுத்த விமானத்தில் அவர் திருப்பியனுப்பப்பட்டார்.

இது குறித்து திருமாவளவன் விடுத்த அறிக்கையில், கொழும்பு விமான நிலையத்தில் சிங்கள அரசின் குடிவரவுத் துறை அதிகாரிகள் எங்களை வழிமடக்கி, 'இலங்கைக்குள் நுழைய உங்களுக்கு அனுமதியில்லை. இந்தியாவுக்குத் திரும்பிச் செல்லுங்கள்!' என்று கூறினர். 'நாங்கள் பிரபாகரன் தாயாரின் இறுதி வணக்க நிகழ்வில் கலந்துகொள்வதற்காகவே வந்திருக்கிறோம். வேறெதுவும் உள்நோக்கம் இல்லை. ஆகவே எங்களை அனுமதிக்க வேண்டும்' என்று வாதாடினோம். 'அவ்வாறு

(39ம் பக்கம் பார்க்க)

# தம்பியை ஓரங்கட்டிவிட்டு மகனை மன்னனாக்கும் மகிந்தவின் கனவு!





**மகிந்தவிற்கு அடுத்ததாக அவரது தம்பிகளில் ஒருவரான பசில் ராஜபக்சவிற்கு மணிமகுடம் சூட்டப்படலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அண்மைக்காலமாக தமிழர் தாயகம் உட்பட சிறீலங்காவின் பல பகுதிகளிலும் நடந்த நிகழ்வுகளில் பசில் ஓரங்கட்டப்பட்டு நமல் ராஜபக்ச முன்னிலைப் படுத்தப்பட்டுவந்தார். இது தம்பியை ஓரங்கட்டிவிட்டு, மகன் நமலுக்கு பட்டாபிசேகம் நடத்தும் முடிவில் மகிந்த இருப்பதைக் காட்டுவதாகக் கூறப்படுகிறது.**

சிறீலங்காவின் ஆட்சி என்பது தற்போது ஒரு மிகப்பெரும் குடும்ப ஆட்சியாக மாறியுள்ளது. சிங்கள மக்களே அச்சமுறும் அளவிற்கு ராஜபக்சவின் குடும்ப ஆட்சி மரம் தற்போது கிளைகள் விட்டு பரந்துவிரிந்து வளரத் தொடங்கியுள்ளது. ஆட்சியின் முக்கிய பொறுப்புக்களில் உள்ள சுமார் 28 வரையானவர்கள் மகிந்தவின் நேரடியான உறவினர்கள் என்று சிங்கள ஊடகங்களே ஆதாரங்களுடன் தகவல் வெளியிட்டுள்ளன. வளர்ந்து வரும் மரம் ஒன்றின் வரைபடம் கீறி, மகிந்த அரசில் அங்கம் வகிக்கும் உறவினர்களின் பெயர் விபரங்களையும், அவர்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள நிதி விபரங்களையும் கிளைகளாக வெளியிட்டுள்ளன.

இதற்கிடையே, உலகின் பல நாடுகளில் ஒற்றையாட்சி முறைமைக்கு எதிராக மக்களின் புரட்சிப் போர் விஸ்வரூபம் எடுத்து வரும் நிலையில், இலங்கையில் ராஜபக்சக்



களின் ஒற்றை ஆட்சியை நிலைநிறுத்துவதில் மகிந்த தீவிரமாக இறங்கியுள்ளார். இந்நிலையில், தனக்கு அடுத்ததாக யார் ஆட்சியில் அமர்வது என்பதில் மகிந்த உறுதியாக இருக்கின்றார். மகிந்தவிற்கு அடுத்ததாக அவரது தம்பிகளில் ஒருவரான பசில் ராஜபக்சவிற்கு மணிமகுடம் சூட்டப்படலாம் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அண்மைக்காலமாக தமிழர் தாயகம் உட்பட சிறீலங்காவின் பல பகுதிகளிலும் நடந்த நிகழ்வுகளில் பசில் ஓரங்கட்டப்பட்டு நமல் ராஜபக்ச முன்னிலைப்படுத்தப்பட்டுவந்தார். இது தம்பியை ஓரங்கட்டிவிட்டு, மகன் நமலுக்கு பட்டாபிசேகம் நடத்தும் முடிவில் மகிந்த இருப்பதைக் காட்டுவதாக கூறப்பட்டது. அது தற்போது உறுதியென கொழும்பில் இருந்து தகவல்கள் வெளிவரத் தொடங்கியுள்ளன.

தனக்குப்பின் நாட்டின் தலைமைத்துவப் பதவியைப் பொறுப்பேற்றுக் கொள்ளும் வகையில் நமல் ராஜபக்சவைப் புடம் போடும் நடவடிக்கைகளை தற்போது ஆரம்பித்துள்ளார். அனுபவங்களைக் கற்றுக்கொடுக்கத் தொடங்கியுள்ளார். உலக நாடுகளுக்குச் சென்று அந்நாட்டுத் தலைவர்களுடன் சந்திப்புக்களை மேற்கொள்ளுமாறு நமலுக்கு கூறியிருந்தார். அந்த வகையில்தான் கடந்த மாதம் லிபியா சென்று அந்நாட்டின் தலைவர் கேணல் கடாபியைச் சந்தித்திருந்தார் நமல். தற்போது, உள்நாட்டிலும் பல்வேறு அரசியல் நடவடிக்கைகளில் மகனைக் தீவிரமாகக் களமிறக்கியுள்ளார். அதன் ஒரு கட்டமாக இம்முறை நடைபெறவுள்ள உள்ளூராட்சி மன்றங்களுக்கான தேர்தலின் போது, தான் பங்கேற்கும் குறிப்பிட்ட சில பிரசாரக் கூட்டங்களில் தனக்குப் பதிலாக மகன் நமலை களமிறக்கவும் முடிவு செய்துள்ளார். தனக்குப் பதிலாக நமல் ராஜபக்சவை நாடு முழுவதும் நடைபெறும் பிரசாரக் கூட்டங்களுக்கு அழைத்துச் செல்லுமாறு ஆளும் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணியின் பொதுச் செயலாளர் சுசில் பிரேமஜயந்தவுக்கு மகிந்த உத்தரவிட்டுள்ளார். அதன் மூலம் உள்ளூராட்சி மன்றத் தேர்தல்களின் வெற்றியில் நமலின் பங்களிப்பு பெரிதாக எடுத்துக்காட்டப்படும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது. அதன் பின் தேர்தலையடுத்து நடைபெறவுள்ள பிரதமர் மற்றும் அமைச்சரவை மாற்றத்தின் போது மிகப் பெரும் பொறுப்பொன்றை நமல் ராஜபக்ச வசம் ஒப்படைக்கவும் மகிந்த முடிவு செய்துள்ளதாக ஜனாதிபதி செயலக வட்டாரங்கள் மூலம் தெரியவருகின்றது.

இதேவேளை, பசில் ஓரங்கட்டப்படும் நடவடிக்கை அதிகரிக்கத் தொடங்கியுள்ளது. அண்மையில் நடைபெற்ற கம்பஹா மாவட்ட அமைப்பாளர்கள் மற்றும் உள்ளூராட்சி மன்றங்களுக்கான வேட்பாளர்கள் கூட்டத்துக்கு மகிந்தவின் சகோதரரும் அமைச்சருமான பசில் ராஜபக்ச அழைக்கப்படாது புறக்கணிக்கப்பட்டுள்ளார். மேற்படி சம்பவத்தைக் குறிப்பிட்டு, அமைச்சர் பசிலின் செல்வாக்குக்கு சவால் விடும் வகையில் சிறீலங்கா சுதந்திரக் கட்சியின் ஒரு சில முக்கியஸ்தர்கள் பகிரங்கமாக நடக்கத் தலைப்பட்டுள்ளதாக அலரி மாளிகை வட்டாரங்கள் தகவல் வெளியிட்டுள்ளன. மேலும், அக்கூட்டம் நடைபெற்ற நேரம் பசில் அலரி மாளிகையில் தான் இருந்துள்ளார். ஆயினும் கூட்டத்திற்கான அழைப்பிதழ் கிடைக்கப் பெறாமையால் அவர் அதில் கலந்து கொள்ளாது தவிர்த்துள்ளார் எனவும் அத்தகவல்கள் தெரிவிக்கின்றன.

அது மாத்திரமன்றி கம்பஹா மாவட்டத்தில் உள்ளூராட்சி மன்றங்களுக்கான வேட்பாளர்களாகப் போட்டியிடுபவர்கள் பசில் அணி மற்றும் பீலிக்ஸ் பெரேரா அணி என இரண்டு பிரிவுகளாகப் பிரிந்துள்ளனர். தமது சுவரொட்டிகள் மூலமாகவும் அதனை வெளிக் காட்டியுள்ளனர். கம்பஹா மாவட்டத்தின் சிறீலங்கா சுதந்திரக் கட்சித் தலைவராக பசில் ராஜபக்ச இருந்த போதிலும், பெரும்பாலான வேட்பாளர்கள் அவரது படத்துக்குப் பதிலாக அமைச்சர் பீலிக்ஸ் பெரேராவின் படத்தையே தமது சுவரொட்டிகளில் அச்சடித்துள்ளனர். அது மாத்திரமன்றி, அமைச்சர் பசில் ராஜபக்ச பங்கேற்கும் கூட்டங்களையும் அவர்கள் புறக்கணித்து வருவதாகவும் தெரிய வருகின்றது. இவற்றையெல்லாம் அமைச்சர் பசில் ராஜபக்ச கண்டும் காணாதது போல நடந்து கொள்வதாக தகவல்கள் தெரிவிக்கின்றன.

ஆனால், உள்ளுக்குள் குமைந்துகொண்டிருக்கும் பசிலின் கோபங்கள் எப்போது வெடித்துக் கிளம்புமோ தெரியாதென அவருக்கு நெருக்கமான வட்டாரங்களில் இருந்து அறியவருகின்றது.

ராஜபக்சக்களுக்கு இடையே மோதல் வெடிக்குமா அல்லது மகிந்தவின் ஒற்றையாட்சிச் சிந்தனைக்கு வருங்காலத்தில் மக்கள் போராட்டம்தான் பதில் சொல்லுமா...? பொறுத்திருந்து பார்ப்போம்.





ஒருவரின் சடலம் வவுனியா பொதுவைத்தியசாலைக்கு கொண்டு வரப்பட்டுள்ளது. சிங்க றெஜிமண்ட் படைப்பிரிவைச் சேர்ந்த 19 வயதுடைய இராணுவ சிப்பாயே இறந்த நிலையில் மீட்கப்பட்டுள்ளார். மாங்குளம் கொக்காவில் பிரதேசத்தில் கடந்த வியாழன் அதிகாலை காவல் கடமையில் இருந்தபோது இவரின் துப்பாக்கி தவறுதலாக இயங்கியதில் ஏற்பட்ட சம்பவத்தில் சூடுபட்ட குறித்த இராணுவ சிப்பாய் பின்னர் மரணமாகியுள்ளதாக தெரிவிக்கப்படுகிறது. இவர் கெக்கிராவ பகுதியைச் சேர்ந்த ஆர்.எம்.பி.ராஜபக்ச என தெரிவிக்கப்படுகின்றது.

### தமிழர்களின் வாகனங்களை சிறீலங்கா விற்பனை

வன்னியில் நடைபெற்ற போரின்போது பொதுமக்களால் கைவிடப்பட்ட வாகனங்களை ஏலத்தில் விற்பனை செய்ய சிறீலங்கா அரசு திட்டமிட்டுள்ளது. பாரஊர்திகள், உந்துருளிகள், பேருந்துகள் உட்பட பெருமளவான வாகனங்களை விற்பனை செய்வதற்கு தாம் திட்டமிட்டுள்ளதாக சிறீலங்காவின் முன்னாள் இராணுவ அதிகாரியும், தற்போதைய வடமாகாண ஆளுநருமான மேஜர் ஜெனரல் சந்திரசிறீ தெரிவித்துள்ளார். வாகனங்களை விற்பனை செய்வது தொடர்பான ஆவணங்களை தயார் செய்யுமாறு அவர் கிளிநொச்சி மாவட்ட அரச அதிபர் ரூபவதி கேதீஸ்வரனையும் பணித்துள்ளார். 800 உந்துருளிகளும், 50 கனரக வாகனங்களும் இவ்வாறு விற்பனை செய்யப்படவுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது.

### வேட்பாளர்கள் ஆள்மாறாட்டம் – தேர்தல் ஆணையகம் எச்சரிக்கை

வேட்பு மனு நிராகரிக்கப்பட்ட ஒருசில கட்சி மற்றும் சயேட்சைக் குழு உறுப்பினர்கள் வேறு கட்சி மற்றும் சுயேட்சைக் குழு வேட்பாளர்களுக்காக தங்களுடைய பெயர்களை மாற்றி செயல்பட்டு வருகின்றமை குறித்து முறைப்பாடுகள் பதிவாகியுள்ளதென தேர்தல் செயலகம் தெரிவித்துள்ளது. தேர்தலில் போட்டியிடவுள்ள அரசியல் கட்சி மற்றும் சுயேட்சைக் குழு வேட்பாளர்களுக்குப் பதிலாக அவர்களுடைய இலக்கம் மற்றும் சின்னங்களைப் பயன்படுத்தி வேறு ஒருவருக்கு வாக்குக்கோர முடியாதென தேர்தல் செயலகம் விடுத்துள்ள அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. உள்ளூராட்சி சபைத் தேர்தல் சட்டத்தில் அவ்வாறானதொருப் பிரிவு இல்லை எனவும், ஒருவருக்காக இன்னொருவர் போட்டியிடுவது செல்லுபடியற்றது எனவும் வாக்களர்களுக்கு தேர்தல் ஆணையாளர் அறிவுறுத்தியுள்ளார்.

### இராணுவப் பதிவுக்கு எதிராக உயர் நீதிமன்றில் மனு

யாழ்ப்பாண மக்களை இராணுவத்தினர் புகைப்படம் எடுத்துப் பதிவுசெய்கின்றமைக்கு எதிராகத் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு உயர் நீதிமன்றத்தில் அடிப்படை உரிமை மீறல் மனுத்தாக்கல் செய்யவுள்ளது. தமிழ்த் தேசியக் கூட்டமைப் பின் யாழ்.மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர்களான மாவை சேனாதிராஜா, அப்பாத்துரை விநாயகமூர்த்தி, சுரேஷ் பிரேமச்சந்திரன், எஸ்.சிறிதரன், சரவணபவன் ஆகியோர் இம் மனுவை கூட்டாகத் தாக்கல் செய்கின்றனர். மனுவில் முக்கிய பிரதிவாதிகளாக பாதுகாப்பு அமைச்சின் செயலாளர் கோத்தபாய ராஜபக்ச, இராணுவத் தளபதி ஜகத் ஜயசூரிய, யாழ்.மாவட்ட இராணுவக் கட்டளைத் தளபதி மஹ்ந்த ஹத்துருசிங், சட்டமா அதிபர் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர். யாழ்ப்பாண மக்களின் அடிப்படை உரிமைகள் படையினரின் இப் பதிவு நடவடிக்கைகளால் மீறப்பட்டுள்ளன என்று மனுவில் தெரிவிக்கப்படுகின்றது. சட்டத்தரணி மோகன் பாலேந்திரா மூலமாக இம் மனு தாக்கல் செய்யப்படுகின்றது. மனுதாரர்களை ஆதரித்து ஜனாதிபதி சட்டத்தரணி க.கனகீஸ்வரன் சட்டத்தரணிகளான எம்.ஏ.சுமந்திரன் மற்றும் விரான் கொரியா ஆகியோர் வாதிடவுள்ளனர். எப்போது தாக்கலாகும் என்பது தெரியவில்லை.

### விடுதலைப் போராட்டம் முடிவுறவில்லை

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு போட்டியிடுகின்ற அனைத்து உள்ளூராட்சி சபைகளிலும் வெற்றிபெற்றுத் தமிழர்களின் விடுதலைப் போராட்டம் இன்னும் முடிவுறவில்லை என்பதை உலகுக்கு நிரூபித்துக் காட்டவேண்டும் என மட்டக்களப்பு மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர். பா.அரியநேத்திரன் தெரிவித்துள்ளார். அம்பாறை மாவட்டத்திலுள்ள பல உள்ளூராட்சிச் சபைகளில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு போட்டியிடுவதால் இதற்கான தேர்தல் பரப்புரை கடந்த சனிக்கிழமை காரைதீவில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இதில் கலந்துகொண்டு உரையாற்றும் போதே நாடாளுமன்ற உறுப்பினர் அரியநேத்திரன் இவ்வாறு தெரிவித்துள்ளார். அவர் தொடர்ந்து உரையாற்றுகையில் தெரிவித்தவை வருமாறு: 2009ம் ஆண்டு மே மாதத்துடன் விடுதலைப் புலிகளை அழித்து அவர்களின் ஆயுதப் போராட்டத்தையும் முடிவுக்குக் கொண்டுவந்து விட்டோம் என அரசு அறிவித்தது. அத்துடன் தமிழர்களின் விடுதலைப் போராட்டம் முடிவுக்கு வந்துவிட்டதால், அவர்களுக்கென எந்தவிதமான அரசியல் தீர்வும் தேவையில்லை என அரசு கருதுகிறது. தமிழர்களின் விடுதலைப் போராட்டம் இன்னும் ஓயவில்லை. பொருத்தமான தீர்வு கிடைக்கும்வரை அது தொடரும் என்பதைக் கடந்த பொதுத்தேர்தலில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை வெற்றி பெறச் செய்ததினூடாகத் தமிழ் மக்கள் நிரூபித்திருக்கிறார்கள். இதை உணர்ந்து கொண்ட அரசு தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் அரசியல் தீர்வு சம்பந்தமாகப் பேசுவதற்கு இணங்கி முதற்கட்ட பேச்சுவார்த்தையும் இடம்பெற்றுள்ளது. இந்த நேரத்தில் 10 மாதங்களின் பின் இன்னும் ஒரு தேர்தலை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு சந்திக்கின்றது. இந்தத் தேர்தலிலும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு கணிசமானளவு வெற்றியைப் பெற வேண்டும். அந்த வெற்றிதான் ஆரம்பிக்கப்பட்டுள்ள பேச்சுவார்த்தை தொடர்வதற்கு உறுதுணையாக அமையும் என்றார் பா.அரியநேத்திரன்.

# சிறிலங்காவை போர்க் குற்றத்தில் இருந்து காப்பாற்ற ருத்திரகுமாரன் கொழும்பு பயணம்

சிறிலங்காவை போர்க் குற்றத்தில் இருந்து தப்பிக்க வைப்பதற்கு பல்வேறு முயற்சிகள் சில நாடுகள் மற்றும் அமைப்புக்களாலும் மேற்கொள்ளப்பட்டு வரும் நிலையில் அதனையும் தாண்டி சிறிலங்கா மீதான போர்க் குற்றச்சாட்டுக்கள் மிகவும் இறுக்கமான கட்டத்தை அடைந்துகொண்டிருக்கின்றன.

இந்த விடயத்தில் ஐ.நா பொதுச் செயலர்கூட ஒதுங்கிப்போக நினைத்தாலும் வெளிவந்திருக்கும் போர்க் குற்ற ஆதாரங்களும் புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் மற்றும் தமிழ்க் கட்டமைப்புக்களின் தொடர்ச்சியான சிறிலங்கா அரசின் மீதான குற்றச்சாட்டுக்களும் பெரும் நெருக்கடியை ஏற்படுத்தி வந்தன, வருகின்றன. இதனால், சிறிலங்கா மீது பெயரளவிற்கேனும் எதாவது ஒரு நடவடிக்கையை எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஐ.நாவிற்கு ஏற்பட்டது. இதன் காரணமாக பான் கீ மூனினால் அமைக்கப்பட்டதுதான் நிபுணர்கள் குழு. இந்தக் குழு இத்தனை காலமாக எதனைச் செய்து முடித்துள்ளது என்பது தெரியவில்லை. எனினும், இந்தக் குழுவின் பதவிக் காலம் விரைவில் நிறைவடைய இருக்கின்றது. ஆனால், நிபுணர் குழுவின் பதவிக் காலம் நீடிக்குமா என்பது இன்றுவரை கேள்விக்குறியாகவே உள்ளது.

இதற்கிடையே, போர்க் குற்றச்சாட்டுக்களில் இருந்தும், புலம்பெயர்ந்த தமிழ் மக்களால் நெதர்லாந்து சர்வதேச நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப்படும் போர்க் குற்ற வழக்குகளில் இருந்தும் தங்களை விடுவித்துக் கொள்வதற்கு சிறிலங்கா தீவிரமாக இறங்கியுள்ளது. இதற்கு இந்தியா உட்பட்ட சில நாடுகள் பேருதவி புரியத் தொடங்கியுள்ளன. காரணம் சிறிலங்கா மீதான போர்க் குற்றச்சாட்டுக்கள் நிரூபிக்கப்படும்போது, தமிழ் மக்கள் மீதான இன அழிப்பிற்கு உதவி புரிந்த ஏனைய நாடுகளும் குற்றவாளிகள் ஆக்கப்படலாம் என்ற அச்சமே. சிறீலங்கா அழிவு ஆயுதங்களை தமிழ் மக்களை அழிப்பதற்கு பாவித்தது நிரூபிக்கப்பட்டால், தடை செய்யப்பட்ட அந்த அழிவு ஆயுதங்களை விற்பனை செய்த நாடும் குற்றச்சாட்டுக்கு உள்ளாக்கப்படும்.

இந்நிலையில் தமிழ் இனப்படுகொலையை மூடி மறைத்து போர்க் குற்றச்சாட்டுக்களில் இருந்து சிறிலங்காவை தப்பிக்க வைக்கும் நடவடிக்கைகள் மும்முரமாக முன்னெடுக்கப்படுகின்றன. சிறீலங்காவில் உள்ள தமிழ் கட்சிகள் மகிந்தவுடன் ஆதரவாக, நெருக்கமாக உறவாடிக்கொண்டிருப்பதால் போர்க் குற்றச்சாட்டுக்கள் சுமத்தமாட்டார்கள் என்பது உறுதி. எனினும், தமிழ்க் கூட்டமைப்பு போர்க் குற்றச்சாட்டுக்களை சுமத்தலாம் என்பதனாலேயே தமிழ்க் கூட்டமைப்பிற்கு சாதாரண அரசியல் சலுகைகளை வழங்கி, அவர்களை வழிக்கு கொண்டுவரும் நிகழ்வுகள் நடந்துகொண்டிருக்கின்றன.

கூட்மைப்பை வழிக்கு கொண்டுவரும் முயற்சி ஓரளவு சாதகமான நிலையை எட்டியுள்ளதாகவும், இதற்கு இந்தியாவும் உடந்தையாக இருப்பதாகவும் கொழும்பு ஊடகங்கள் உறுதிப்படுத்தியுள்ளன.

இவ்வேளையில் எஞ்சியிருக்கும் புலம்பெயர்ந்த தமிழ் மக்களை கட்டுப்படுத்தவதே தற்போது பிரதான பிரச்சினையாக எழுந்துள்ளது. ஏற்கனவே, முகாம்களில் இருக்கும் தமிழ் மக்களையும், தடுத்து வைக்கப்பட்

**நாடு கடந்த தமிழீழ அரசின் ஊடாக, புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் சிறிலங்கா மீது சுமத்திவரும் போர்க் குற்றச்சாட்டுக்களை தடுத்து நிறுத்தும் நடவடிக்கையில் மகிந்த அரசு வெளிப்படையாக இறங்கியுள்ளமையை அறியக்கூடியதாக உள்ளது.**

டுள்ள போராளிகளையும் பணயமாக்கி புலம்பெயர்ந்த தமிழ் மக்களின் சிறிலங்காவிற்கு எதிரான போர்க் குற்றச்சாட்டுக்களை தடுத்து நிறுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. தேசியத்திற்கு ஆதரவாக செயற்பட்ட ஊடகங்கள் சில விலைக்கு வாங்கப்பட்டு, எதிர்ப்பிரச்சாரத்தில் ஈடுபடுத்தப்பட்டன. பல புதிய அமைப்புக்கள், அணிகள், ஊடகங்கள் தோற்றம் கொண்டன. கே.பி ஊடாக மேற்கொள்ளப்பட்ட இந்த முயற்சிகளில் சிறிதளவே சிறிலங்காவிற்கு வெற்றி கிடைத்தது.

கே.பியின் திட்டங்களுக்கு அமைவாகவே ஏற்கனவே நாடு கடந்த தமிழீழ அரசு புலம்பெயர்ந்த நாடுகளில் தோற்றம் கொண்டது. தமிழீழம் என்ற சொற்பதத்துடனேயே புலம்பெயர்ந்த தமிழ் மக்களை அணுக முடியும் என்பதாலேயே இவ்வாறானதொரு அமைப்பு ஏற்கனவே கே.பியின் திட்டமிடலின் கீழ் உருவாக்கப்பட்டது என முன்னர் கருத்துக்கள் வெளியாகியிருந்ததும் இங்கு சுட்டிக்காட்டத்தக்கது.

தமிழீழம் என்ற தனிநாட்டிற்கான ஒரு அமைப்பாக இதன் தோற்றம் இருந்தாலும், இதன் செயற்பாடுகள் சிறிலங்காவிற்கு சாதகமாகவே இருந்து வருவதை இந்த அமைப்பின் நடவடிக்கைகளை கூர்ந்து கவனித்து வந்தவர்கள் புரிந்துகொண்டிருப்பார்கள். விடுதலைப் புலிகளுக்கு ஆதரவானவர்கள் இந்தியா, சிறிலங்காவிற்கு பயணம் செய்யமுடியாத நிலை இருக்கும்போது, இதன் பிரதிநிதிகள் அந்நாடுகளுக்கு போய்வரக்கூடிய

(18ம் பக்கம் பார்க்க)

## மனித உரிமையாளர்களை...

'இன்ரர்போல்' இப்படியான தரம் குறைந்த அரசு சார்பான ஊடகங்கள் மூலம் தமது அறிவித்தல்களை ஒரு பொழுதும் வெளியிடமாட்டார்கள் என்பதுடன், இவ் ஊடகங்கள் தமது நிதியை பெருக்குவதற்கு எதுவானாலும் செய்வதுடன், மனித உரிமை செயற்பாட்டளர்கள் பற்றிய செய்திகளை வெளியிடுவதன் மூலம், தமது இணையத் தளங்களுக்கு பிரசித்தி தேட முனைகிறார்கள்.

மனித உரிமையாளர்களை 'இன்ரர்போல்' தேடுவதாக வெளிவந்த செய்திகள் யாவும் எந்த ஆதரவும் அற்றதுடன், இவை சிறீலங்காவின் பிரச்சாரங்களுக்காக அரசிடமிருந்து ஊதியம், சன்மானம் பெறுவோரினால் உருவாக்கப்பட்ட கட்டுக்கதைகள். இப்படியாக மனித உரிமையாளர்களை திட்டமிட்ட பிரச்சாரம் மூலம் வஞ்சிப்பது உண்மையான ஊடகவியாலுக்கு ஏற்படுத்தும் கேவலாமாகும்.

ஆகையால் இது பற்றிய விடயங்கள் யாவும், சர்வதேச ரீதியாக சகல நீதி நிர்வாக சட்ட நிறுவனங்களின் கவனத்திற்கு நாம் கொண்டு செல்கிறோம் என்பதை இதன் மூலம் அறியத் தருகிறோம்.

கடந்த காலங்களில் என் மீதான இப்படியான திட்டமிட்ட சில நாயவஞ்சக செய்திகளை, எனது சார்பாக சிறீலங்காவில் உள்ள சில வழக்கறிஞர்களும், வெளிநாடுகளில் சில வழக்கறிஞர்களும் சம்பந்தப்பட்ட சில பத்திரிகை நிறுவனங்களுக்கு உத்தியோகபூர்வமான பல கடிதங்கள் அனுப்பியிருந்தும், அவ் நிறுவனங்கள் எந்த கடிதங்களுக்கும் இன்றுவரை ஒரு பதிலையும் தர முன்வரவில்லை. அதேவேளை எனது வழக்கறிஞர்கள் இவ்விடயமாக, சிறீலங்காவின் பத்திரிகைச் சபையின் கவனத்திற்கு கொண்டு வந்தும் எந்தவித ஆக்கபூர்வமான நடவடிக்கைகளும் இதுவரை எடுக்கப்படவில்லை.

இப்படியான திட்டமிட்ட பிரச்சார செய்திகள் மூலம், கடந்த 21 வருடங்களாக நான் பங்களித்து வரும் ஐக்கிய நாடுகள் சபை மனித உரிமை அமர்வுகளிலும், மற்றைய சர்வதேச மனித உரிமை அமர்வுகளில் எனது பங்களிப்பை தவிர்பதற்கான முயற்சியாகவே இவை அமைகிறது என்பதை யாவரும் அறிவர்.

என்னை பொறுத்தவரையில் கடந்த 21 ஆண்டுகளாக மனித உரிமை மீறல்கள் தொடர்பான தகவல்களை தொடர்ந்து சேகரித்து வருவதுடன், உலகில் நீதி சமாதானம் நிலவுவதற்கு உதவுவதையே நோக்கமாக கொண்டுள்ளேன். ஆகையால் நான் மற்றவர்களின் சொத்துக்களுக்கோ, பணத்திற்கோ ஆசைபட்டவனும் அல்ல அதேபோல் மற்றவர்களின் சொத்துக்களுக்கு உரிமையோ பங்கோ கோருபவனும் அல்ல.

அறிவுள்ள மனிதரும், விடயம் அறிந்த நிறுவனங்களும் சம்பந்தப்பட்டவர்களுடன் எந்த விடயங்களையும் கலந்து ஆராயாது தன்னிட்ச்சையாக பிரச்சார நோக்குடன் பணத்திற்காக வெளியிடப்பட்ட அறிக்கைகள் பட்டியல்களுக்கு எந்தவித முக்கியத்துவம் கொடுக்க மாட்டார்கள் என்பது யாவரும் அறிந்ததே.

ஆகையால் எமது பொன்னான நேரங்களை இவற்றில் செலவிடாது, மாறாக தொடர்ந்து திறமையாக இன்னும் ஆதாரங்கள் அடங்கிய எமது மனித உரிமை வேலைகளை தொடர்வோம்.

*'உண்மைகளை நாம் கூற ஆயத்தம் ஆகும் வேளையில், பொய்கள் அரைவாசி உலகிற்கு சென்றுவிடும்'*
–பிரித்தானிய முன்னாள் பிரதமர் வின்சன் சேர்ச்சில்.

# கடாபி தாக்குப் பிடிப்பாரா தப்பியோடுவாரா?

கடந்த பல தசாப்தங்களாக ஒற்றையாட்சியாக நாட்டை ஆண்டு கொண்டிருக்கும் சர்வாதிகார ஆட்சியாளர்களுக்கு எதிராக மக்கள் போராட்டம் பத்திற்கும் மேற்பட்ட நாடுகளில் வெடித்துள்ளது. துனிசியாவில் தொடங்கிய மக்கள் புரட்சி எகிப்த்தில் வெற்றிபெற்று இப்போது உலுக்கிக்கொண்டிருப்பது லிபியாவைத் தான்.

லிபியாவில் கடந்த 42 ஆண்டுகளாக ஆட்சி செய்து வரும் அதிபர் முகம்மர் கடாபிக்கு எதிராகவே இந்த மக்கள் புரட்சி வெடித்துள்ளது. ஒருகாலத்தில் அமெரிக்காவிற்கே சிம்மசொப்பனமாக விளங்கிய கேணல் கடாபி, தனது நாட்டு மக்களின் போராட்டத்தில் இன்று ஆடித்தான் போயிருக்கின்றார்.

லிபியாவில் அந்நாட்டு ஜனாதிபதி கடாபிக்கு எதிரான போராட்டங்கள் உக்கிரமடைந்து வரும் நிலையில் அவர் தப்பியோடி வெனிசூலாவிற்கு சென்றுவிட்டதாக பரவிய செய்திகளை மறுத்து 'நான் நாட்டை விட்டு தப்பியோடவில்லை. இந்த மண்ணிலேயே வாழ்வேன்' என்று அந்நாட்டு அரச தொலைக்காட்சி சேவையில் தோன்றி ஆவேசமாகக் கூறியவர், 'ஒருபோதும் பதவியை விட்டுக் கொடுக்கப் போவதில்லை. எனவே, மக்கள் போராட்டங்களைக் கைவிட்டு இயல்பு வாழ்க்கைக்கு திரும்பவேண்டும்' எனவும் முழங்கினார்.



ஆனால் கடந்த 15ம் திகதி ஆரம்பமான போராட்டங்கள் இன்னும் உக்கிரமாகத் தொடர்கின்றன. லிபியாவின் கிழக்குப் பகுதியை தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துள்ளதாகக் கடாபிக்கு எதிரான ஆர்ப்பாட்டக்காரர்கள் அறிவித்துள்ளனர். எனினும், இடம்பெற்றுவரும் ஆர்ப்பாட்டங்களில் இதுவரை 400க்கு மேற்பட்டோர் கொல்லப்பட்டுள்ளனர். கடாபிக்கு ஆதரவான இராணுவத்தினரால் ஆர்ப்பாட்டக்காரர்கள் சுடப்படுவதாகவும் சடலங்கள் வீதிகளில் கிடப்பதாகவும் தகவல்கள் தெரிவிக்கின்றன. மேலும் தனது மக்கள் மீதே விமானத் தாக்குதலையும் நடத்தியுள்ளார் கடாபி. இதன்போது ஆர்ப்பாட்டக்காரர்கள் மீது குண்டு வீசுமாறு பணிக்கப்பட்ட போர் விமானமொன்றின் விமானிகள் தங்கள் மக்கள் மீது தாக்குதல் நடத்துவதற்கு விருப்பமின்றி, அதனை மோதி நொருங்கச் செய்துள்ளனர். இதன் போது விமானத்திலிருந்து விமானி பரசூட்டின் உதவியுடன் கீழே குதித்துத் தப்பியுள்ளனர்.

இந்த வன்முறைகளுக்கும் படுகொலைகளுக்கும் எதிராக உலக நாடுகள் பல கடாபிக்கு தங்களது கடும் கண்டனத்தைத் தெரிவித்துள்ளன. போராட்டக்காரர்கள் மீது ஏவி விடப்பட்டுள்ள வன்முறையை உடனடியாக நிறுத்துமாறு ஐநா. பாதுகாப்பு சபை எச்சரித்துள்ளது. லிபியா வன்முறைகள் குறித்து ஐநா. பாதுகாப்புச் சபையில் அவசர கூட்டம் நடந்தது. வீட்டோ அதிகாரம் கொண்ட ஐந்து நாடுகள் உட்பட தற்காலிக உறுப்பினராக உள்ள 15 உறுப்பு நாடுகளின் பிரதிநிதிகளும் அந்தக் கூட்டத்தில் பங்கேற்றனர். கூட்டத்துக்கு பிரேசில் நாட்டு ஐ.நா. பிரதிநிதி மரியா லுய்சா தலைமை தாங்கினார். மூடப்பட்ட அரங்குக்குள் நடந்த அந்த ஆலோசனை கூட்டத்தில், 'போராட்டக்காரர்கள் மீது ஏவி விடப்பட்டுள்ள வன்முறையை லிபியா அரசு உடனடியாக நிறுத்த வேண்டும்' என எச்சரிக்கை விடுக்கப்பட்டது. இந்த தகவலை மரியா லுய்சா தெரிவித்தார். இது குறித்து அவர் கூறுகையில், 'அமைதியாக போராட்டம் நடத்துபவர்கள் மீது இராணுவ நடவடிக்கை எடுக்கப்படுவதற்கும் வன்முறை சம்பவங்களுக்கும் ஐ.நா. பாதுகாப்பு சபைக் கூட்டத்தில் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. பலியான அப்பாவி மக்களுக்காக கூட்டத்தில் வருத்தம் தெரிவிக்கப்பட்டது. லிபியாவில் மனித உரிமை கண்காணிப்பாளர்கள் மற்றும் அமைப்புகளை உடனடியாக அனுமதிக்க வேண்டும் என வலியுறுத்தப்பட்டது' என்றார்.

இதற்கிடையே, லிபியா அதிபர் கடாபியுடன் ஐ.நா. பொதுச் செயலாளர் பான் கீ மூன் தொலைபேசியில் தொடர்பு கொண்டு 40 நிமிடங்கள் பேசினார். அப்போது, லிபியாவில் மனித உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் போராட்டம் நடத்துபவர்கள் மீது தாக்குதல் நடத்துவதை ஏற்றுக் கொள்ள முடியாது என்றும் பான் கீ மூன் தெரிவித்தார். ஐ.நா. மனித உரிமை ஆணையரும் போர்க் குற்ற நீதிமன்ற முன்னாள் நீதிபதியுமான நவி பிள்ளை வெளியிட்ட அறிக்கையில், லிபியாவில் போராட்டம் நடத்துபவர்கள் மீது இயந்திர துப்பாக்கிகள், விமானங்கள் மூலமாக தாக்குதல் நடத்துவதாக தகவல்கள் வெளியாகி உள்ளன. அப்பாவி மக்கள் மீதான தாக்குதலை மனித உரிமைக்கு எதிரான குற்றமாகவே கருத முடியும். எனவே, மனித உரிமை குற்றங்களுக்கு லிபியா அரசு ஆளாக நேரிடும்' என்றார்.

அதே நேரத்தில், லிபியாவில் வன்முறை பரவுவதால் பல்வேறு உலக நாடுகளும் தங்களுடைய நாட்டு மக்களை மீட்கும் முயற்சிகளை தொடங்கி உள்ளன. பெங்காசி துறைமுகத்தில் இருந்து படகுகள் மூலமாக 3 ஆயிரம் துருக்கியர்களை துருக்கி நாடு அழைத்துக் கொண்டுள்ளது. இதுபோல பிரித்தானியா, கனடா, பிரான்ஸ், ஜேர்மனி, ஈரான், இத்தாலி, ஜப்பான் போன்ற நாடுகளும் தங்கள் நாட்டு மக்களை அழைத்து வர விமானங்களை அனுப்பிவைத்தன. மேலும், வன்முறையை முடிவுக்கு கொண்டு வருமாறு சீனா, அமெரிக்கா ஆகிய நாடுகளும் லிபியாவுக்கு நெருக்கடி கொடுக்கத் தொடங்கியுள்ளன.

எகிப்து விடயத்தில் நேரடியாக தலையிட்டு அமைதியை நிலைநாட்ட வேண்டும் என வலியுறுத்திய அமெரிக்கா, லிபியா விடயத்தில் ஐநா.பாதுகாப்பு சபை தலையிட வேண்டும் என யோசனை கூறியுள்ளது. லிபியா அரசு அமெரிக்காவை எதிரியாக கருதுவதே இதற்குக் காரணம்.

போராட்டக்காரர்களுக்கு எதிராக கடாஃபி ஆயுதத்தை தூக்குவதை பிரித்தானியா கண்டிப்பதாக பிரித்தானிய வெளியுறவு அமைச்சர் வில்லியம் ஹேக் கூறியுள்ளார். கடாபி அடாவடித்தனமாக நடந்து கொள்கிறார். லிபியாவுக்கு எதிராக உலக நாடுகள் பொருளாதாரத் தடையை விதிக்க வேண்டும் என்று ஐரோப்பிய ஒன்றிய நாடுகள் குரல் கொடுத்துள்ளன. லிபியாவுடனான ராஜதந்திர உறவுகளை பெரு நாடு முறித்துக் கொண்டுள்ளது. லிபியாவுடனான ராஜீய உறவை முறித்துக்கொண்டுள்ள முதல் நாடு பெரு. கடாபிக்கு எதிராக 22 அரேபிய நாடுகளும் குரல் எழுப்பியுள்ளன. தமது குடிமக்களின் உணர்வுகளுக்கும், உரிமைகளுக்கும் கடாபி மதிப்பளிக்க வேண்டும் என்று அந்நாடுகள் வலியுறுத்தியுள்ளன. போராட்டகாரர்களுக்கு முறையாக பதில் அளிக்கும்வரை அரபு நாடுகள் கூட்டமைப்பு கூட்டத்தில் கலந்து கொள்ள லிபியாவை அனுமதிக்க முடியாது என்றும் அந்நாடுகள் தெரிவித்துள்ளன.

இவ்வாறு சொந்த நாட்டு மக்களினதும், சர்வதேச நாடுகளினது அழுத்தங்களும் அதிகரித்து கடாபியின் ஆதிக்கம் சரிந்து வரும் நிலையில், அவர் தன் மக்கள் மீது இரசாயன ஆயுதங்களை உபயோகிக்கக் கூடும் எனவும் அஞ்சப்படுகின்றது. அங்கு தற்போது சிவில் யுத்தம் போன்றதொரு நிலை தோன்றியுள்ளதாக வெளிநாட்டு ஊடகங்கள் தகவல் வெளியிட்டுள்ளன. கடாபிக்கு ஆதரவாக அவரது ஆதரவாளர்கள் இறுதிவரை போராடத் தயாராக உள்ளதாக அறிவித்துள்ளனர். இதனால், நிலைமை மேலும் மோசமடையலாம் என்று எதிர்பார்க்கப்படுகின்றது. அத்துடன், தன்னை பதவியில் இருந்து தூக்கியெறியும் நிலை வந்தால் நாட்டின் எண்ணெய் வளங்களை முற்றாக அழிக்க கடாபி திட்டமிட்டுள்ளதாகவும் தெரிவிக்கப்படுகின்றது.

இதற்கிடையே, கடாபிக்கு எதிராக அவரது மகனின் நெருங்கிய கூட்டாளியும், உள்துறை அமைச்சருமான அப்தெல் ஃபதா வெகுண்டு எழுந்துள்ளார். அவர் தனது பதவியை துறந்து போராடும் மக்களோடு களத்தில் குதித்துள்ளார். இராணுவ சீருடை அணிந்தவாறு அல்ஜசீரா தொலைக்காட்சியில் தோன்றிய அவர், முகம்மர் கடாபியின் சர்வாதிகாரப் போக்குக்கு முற்றுப்புள்ளி வைக்க வெடித்துள்ள கிளர்ச்சியை தான் முழுவதும் ஆதரிப்பதாக தெரிவித்தார்.

கிளர்ச்சியில் ஈடுபடும் மக்களை இராணுவத்தையும், கூலிப்படையையும் ஏவி விட்டு சுட்டுத்தள்ளி மனசாட்சி இல்லாமல் நடந்து கொள்ளும் கடாபியை கண்டித்து அந்நாட்டின் நீதித்துறை அமைச்சர் முஸ்தபா அப்துல் ஜலீல் என்பவரும் தனது பதவியைத் துறந்துள்ளார். கடாபியின் கொடுங்கோல் செயலைக் கண்டித்து அந்நாட்டின் ஏராளமான தூதர்களும், வெளியுறவு அதிகாரிகளும் பதவியை விட்டுவிலகியுள்ளனர். தொடர்ந்தும் விலகிவருகின்றனர்.



உள்துறை அமைச்சர் உட்பட பலர் கடாபிக்கு எதிராக அவரது அணியில் இருந்தவர்களே கிளம்பியுள்ளதால் கடாபியின் எதிர்கால ஆட்சி கேள்விக்கு உள்ளாகியுள்ளது. இந்த எதிர்ப்போராட்டத்திற்கு ஈடுகொடுத்து தாக்குப்பிடிப்பாரா அல்லது துனிசியா, எகிப்து தலைவர்கள்போல் தப்பியோடுவாரா என்பதை இன்னும் சில நாட்களுக்குள் அறிந்துகொள்ளலாம்.

- விவேகன் -



# 3ம் ஆண்டு நினைவில்



## லெப். அகமகன்

## யோகேஸ்வரன் ரமேஸ்

தாய் மடியில் 30-07-1987

யாழ் மாவட்டம்

தாய் மண்ணில் 03-03-2008

தமிழர் வரலாற்றில் என்றோ மாண்டுபோன வீரமரபு மீண்டும் மறுபிறப்பு எடுத்தது. அடிமைத்தனத்தின் அமைதியைக் கலைத்துக் கொண்டு ஒரு புயல் எழுந்தது. சருகாக நெரிபட்ட தமிழன், மலையாக எழுந்து நிமிர்ந்தான் அடிமை விலங்குகளால் பிணைக்கப்பட்டு, நீண்ட நெடுங்காலமாகத் தூங்கிக்கொண்டிருந்த தமிழ்த் தேசம் விழித்துக்கொண்டது. இந்தத் தேசிய எழுச்சிக்கு மூச்சாக இருப்பவர்கள் எமது மாவீரர்கள்.

*தமிழீழத் தேசியத்தலைவர்*

# மகிந்த சிந்தனை : படுகொலைகளும், கடத்தல்களும், காணாமல் போதல்களும்

**மகிந்த சிந்தனையிலான படுகொலைகளும், கடத்தல்களும், காணாமல்போதல்களும் கடந்த வாரங்களில் மீண்டும் அதிகரிக்கத் தொடங்கியுள்ளன. சிங்கள படைகளாலும் அவர்களின் இராணுவத் துணைக்குழுக்களாலும் கொல்லப்பட்ட, கடத்தப்பட்ட, காணாமல் போன தமிழ் மக்களின் விபரங்கள்.**

ஊர்காவற்றுறை

### இராணுவ முகாம் அருகே பெண்ணின் சடலம்

யாழ்ப்பாணம் தீவகப் பகுதியிலுள்ள ஊர்காவற்துறையில் இராணுவக் காவலரணுக்கு அண்மையிலுள்ள பாழடைந்த கிணற்றிலிருந்து பெண் ஒருவரின் உருக்குலைந்து சிதைந்த சடலத்தை கடந்த 24ம் திகதி வியாழக்கிழமை காலை மீட்கப்பட்டுள்ளது. துர்நாற்றம் வீசியதினால் அப்பகுதி மக்கள் இராணுவத்தினருக்கு தெரிவித்த தகவலின் அடிப்படையிலேயே இச் சடலம் அப்பகுதியில் நிலைகொண்டுள்ள சிறீலங்கா இராணுவத்தினர் மீட்டுள்ளனர். பொதி ஒன்றினால் சுற்றிக்கட்டப்பட்ட நிலையில் மீட்கப்பட்ட இச்சடலம் யாழ். ஊர்காவற்துறை அரச வைத்தியசாலையில் வைக்கப்பட்டுள்ளது. இச்சடலத்தில் வெட்டுக்காயங்களும் காணப்படுவதாக யாழ். ஊர்காவற்துறை வைத்தியசாலை அதிகாரி ஒருவர் தெரிவித்துள்ளார். ஏற்கனவே, ஊர்காவல்துறையில் அண்மைக்காலமாக இவ்வாறு மர்மானமுறையில் பெண்கள் கொல்லப்பட்டு கிணற்றில் இருந்து மீட்கப்பட்டுவருவது குறிப்பிடத்தக்கது.

மன்னார்

### காவல்துறை வாகனம் மோதி இருவர் பலி, படையினரின் துப்பாக்கிச்சூட்டில் இருவர் படுகாயம்

மன்னார் மதவாச்சி பிரதான வீதியில் சிறீலங்கா காவல்துறையினரின் வாகனம் ஒன்று அவ்வீதியால் வந்த உந்துருளியொன்றுடன் மோதியதால் உந்துருளியில் வந்த இரண்டு இளைஞர்களும் அந்த இடத்திலேயே உயிரிழந்தனர். இச்சம்பவத்தை அறிந்து அந்த இடத்தில் கூடிய நூற்றுக்கணக்கான பொதுமக்களுக்கும், காவல்துறையினருக்கும் இடையில் பெரும் முறுகல் நிலை ஏற்பட்டது. இதன்போது அருகிலுள்ள காவலரணில் இருந்து அங்கு வந்த சிறீலங்கா இராணுவத்தினர் மேற்கொண்ட துப்பாக்கிப் பிரயோகத்தில் இரண்டு பொதுமக்கள் காயமடைந்து வைத்தியசாலையில் சேர்க்கப்பட்டனர். இதைத் தொடர்ந்து மக்கள் அச்சத்தில் அங்கிருந்து அகன்றனர். சடலங்கள் இரண்டும் முருங்கன் வைத்தியசாலையில் ஒப்படைக்கப்பட்டன.

மல்லாகம்

### வயல் கரையில் இளைஞரின் சடலம் மீட்பு

யாழ். மல்லாகம் கந்தரோடை வயல் பகுதியில் இளைஞர் ஒருவரின் சடலம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பதாக அங்கிருந்து கிடைக்கும் தகவல்கள் தெரிவிக்கின்றன. 22ம் திகதி காலை 10 மணியளவில் சடலம் கண்டு பிடிக்கப்பட்டதை தொடர்ந்து தெல்லிப்பளையில் நிலைகொண்டுள்ள சிறீலங்கா காவற்துறையினருக்கு தகவல் கொடுக்கப்பட்டு காவற்துறையினரால் விசாரனைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

### தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் முகவர் காணாமல் போயுள்ளார்

யாழ்ப்பாணம் நெடுந்தீவுப் பகுதியில் உள்ளூராட்சித் தேர்தலுக்கான வேட்பு மனுவைத் தாக்கல் செய்யச் சென்ற தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் முகவர் காணாமல் போயுள்ளதாக அக்கட்சி முறைப்பாடு செய்துள்ளது. யாழ்ப்பாணத்தில் ஈ.பி.டி.பி கூலிக்குழுவின் கீழ் இருக்கும் நெடுந்தீவுப் பகுதியிலேயே தமது முகவர் காணாமல் போயுள்ளதாக தேர்தல் ஆணையாளரிடம் முறைப்பாடு செய்துள்ளது.

தமது முகவரின் கடத்தல் தொடர்பாக சிறீலங்கா காவல்துறையினரிடம் முறைப்பாடு செய்வதால் எந்த பலனும் ஏற்படப்போவதில்லை என்பதனால் தேர்தல் ஆணையாளரிடம் முறைப்பாடு செய்துள்ளதாகவும். இதற்கு ஈ.பி.டி.பி பொறுப்புக் கூற வேண்டும் எனவும் அக்கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினர் சுமந்திரன் தெரிவித்துள்ளார். மேலும் கட்சி நடவடிக்கைகளுக்காக நெடுந்தீவுப் பிரதேசத்துக்குச் செல்லவிருந்த தமது கட்சியின் இன்னும் பல ஆதரவாளர்கள் ஈ.பி.டி.பியினரால் மிரட்டப்பட்டுள்ளதாகவும் அவர் மேலும் தெரிவித்துள்ளார்.

நாவாந்துறை

### சிப்பாய் வாகனத்தால் மோதி முதியவர் மரணம்

யாழ். நாவாந்துறை வைரவர் கோவிலடியில் கடந்த 18ம் திகதி நண்பகல் 12 மணியளவில் சிறீலங்கா இராணுவச் சிப்பாய் ஒருவரின் வாகனத் தாக்குதலில் முதியவர் ஒருவர் மரணமடைந்துள்ளார். அராலி கிழக்கைச் சேர்ந்த கே.சந்திரலிங்கம் (வயது 55) என்பவர் துவிச்சக்கர வண்டியில் பயணித்துக் கொண்டிருந்தவேளை பின்னால் வந்த கார் விபத்துக்குள்ளானதில் அவர் சம்பவ இடத்திலேயே மரணமானார். காரை செலுத்தி வந்தவர் இராணுவச் சிப்பாய் என்பது குறிப்பிடத்தக்கது.

### மிருசுவில் படுகொலை – சம்பவ இடத்தைப் பார்க்க நீதிபதிகள் தீர்மானம்

11 வருடங்களுக்கு முன்பு யாழ். மிருசுவிலில் எட்டுப் பொது மக்கள் சுட்டுக் கொல்லப்பட்ட இடத்தை நேரில் பார்வையிடுவது என கொழும்பு மேல் நீதிமன்ற நீதிபதிகள் மூவரடங்கிய ஆயம் தீர்மானித்துள்ளது.

2000ம் ஆண்டு டிசெம்பர் 19ம் திகதி அல்லது அதற்கு அண்மித்த நாளொன்றில் மிருசுவிலில் எட்டுப் பொது மக்கள் சுட்டுக் கொல்லப்பட்டு புதைக்கப்பட்டனர். இது தொடர்பான வழக்கு கடந்த செவ்வாய்க்கிழமை கொழும்பு உயர்நீதிமன்றத்தில் விசாரணைக்கு எடுக்கப்பட்டபோது முறைப்பாட்டாளரினதும், எதிர்த்தரப்பினரினதும் சம்மதத்துடன் குறிப்பிட்ட இடத்தைப் பார்வையிட நீதிபதிகள் தீர்மானித்துள்ளனர். இந்த வழக்கு கொழும்பு மேல் நீதிமன்ற நீதிபதிகளான திருமதி தீபாலி விஜேசுந்தர (தலைமை நீதிபதி), சுனில் ராஜபக்ஷ, பீ.பி.வராவெள ஆகியோர் அடங்கிய விசேட ஆயத்தால் விசாரணை செய்யப்பட்டு வருகிறது. இந்தப் படுகொலையைச் செய்தார்கள் என்ற சந்தேகத்தின் பேரில் சுனில் ரத்நாயக்க, சேனக முனசிங்க, எம். ஜயரத்ன, புஷ்பசமன் குமார, காமினி முனசிங்க என்ற ஐந்து இராணுவச் சிப்பாய்களுக்கு எதிராக 17 குற்றச்சாட்டுகளுடன் சட்டமா அதிபரால் இந்தவழக்கு தொடரப்பட்டிருந்தது. வழக்கின் அடுத்த விசாரணை எதிர்வரும் 10ம் திகதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.



# மறக்க முடியுமா..?

## படுகொலைக்களம் – 3

– சங்கீதன்

10.11.1986 ஜக்கிய தேசிய கட்சியின் ஆட்சியின் கீழ் புல்லுமலை இரத்த வெள்ளத்தில் நனைந்த நாள். 1983ல் இல் இருந்து 1990 வரை 1200 மக்களை சிறீலங்காவின் இனப்படுகொலைகளில் இழந்த பிரதேசம். கிட்டதட்ட 400 குடும்பங்கள் சிங்கள இராணுவத்தாலும், சிங்களக் காடையாளாலும் படுகொலை செய்யப்பட்டு இழப்புகளின் வேதனைகளின் அனுபத்தை என்னிடம் பகிர்ந்து கொண்டதை உங்களுடன் நான் பகிர்ந்து கொள்கிறேன்.

10.11.1986ம் ஆண்டு என்னுடைய தம்பி செல்லத்தம்பி மற்றும் பேரின்பராசா அவரது மனைவி கர்ப்பினித் தாய்க்கு நிகழ்ந்த அந்த கொடுரம் எம் இனத்திற்கே பெரும் அவமானம் உணர்வுள்ள ஒவ்வொரு இளைஞனின் இரத்தம் கொதிக்கணும் தம்பி இதுக்கு நாங்கள் ஏதாவது செய்யணும் என்று ஆவேசமாக கதைத்தார்

அன்று பெரிய வெடிச்சத்தம் கேட்டுச்சு பிறகு கொஞ்சம் நேரம் செல்ல வாகனசத்தம் தொடர்ச்சியாக கேட்டுக் கொண்டிருந்திருச்சு அதில வந்தவர்கள் ஓடிப்போய் பிஞ்சுகுழந்தை என்றும் பாக்காமல் சுட்டுதள்ளிக் கொண்டு போனங்கள இளம் பிள்ளைகளை எல்லாம் கொடுரமான முறையில் கற்பழித்தாங்கள்

தம்பி..அங்கால பார்த்தால் மாடுகளை சாய்த்துக் கொண்டு வாற மாதிரி எல்லா வீட்டில் உள்ள ஆண்களையும் கூட்டிக் கொண்டுவந்தாங்கள்.

கிட்டத்தட்ட 250 பேரிற்கு கிட்ட வரும் அவர்கள் எல்லாரையும் மூங்கில் மலை என்ற பிரதேசம் நோக்கி அழைத்துக் கொண்டு சென்றாங்கள். இது வரைக்கும் அவர்களை என்ன செய்தாங்கள் என்பது தெரியாது தம்பி. அத்தனை பேரையும் பெரிய கிடங்கு வெட்டி சுட்டு போட்டு தாட்டதாக என்றெல்லாம் கூறுகிறாக்கள் ஆனால் இன்றைக்கு இருபத்தைந்து வருடங்களாகி விட்டது அவர்களின் நிலை என்ன என்பது தெரியாது.

இதுவரைக்கும் எல்லாமாக 320 பேரை சுட்டுகொன்றவங்கள் அதில என்னுடைய தம்பி செல்லதம்பியை அடித்து சித்திர வதை செய்து போட்டு காதிற்குள் துப்பாக்கியை வைத்து சுட்டு கொன்றவங்கள்.

பேரின்பராசாவை கை கால் கட்டி வைத்து அவரது கர்ப்பிணி மனைவியை நாலு, ஐந்து பேர் சேர்ந்து பாலியல் வல்லுறவிற்கு உட்படுத்திவிட்டு அவரது நிறமாத வயிற்றை கத்தியால் கீறி குழந்தையை வெளியில் எடுத்து தரையில் தூக்கி அடித்து கொன்றார்கள். பிறகு பேரின்பராசாவை சுட்டுப்போட்டு இருவரையும் ஒன்றாக்கி பேரின்பராசாவே அவரது மனைவியை பாலியல் வல்லுறவிற்கு உட்படுத்துவது போல் விட்டுவிட்டு சென்றார்கள்.

நான் வந்து பாத்தபோது என் தம்பி அருகில் யோகநாதன், அவர் தந்தை ஆறுமுகம் மற்றும் ஜெகநாதன், ராசையா போன்றோரின் உடல்களும் கிடந்தன. அவர்களின் நெஞ்சு, வயிற்றை கிழித்து குடல் இதயம், எல்லாத்தையும் வெளியில் எடுத்து விட்டுவிட்டு போயிருந்தார்கள்.

பெரிய புல்லுமலையில் இருந்து பயம் காரணமாக தமிழ் மக்கள் இப்படி வீடுகளை விட்டுவிட்டுவர சிங்கள காடையர்கள் வந்து அங்கை குடியேறினார்கள். இப்படி புல்லுமலையையும் தங்கட குடியேற்றமாக மாத்திடலாம் என்று தான் இவ்வளவு படுகொலைகளையும் செய்தவர்கள். எத்தனை இழப்புகளைச் சந்தித்தாலும் நாங்கள் அங்கிருந்து விட்டுவிட்டு போகவில்லை. என்ன செய்யிறது விடுதலை போராட்டத்தால ஒரு முடிவு வராட்டி எல்லாம் சிங்களப் பிரதேசமாகத்தான் போகும். என்று தனது மன வேதனையை கொட்டினார்.

உண்மைதான், இப்போது அங்கு சிங்களவர்கள் வந்து காணிகள் வாங்க தொடங்கிவிட்டார்கள். இதை எவ்வாறு தடுப்பது மக்களே உங்களின் கரங்களில்தான் தங்கியுள்ளது.



# மக்களுக்கு உதவிய மதகுரு உட்பட மூவர் கடத்தப்பட்டனர்

மட்டக்களப்பில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவிகள் செய்துகொண்டிருந்த மதகுரு உள்ளிட்ட மூவர் சிறீலங்காப்படைப் புல னாய்வாளர்களினால் கடத்தப்பட்டுள்ளார்கள் என அங்கிருந்து கிடைக்கும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

அண்மைய காலங்களில் தமிழர்களின் கிழக்கு தாயகமான மட்டக் களப்பு, அம்பாறை, திருகோணமலை ஆகிய பகுதிகளில் பெய்த மழை யினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு சிறீலங்கா அரசின் உதவிகள் சென் றடையாத நிலையில் சில நிறுவனங்கள் மக்களுக்கான உதவிகளை மேற் கொண்டு வருகின்றார்கள். இந்நிலையில் சிறீலங்கா அரசின் ஆளும் கட்சிகள் மற்றும் ஒட்டுக் குழுக்கள் போன்றன தமிழ் மக்களுக்கு வழங் கிக்கொண்டிருக்கும் பொருட்களை சூறையாடும் செயற் பாடுகளில் ஈடுபட்டுள் ளார்கள். குறிப்பாக மட் டக்களப்பு மாவட்டத்தில் சிறீலங்காப் படையின ருடன் சேர்ந்தியங்கும் ஒட்டுக்குழுவினரின் அத்துமீறிய நடவடிக்கை யினால் மக்கள் பாதிக் கப்பட்டுள்ளார்கள். அரசசார்பற்ற நிறுவனங் களினால் வழங்கப்பட்டுக்கொண்டிருக்கும் உணவுப்பொருட்களை கொள்ளை அடிப்பது, மக்களுக்கு சென்றடைய விடாமல் தடுப்பது போன்ற பணிகளில் சிறிலங்காப் படையினருடன் சேர்ந்தியங்கும் ஒட்டுக்குழுவினரின் செயற் பாடாக காணப்படுகின்றது.



இந்நிலையில் புலம்பெயர்ந்து வாழும் தமிழ் மக்கள் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களுக்கான பொருள் உதவிகளை மேற்கொண்டு வருகின்றார்கள். அவ்வாறு சில புலம்பெயர் தமிழர்கள் வாழும் நாடுகளில் இருந்து பெற்ற பொருட்களினை மதகுருவான பாஸ்ரர் யுவானந்தன் உள்ளிட்ட அமைப்பினர் முன்னின்று நடுநிலையுடன் மக்களுக்கு வழங் கிக்கொண்டிருந்தவேளை, சிறீலங்காப் படையின் துணை இராணுவக் குழுக்களில் ஒன்றான பிள்ளையான் எனப்படும் சந்திரகாந்தன் இந்த மத குருவினை தன்னை சந்திக்க வருமாறு அழைத்துள்ளார். இந்நிலையில் கடந்த 22.02.2011 அன்று மட்டக்களப்பில் வைத்து பிள்ளையானை பார்ப்பதற்காக சென்ற இந்த மதகுரு கடத்தப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது. இவர் சென்ற ஊர்தி தனிமையில் காணப்பட்டுள்ளதுடன், இவரது செல்பேசியும் துண்டிக்கப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

# உலகின் மோசமான 10 நகரங்களில் கொழும்பு – சிறீலங்கா சீற்றம்

உலகில் வாழ்வதற்கு மோசமான 10 நகரங்களில் சிறீலங்காவின் தலைநகர் கொழும்பும் ஒன்று என்று 'தி எகனாமிஸ்ட் இன்டெலிஜென்ஸ் யூனிட்' பத்திரிகை தனது கருத்துக் கணிப்பில் தெரிவித்துள்ளது. பிரபல பத்திரிகையான 'தி எகனாமிஸ்ட் இன்டெலிஜென்ஸ் யூனிட்' உலகில் வாழ்வதற்கு ஏற்ற மற்றும் மோசமான நகரங்கள் குறித்து கருத்து கணிப்பு நடத்தியது. அந்த கணிப்பு சுகாதாரம், கலாசாரம், சுற்றுச்சூழல், கல்வி, தனி நபர் பாதுகாப்பு உள்ளிட்ட 30 விடயங்கள் அடிப்படையில் நடத் தப்பட்டது. இதில் மோசமான 10 நகரங்களில் கொழும்பும் ஒன்று.

மோசமான நகரங்கள் விவரம் வருமாறு,

ஹராரே (ஜிம்பாப்வே), தாகா (பங்களாதேஷ்), போர்ட் மோர்ஸ்பி (பாபுவா நியூ கினியா), லாகஸ் (நைஜீரியா), அல்ஜீயர்ஸ் (அல்ஜீரியா), கராச்சி (பாகிஸ்தான்), தௌவாலா (காமரூன்), தெஹ்ரான் (ஈரான்), தாகர் (செனி கல்), கொழும்பு (சிறீலங்கா).

வாழத் தகுதியான 10 நகரங்கள்:

வான்கூவர் (கனடா), மெல்போர்ன் (அவுஸ்திரேலியா), வியன்னா (ஒஸ்ரியா), டொரண்டோ (கனடா), கால்காரி (கனடா), ஹெல்சிங்கி (பின்லாந்து), சிட்னி (ஆஸ்திரேலியா), பெர்த் (ஆஸ்திரேலியா), அடி லெய்ட் (அவுஸ்திரேலியா), ஆக்லேண்ட் (நியூசிலாந்து). 2010ம் ஆண்டில் இதே பத்திரிகை தான் உலகில் வேகமாக வளர்ந்து வரும் பொரு ளாதாரம் சிறீலங்கா என்று கூறியது என்பது குறிப்பிடத்தக்கது. இந்த இரண்டு பட்டியலிலும் இந்தியா இடம் பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

இதேவேளை, இந்தக் கருத்துக்கணிப்பிற்கு சிறீலங்கா தனது கடுமையான எதிர்ப்பை வெளியிட்டுள்ளது. ஏற்கனவே பொருளாதாரத்தில் நலிவடைந்துவரும் சிறீலங்காவிற்கு இந்தக் கருத்துக்கணிப்பு உல்லாசப் பயணிகளின் வருகையில் வீழ்ச்சியை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கப் படுகின்றது.

## சிறீலங்காவின் இராணுவ முற்றுகை வலயத்தில் இருந்து விடைபெற்றுச் செல்லும் அன்னை பார்வதி

பார்வதி அன்னையின் இறுதி வணக்க நிகழ்வுகளில் இருந்து. கீழே தமிழகத்தில் நடைபெற்ற அஞ்சலி நிகழ்வில் பல தலைவர்கள் பங்கேற்றுள்ளனர்.







இறகுகள் 39:1

# மனதுக்குள் குட்டிபோடும் மயில் இறகுகள்.

ச.ச.முத்து

## அன்னை இட்ட தீ!

விடுதலைக்காக போராடும் இனம், தன் முழு நிலத்தையும் ஆதிக்கத்திடம் பறிகொடுத்துவிட்டு பேரினவாதத்தின் அடக்குமுறைக்குள் தினமும் நெரிபட்டுக் கொண்டிருக்கும் ஒரு இனம், ஒரு 82 வயது மூதாட்டியின் மரணதுக்கான தனது கதறலை மௌனமாகவும், மிகவெளிப்படையாகவும் உணர்வு கலந்து தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

இத்தனைக்கும் மிக அண்மைக்காலத்தில் மிகவும் எதிர்பார்க்கபட்டதுதான் அவரின் மரணம். அவ்வளவுக்கு கடும் நோயுடன் அவர் போராடி வந்து கொண்டிருந்தவர். ஆனாலும் அவரின் மரணம் தமிழர் எல்லோரையும் ஏதோ ஒரு விதத்தில் பாதித்து இருக்கின்றது. தமிழர்களை அவரின் மரணம் எந்தளவுக்கு சோகம்கொள்ள வைத்ததோ அதைவிட ஆளுவோர் அவரின் மரணத்தின் பின்னான பொழுதுகளை அச்சத்துடனும், பதட்டத்துடனுமே பார்த்தனர். இப்போதும் பார்த்து வருகின்றனர்.

உறைநிலையில் அடங்கிக்கிடக்கும் ஒரு இனத்தின் எழுச்சித் தீ பலநூறு தீப்பொறிகளால் உருவாக்கப்படுபவை. அப்படியானதொரு தீப்பொறியை தேசியத் தலைவரின் அன்னையார் அமரர் திருமதி வேலுப்பிள்ளை பார்வதிப்பிள்ளை அம்மா அவர்களின் மரணம் எமக்குள் தூக்கிப் போட்டுவிட்டுப் போயுள்ளது.

*தேசத்தின் தலைமகனை ஈன்று எமக்களித்த அந்த தேசத்தின் தாயின் நினைவுகளை கொஞ்சம் மீட்டுவோம்.!*

பார்வதி அம்மா எல்லாவிதத்திலும் ஒரு சாதாரணத்தாய் தான். அவர் தலைவருக்கு வீரத்திலகம் இட்டு அனுப்பினார் என்றோ தலைவரை ஒரு போராளியாக வளர்த்து எடுத்தார் என்றுமோ புறநானூற்று வீரத்தாயாக விளங்கினார் என்றோ மிகைப்படுத்தி எதையும் கூறிவிடமுடியாத வகையில் அவர் எளிய அம்மாவாகவே விளங்கினார். ஆனால் தலைவரிடம் இருந்த எளிமைக்கும், உண்மைத் தன்மைக்கும், அவருடைய தாயாரே மூலவேராக இருந்திருக்கிறார்.

மார்க்சிம் கோர்க்கியின் உலகப்புகழ் பெற்ற 'தாய்' நாவலின் நாயகன் பாவெலின் தாயார் போன்று புரட்சிக்கான முன்னெடுப்புகளிலும், அதன் முண்ணணியிலும் நின்ற தாய் போன்று பார்வதி அம்மா இல்லாமல் இருந்திருக்கலாம், ஆனால் ஒரு விடுதலைப் போராட்டத்தின் மூச்சுக்காற்றை பிரசவித்தவர் அவர். ஆயிரமாயிரம் ஆண்டுகால ஒரு இனவரலாற்றின் மீது புதிய பரணியை எழுதிக்கொண்டிருக்கும் ஒரு மனிதனை தன் கருவில் சுமந்தவர். அடக்கப்பட்டும், அடங்கியும், ஒடுங்கியும் கிடந்த ஒரு தேசிய இனத்தின் சிந்தனைமுறைகளை முழுதாக திருத்தி எழுதிய ஒரு அற்புத போராளித் தலைவனை பத்து மாதம் தாங்கிப் பெற்றவர் அவர். இது ஒன்று போதும் அவரை தேசத்தின் அன்னையாக நாம் அஞ்சலிக்கவும், ஆராதிக்கவும்.

1973ம் ஆண்டு மார்ச் மாதத்தில் ஒருநாள் தேசத்துக்காக வீட்டைவிட்டு முழுதாக புறப்பட்டபின்னர் அந்தத் தாய் நிறைய நாட்கள் மனதுக்குள் தனது மகனுக்காக ஏங்கி இருப்பார். ஒரு இயல்பான தாயின் குணத்துடன் தனது மகன் இந்த போராட்ட களத்தில் இருந்து வெளிவந்து சாதாரணவாழ்வு வாழவேணும் என்று அந்த தாய் மனதுக்குள் வெம்பிஇருக்கலாம்.ஆனால் ஒருநாளும் அவர் தனது மகனை எல்லாவற்றையும் விட்டுவா என்று அழைத்தது இல்லை. அப்படி அழைத்தாலும் அந்த மகன் வந்துவிடப் போவதில்லை என்பது எல்லாரையும்விட அவருக்குத்தானே தெரியும். அப்படி ஒரு ஆழ்ந்த புரிதல் மகனின் பாதையின் மீது தாய்க்கும் இருந்தது.

தாய்க்கு மட்டுமல்ல அந்த மகனுக்கும் தாய்மீது மனதுக்குள் பாசமும், அன்பும், இருந்திருக்கும். ஆனால் அந்த பாசத்துக்காக எந்தக் கணத்திலும் அவர் தன் போராட்ட பாதையில் திரும்பிப்போனதில்லை. இப்படியான சில சம்பவங்களின் காலச்சாட்சிகளாக நாம் யாரோ விளங்கிக்கொண்டுதான் இருக்கிறோம். 1983ம் ஆண்டின் ஒருநாளில், வல்வெட்டித்துறை இராணுவத்தால் தேசியத் தலைவரின் வீடும், இராணுவ முகாமுக்கு அண்மையில் இருந்த சில வீடுகளும் எரிக்கப்பட்டுவிடுகிறது. இரவு முழுதும் வீடெரித்து வெறியாட்டம் ஆடிய இராணுவம் நிலம்தெளியத் தொடங்கியதும் முகாம் திரும்பினர். அப்போது ஆயுதப் பொறுப்பாளராக இருந்த கப்டன் பண்டிதர்தான் (ரவீந்திரன்) ஆவணங்களுக்கும் பொறுப்பாக இருந்தான். அவனும் கப்டன் லாலாவும் (ஞானேந்திரமோகன்), கப்டன் வாசுவும் (சுதாகர்), நானும் சென்று எரிக்கப்பட்ட வீடுகளை, தலைவர் வீடு உட்பட படமெடுத்து திரும்பிக்கொண்டிருந்தோம். அந்த நேரம் தலைவர் பொலிகண்டி பாலாவிக் குடியேற்றத்திட்ட வீடு ஒன்றில் இருந்திருந்தார். அவரைப் பார்ப்பதற்காக போய்க் கொண்டு இருந்தபோது பொலிகண்டி கந்தவனகோயில் மடம் ஒன்றில் ஒருசிறு சாக்கு படங்கு போட்டு அதற்குள் வேலுப்பிள்ளை பார்வதி தம்பதிகள் சின்ன சட்டிக்குள் ஏதோ சமைத்துக்கொண்டிருந்தனர்.



**மார்க்சிம் கோர்க்கியின் உலகப்புகழ் பெற்ற தாய் நாவலின் நாயகன் பாவெலின் தாயார் போன்று புரட்சிக்கான முன்னெடுப்புகளிலும், அதன் முண்ணணியிலும் நின்ற தாய் போன்று பார்வதி அம்மா இல்லாமல் இருந்திருக்கலாம், ஆனால் ஒரு விடுதலைப் போராட்டத்தின் மூச்சுக்காற்றை பிரசவித்தவர் அவர். ஆயிரமாயிரம் ஆண்டுகால ஒரு இனவரலாற்றின் மீது புதிய பரணியை எழுதிக்கொண்டிருக்கும் ஒரு மனிதனை தன் கருவில் சுமந்தவர்வர். அடக்கப்பட்டும், அடங்கியும், ஒடுங்கியும் கிடந்த ஒரு தேசிய இனத்தின் சிந்தனை முறைகளை முழுதாக திருத்தி எழுதிய ஒரு அற்புத போராளித் தலைவனை பத்து மாதம் தாங்கிப் பெற்றவர் அவர். இது ஒன்று போதும் அவரை தேசத்தின் அன்னையாக நாம் அஞ்சலிக்கவும், ஆராதிக்கவும்.**

தலைவரிடம் சென்று நிலைமைகளைப் பற்றிக் கதைக்கும்போது "உங்கள் அப்பாவும் அம்மாவும் மடத்தில் இருக்கினம்..." என்று சொன்னபோது அந்த ஒப்பும் உவமையும் இல்லாத் தலைவர் சொன்னார் "அப்பா, அம்மா மடத்திலை? நான் ரோட்டிலை... நீங்கள் போய் உங்கடை வேலைகளை செய்யுங்கோ..." என்று. ஒரு 200 மீற்றர் தூரத்தில் தனது அம்மா வீடு இல்லாமல் மடத்தில் இருக்கிறார் என்று தெரிந்தும் அவர்களை சென்று பார்ப்பதிலும் பார்க்க விடுதலைக்காக உழைப்பதுதான் முக்கியம் என்று நினைத்த ஒரு உன்னத மனிதனை இந்த இனத்துக்கு தந்த ஒரு காரணத்துக்காக தன்னும் நன்றியுடன் நினைக்க வேண்டும்.

எத்தனையோ வீடுகள் அன்று எரிக்கப்பட்டிருந்தது. எத்தனையோ உறவுகள் வீடுகளை இழந்து அந்த இரவில் வேறிடம் சென்றனர். அவர்களை சந்திக்காமல் தனது தாயை மட்டும் சந்திப்பதை விரும்பாதவர் அந்த மகத்தான தலைவன். இந்த ஒப்பற்ற அற்புதக்குணம் அவரின் தாயின் மனதிலும் இருந்ததை அறியக்கூடியதாக ஒரு சம்பவம் இருந்தது.

1983 யூலைக்கு பின்னர் தமிழ்நாட்டில் பயிற்சித் தளங்களையும், கட்டமைப்புகளையும் உருவாக்குவதற்காக தலைவரும் உறுப்பினர்களும் சென்றிருந்தநேரம். இரண்டு இலக்கங்களில் இருந்த இயக்க உறுப்பினர் தொகை மூன்று இலக்கத்தை தொட்டுநின்ற நேரமும் அதுதான். உறுப்பினர்களின் உணவுத்தேவை, போக்குவரத்து தேவை என்பனவும் வேறு தேவைகளும் இயக்கத்தை உலுப்பிய நேரம் அது.

நிதித் திரட்டலுக்காவும், போராட்ட விளக்கத்தை தமிழ்நாட்டு மக்களுக்கு கொடுப்பதற்காகவும் 1983 செப்டம்பரில் திருச்சி, மயிலாடுதுறை, திருத்துறைப்பூண்டி, கோயம்புத்தூர் போன்ற இடங்களில் விடுதலைப் புலிகளின் கண்காட்சி அரங்குகள் உருவாக்கப்பட்டிருந்தன.

அதில் மக்கள் அளிக்கும் உண்டியல்நிதியும், காசிஆனந்தனின் புத்தகம் விற்றுவரும் நிதியும்தான் அந்த நேரத்து தமிழ்நாட்டில் இயங்கிய எமது அமைப்பின் அன்றாட தேவைகளுக்கான வருமானம். திருச்சி தேவர்மண்டபத்துக்கு அருகில் அமைக்கப்பட்டிருந்த விடுதலைப் புலிகளின் கண்காட்சியில் மேஜர் கரன் (குமரப்பா, புலேந்தியுடன் வீரச்சாவடைந்தவர், கேணல் சங்கர் அண்ணாவின் இளைய சகோதரர்) என்னுடன் நின்றிருந்தார். ஒருமாலைப் பொழுதில் கண்காட்சி அலைமோதிக்கொண்டிருந்த நேரத்தில் கூட்டத்தில் ஒருவராக தேசியத் தலைவரின் தாயாரும் நின்றிருந்தார். கையினில் ஏந்திக் களித்த மகன் கைகளில், ஒரு தேசத்தின் விடுதலையை தாங்கிய புகைப்படங்களைப் பார்த்து மனதுக்குள் நிச்சயம் 'ஈன்ற பொழுதினில் பெரிதுவக்கும் தாயாகி...' இருந்திருப்பார். அதன்பின்னர் தினமும் அவர் திருச்சி கண்காட்சிக்கு வந்துகொண்டுதான் இருந்தார். எந்த நேரத்திலும் மகனை பார்க்கவிரும்புவதாகவோ, மகனை வந்து தன்னை சந்திக்கவோ அந்தத் தாய் சொல்லவே இல்லை. இதுதான் அந்த தாயின் சிறப்பு. மகனின் பாதையில் ஒருபோதும் குறுக்கிட்டதே இல்லை.

தலைவருக்கும் தனது தாய் திருச்சிக்கு வந்துவிட்டிருந்தது தெரிந்துவிட்டிருந்தது. அவரும் அமைப்பு வேலை சம்பந்தமாக திருச்சிக்கும், திருச்சிக்கு அருகில் உள்ள மதுரைக்கும் ஏறத்தாள ஒவ்வொரு வாரமும் வந்து போய்க் கொண்டுதான் இருந்தார். அவர் நினைத்திருந்தால் தனது தாயை போய் பார்த்து இருக்கலாம்.

எத்தனை தாய்மார் இப்படி வீடுகளை இழந்து தமிழ் நாட்டின் அகதி முகாம்களில் இருந்தபொழுதில் தனது தாயை மட்டுமே பார்க்கவேணும் என்று தலைவர் விரும்பியது இல்லை.

பார்வதி அம்மா தமிழ்நாட்டுக்கு வந்து இரண்டு வருடங்களின் பின்னரே 1985ல் தான் தலைவர் தன் தாயை சந்தித்தார். போராட்டத் தலைவனின் பாதையில் குறுக்கிடாத தாயும் தாய்காக எதையும் விட்டுவராத மகனுமாக இருந்தாலும் தலைவருக்கு இருந்த மிகப்பெரிய ஆளுமைகளின் முதல் ஊற்றாக அவரின் தாயே இருந்திருக்கிறார்.

தன் அனைத்தையும் தொப்புள் கொடிக்குள்ளாக ஊட்டி வளர்த்த அந்த தாய் எரிந்து முடிந்துவிட்டார். அவரின் சாம்பலைக்கூட காட்டுமிராண்டிச் சிங்களப் பேரினவாதம் எடுத்து எறிகிறது என்றால் அது எந்தளவுக்கு அந்த தாயின் இருப்பிலும், இறப்பிலும், எரிந்துமுடிந்த சாம்பலிலும் பயம்கொண்டு இருக்கிறது. பார்வதி அம்மாவின் சாம்பலை கடலில் கரைத்து ஒளிக்கலாம். அவரின் எஞ்சிய எலும்புச்சிறு துண்டுகளை எங்காவது வீசிவிடலாம். ஆனால் அந்த தாய் பெற்ற மகனின் நேர்மையும், உண்மையும், உறுதியும் யாரால் எடுத்து வீசிவிடமுடியும்.

***விடுதலைக்கான அந்த அற்புதத்தை பெற்றதாயே நன்றி உனக்கு!***

(இன்னும் குட்டிபோடும்)



# எங்களவனை அடிக்கும் போது பாயாத சட்டம் சிங்களவனை அடிப்பேன் என்ற போது பாய்கிறதே !

சிறை மீண்ட சீமான் எழுதும் 'திருப்பி அடிப்பேன்' அதிரடி அனல் கனல் (தொடர்-06)

*இலங்கையின் முள்வேலி முகாமில் இருந்த சகோதரி ஒருத்தி பேசினாள்... 'அண்ணா, முழங்கால் அளவு தண்ணீர். படுக்கக்கூட இடமில்லை. மடியில் இருக்கும் குழந்தைக்குக் கொடுக்க பால் இல்லை. சாப்பாட்டுக்கு திண்டாடுற மாதிரியே, அன்றாடக் கடன்களை கழிக்கவும் அல்லாட வேண்டிய நிலை. மாற்று உடைகள் இல்லாமல் தவிக்கிறோம் அண்ணா இங்கே சாகக்கூட எங்களுக்கு வழி இல்லை. ஒருவர் குரல்வளையை இன்னொருவர் நெருச்சு செத்தாத் தான் உண்டு!'*

*என் தொலைபேசியை ஒட்டுக்கேட்கும் உளவுத் துறை பெருமகன்களே... இந்தக் கண்ணீரையும் கதறலையும் உரியவர்களிடம் கொண்டு போய்ச் சேருங்கள். அப்படியாவது அவர்களுடைய கல்மனது கரைகிறதா எனப் பார்க்கலாம். ஈழத்தில் இளவு விழுந் தாலும், இராமேஸ்வரம் இரத்தக்களறி ஆனாலும்,*

**தமிழர்களின் தலையில் கால் வைத்து விளையாடுவதில் அன்னை சோனியாவுக்கும் அறிவார்ந்த மன்மோகன் சிங்கிற்கும் மட்டற்ற மகிழ்ச்சி. சிங்கள இராணுவத்தோடு கூட்டுப்பயிற்சியில் இறங்க இந்திய இராணுவம் செல்வது ஏன்? இலங்கை அரசை ஆதாரத்தோடு வளைக்க ஐ.நா.குழு ஆயத்தமாகி வரும் வேளையில் இந்திய இராணுவம் அங்கே செல்வது கூட்டுப் பயிற்சிக்கா? இல்லை குழப்பம் உண்டாக்கும் சூட்சிக்கா?**

*தனுஷ்கோடியில் தமிழன் பிணம் மிதந்தாலும்... மூச்சு விடாமல் இருப்பது எங்களின் தமிழர் குணம். ஆனால், 'ஐயோ' எனக் கதறினால், 'அனுப்புங்கள் பொலிஸை...' என்கிற உத்தரவு மட்டும் பொத்துக் கொண்டு வந்துவிடும்.*

*'இலங்கைக் கடற்படைக்கு இந்திய கடற்படை பயிற்சி அளிக்கும். இருநாட்டுப் படைகளும் கூட்டுப் பயிற்சியில் ஈடுபடும்!' என இந்தியப் பாதுகாப்புச் செயலாளர் பிரதீப்குமார் அறிவிக்க....அதை எதிர்த்து இந்த அன்னை மண்ணில் இருந்து ஒரு குரல் கூட கிளம்பவில்லை. 'எதற்கு அங்கே இந்திய இராணுவம்? மிச்சம் இருக்கும் தமிழர்களையும் சுட்டு வீழ்த்தவா? எங்களின் மீனவர்களை சிங்களவன் சுட்டான்.... சீனன் சுட்டான்.....இறுதியாய் இந்தியனும் சுடப்*




*போகிறானா? இல்லை, 'நீங்கள் சரியாகச் சுடு வதில்லை.... நாங்கள் சொல்லிக்கொடுப்பது போல் சுட்டால், தமிழர்களின் தலை பறங்கிப்பழமாய் சிதறிவிடும்! எனக் கற்றுக்கொடுக்க போகிறீர்களா?' என காங்கிரஸ் அரசின் சட்டையை உலுக்கி? கேள்விகேட்க இங்கே ஆள் இல்லை.*

*'கச்சதீவைச் சுற்றி சீன இராணுவம் இருப்பது ஏன்?' எனத் தமிழர்களுக்காக கேட்க இங்கே எந்த நாதியும் இல்லை. இதைச் சொன்னால், 'சீமான் அச்சுறுத்தலை ஏற்படுத்துகின்றான்' என அலறுகிறார் கள். வெள்ளையர் காலத்தில் இருந்த வாய்ப்பூட்டுச் சட்டம் இந்தக் கொள்ளையர் ஆட்சியிலும் தொடர் கிறதே! நெய்வேலியில் கூட்டம் நடத்த அனுமதி கேட்டால், 'சீமான் பேசினால் மின் உற்பத்தி பாதிக் கப்படும்!' எனச் சொல்லி தடை விதிக்கிறார்கள். மின் உற்பத்திக்கும் என் பேச்சுக்கும் என்ன சம்பந் தம்? நான் பேசாவிட்டால் மட்டும் மின் உற்பத்தி சீராகி, தமிழகம் ஜொலிக்கப் போகிறதா? ஆற்காட் டார் இருக்கும் வரை 'இருண்டபூமி' யாகத்தானே தமிழ் நாடு இருக்கும்? குரலை அடக்க எப்படியெல் லாம் யோசிக்கிறார்கள் அரசாங்கத்தில்? அதையும் மீறிப் பேசினால்,இறையாண்மை அஷ்திரத்தை ஏவி விடுகிறார்கள். எங்களைப் போல் இறையாண்மை யைக் காக்கக்கூடியவர்கள் யாரேனும் இருக்கிறார் களா இந்த மண்ணில்? இழிச்சவாயர்களாக, ஈனப் பிறவிகளாக ஏதும் செய்ய வழியின்றி, இன்றுவரை அழுகையை மட்டுமே ஆயுதமாக ஏந்தும் எங்களைப் பார்த்து இறையாண்மை மீறல் என்கிறீர்களே, உங்களிடம் ஒரே ஒரு கேள்வி.... சிங்களவன் இன்று வரை ஒரு மலையாள மீனவனையாவது தாக்கியிருக் கிறானா? இலங்கையின் கடல் எல்லையை எட் டாமல் மீன்பிடிக்க மலையாளி மட்டும், கலை கற்று வைத்து இருக்கிறானா? மலையாள மீனவனைத் தாக்கினால், அடுத்து என்ன நடக்கும் என்பது சிங் களவனுக்குத் தெரியும். இந்திய அரசியலில் அதிமுக் கிய சக்திகளாக இருக்கும் மலையாளிகள் சிங்களவ னின் குடுமியை உலுக்கி விடுவார்கள்.*

*ஆனால், எத்தனை தமிழர்கள் சிங்களவனால் சிதைக்கப்பட்டாலும், எங்கள் பிரதிநிதிகள் எதிர்த்துக் கேட்கப்போவதில்லை. தியாகப் பெருந்தகை, அருட் பெரும் ஜோதி அன்னை சோனியா காந்தியின் முகம் சுண்டிவிடக் கூடாது என்பது தான் இங்கு இருப்பவர்களின் முழு நேரக்கவலை.*

*இந்தத் தைரியத்தில்தான் தமிழர்களின் தலையில் கால் வைத்து விளையாடுவதில் அன்னை சோனியா வுக்கும் அறிவார்ந்த மன்மோகன் சிங்கிற்கும் மட்டற்ற மகிழ்ச்சி. சிங்கள இராணுவத்தோடு கூட்டுப்பயிற்சி யில் இறங்க இந்திய இராணுவம் செல்வது ஏன்? இலங்கை அரசை ஆதாரத்தோடு வளைக்க ஐ.நா.குழு ஆயத்தமாகி வரும் வேளையில் இந்திய இராணுவம் அங்கே செல்வது கூட்டுப் பயிற்சிக்கா? இல்லை குழப்பம் உண்டாக்கும் சூட்சிக்கா? சிங்களவனின் இனப்படுகொலையை மறைக்கவே இந்தியா முயல் கிறது என்பது என் அழுத்தமான குற்றச் சாட்டு. 'கொஞ்சம் இரத்தம் தாருங்கள்.... நிறைய சுதந்திரம் தருகி றோம்' என்றான் இந்திய தேசிய இராணு வத்தை நிறுவிய புரட்சியாளன் நேதாஜி சுபாஸ் சந்திரபோஸ். 'நிறைய இரத்தம் தந்து விட்டோம். கொஞ்ச சுதந்திரம் தாருங்கள் உலகத்திலே!' என்பது தான் தமிழ்த் தேசியப் புரட்சியாளன் அண்ணன் பிரபாகரனின் கோரிக்கை. ஒரு போதும் இந்தியா வுக்கு எதிரான நிலைப்பாட்டை எடுத்து எடுத்து விடக் கூடாது என்பதில் இறுதிவரை புலிகள் உறுதி யாக இருந்தார்கள். புலிகளிடம் சீன அரசு இணக்கம்*

*கொள்ளத்துடித்ததை உலகத்தில் எவரேனும் மறுக்க முடியுமா?*

*'என் தாய்த்தமிழ் உறவுகள் வாழும் இந்தியாவுக்கு எதிராக என் சிந்தை எப்போதும் திரும்பாது!' என உரக்கச் சொன்னவர் அண்ணன் பிரபாகரன். ஆனால், தாய்த்தமிழ் உறவுகள் வசிக்கும் இந்தியா, போரின் போது சிங்களத்திற்கு செய்த உதவிகள் போதாது என இப்போதும் கூட்டுப் பயிற்சிக்குப் படை அனுப்புகிறது. பெருமதிப்புக்குரிய பிரதமர் அவர்களே.... கொமன்வெல்த் மோசடி, அலைக்கற்றை அமளிது மளி என உங்களைச் சுற்றி இத்தனை களேபரங்கள் நடக்கையிலும்; தமிழர்களுக்கு எதிரான நடவடிக்கைகளை மட்டும் தவறாமல் செய்கிறீர்களே.... சிங்களத்துக்கும் சீக்கியத்துக்கும் அப்படி என்ன அண்ணன் – தம்பி உறவு? ஈழத் தமிழர்கள் என்ன ஆனாலும் வாய்பேசா மௌனியாக இருக்கும் நீங்கள், சீக்கிய இனத்துக்குச் சிக்கல் நேர்ந்தால் ஊமையாகவே உட்கார்ந்து இருப்பீர்களா ஐயா? பொழுது போகாத குறைக்குப் புலிகள் கொல்லப் பார்க்கிறார்கள் எனக் கிளப்பிவிட்டுத் தாடியை நீவிக்கொள்ளவும் செய்கிறீர்கள். இதை எல்லாம் முன்கூட்டியே கண்டுபிடித்து உங்களை உஷார்ப்படுத்திய உளவுத் துறை மும்பையில் 25 தீவிரவாதிகள் நுழைந்து 150 க்கும் மேற்பட்டோரை சல்லடையாக்கியபோது எங்கே போய் உறங்கிக் கிடந்தது?*

*கார்கில் போரில் மடிந்த வீரர்களுக்கு வீடு கட்டிக் கொடுத்ததில் ஊழல், கொமன் வெல்த் விளையாட்டுப் போட்டியில் ஊழல் என உலக அளவில் இந்தியாவின் மானத்தைக் கப்பலில் ஏற்றிய காங்கிரஸ்காரர்களே... இப்போது 1.76 இலட்சம் கோடிக்கு ஊழல் புரிந்து உலக மகா சாதனையையும் செய்து இருக்கிறீர்களே... ஊழல் செய்வது எப்படி? அவை உலக்குக்குத் தெரியும் போது உணர்ச்சியற்ற ஜடமாக இருப்பது எப்படி? விசாரணை என வந்தால், ஆவணங்களைத் தொலைப்பது எப்படி? அப்படியே விசாரணை நடந்தாலும், அதனை இழுத்தடிப்பது எப்படி? ஒரு ஊழலை மறைக்க அதைவிடப் பெரிய ஊழலைச் செய்வது எப்படி என்கிற வித்தைகளை எல்லாம் இலங்கை அரசுக்கும் கற்றுக்கொடுத்து அவர்களையும் ஊழலில் சாதிக்கவைக்க... காங்கிரஸ் கட்சியின் அமுக்கல் படையை இலங்கைக்கு அனுப்புவ்துதானே சரியாக இருக்கும்?! அதைச் செய்யாமல் ஏனய்யா இன்னமும் எங்களைக் குதறுவதிலேயே இருக்கிறீர்கள்?*

*தங்களைச் சுற்றி இவ்வளவு அழுக்கு மூட்டைகளை வைத்திருக்கும் உங்களைப் பார்த்து இப்படித்தான் கோஷம் எழுப்பத் தோன்றுகிறது. சோனியாஜி... மன்மோகன்ஜி... 2ஜீ... 3ஜீ... அடச்சீ!*

*திருப்பி அடிப்பேன்*

நன்றி – ஜூனியர் விகடன்

## சிறிலங்காவை போர்க்...

தாக இருந்ததும் இங்கு குறிப்பிடத்தக்கது.

தற்போது இந்த நாடு கடந்த தமிழீழ அரசின் ஊடாக, புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் சிறிலங்கா மீது சுமத்திவரும் போர்க் குற்றச்சாட்டுக்களை தடுத்து நிறுத்தும் நடவடிக்கையில் மகிந்த அரசு வெளிப்படையாக இறங் கியுள்ளமையை அறியக்கூடியதாக உள்ளது. புலம்பெயர்ந்த தமிழர்களு டன் பேச்சுவார்த்தைகளை மேற்கொள்ள அரசாங்கம் தீர்மானித்துள்ள தாகவும் எதிர்வரும் ஏப்ரல் மாதத்தில் இந்த பேச்சுவார்த்தையை நடத்துவதற்கு வேண்டிய அனைத்து நடவடிக்கைகளையும் ஒழுங்குபடுத்தியுள்ளதாகவும் சிறிலங்கா அரச தரப்பு பேச்சாளர் ஒருவர் தெரிவித்துள்ளதாக கொழும்பு ஊடகம்கள் செய்தி வெளியிட்டுள்ளன. மேற்குலக நாடுகள் சிறீலங்கா தொடர்பாகக் கொண்டிருக்கும் எண்ணக்கருவை மாற்றுவதற்காக புலம் பெயர்ந்துள்ள தமிழர்களின் ஒத்துழைப்பைப் பெற்றுக்கொள்வதே இந்தப் பேச்சுவார்த்தையின் முக்கிய நோக்கமாகும் எனவும் அந்த அரச தரப்பு பேச்சாளர் கூறியுள்ளதாக கூறப்படுகிறது.

இந்தப் பேச்சுவார்த்தை நாடு கடந்த தமிழீழ அரசுடனேயே இடம் பெறவுள்ளதாகவும் இதன் பிரதமர் எனக் கூறப்படும் ருத்திரகுமாரன் இந்தப் பேச்சுவார்த்தைக்காக அடுத்த சில வாரங்களில் கொழும்பிற்கு பயணம் செய்யவுள்ளதாகவும் தகவல்கள் வெளிக்கசிந்துள்ளன. அதற்கு முன்பாக, தேசியத்தில் உறுதியாக நிற்பவர்களும், சிறிலங்காவின் மீதான போர்க் குற்றச்சாட்டினை கைவிட மறுப்பவர்களும் நாடு கடந்த அரசில் இருந்து வெளியேற்றுமாறு பணிக்கப்பட்டுள்ளதாகவும் இதன் அடிப் படையிலேயே நாடு கடந்த அரசில் உள்ள இன்னொரு அணியினர் கழற் றிவிடப்படவுள்ளதாகவும் தெரியவருகின்றது.

புலம்பெயர்ந்த தமிழ் மக்களின் ஒரே சக்தியாக நாடு கடந்த அரசினை கட்டமைத்து தற்போது அதனுடன் பேசுவதன் ஊடாக தமிழ் மக்களுக்கான ஒரு சிறு அரசியல் தீர்வை வழங்குவதுபோல் காட்டிவிட்டு போர்க் குற்றச்சாட்டுக்களில் இருந்து தங்களை விடுவித்துக்கொள்வதே சிறிலங்கா வின் தற்போதைய திட்டம் என்று தெரியவருகின்றது. சிறிலங்காவின் இந்தத் திட்டத்திற்கு எதிராக நிற்பவர்களையும் செயற்படுபவர்களையும் அடையாளம் கண்டுகொள்ளவும், அவர்களை அச்சுறுத்துவதற்கும் ஏற்கனவே கோத்தபாய ராஜபக்சவினால் திட்டங்கள் வகுக்கப்பட்டு பலர் களமிறக்கப்பட்டுள்ளனர். இதனை இலங்கையில் இருந்து வெளிவரும் ஊடகங்களே உறுதிப்படுத்தி செய்திகளும் வெளியிட்டுள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கது.

எனவே, சிறிலங்காவின் அற்ப சலுகைகளுக்காக பல ஆயிரக்கணக் கான தமிழ் மக்களின் உயிர்களை இந்த நாடு கடந்த தமிழீழ அரசு பேரம்பேசி விற்கப்போகின்றார்களா? அல்லது சிறிலங்காவை போர்க் குற்றவாளியாக்கி, இனப்படுகொலையாளிகள் என்பதை நிரூபித்து தனித் தமிழீழத்திற்கு அழைத்துக் கொண்டு செல்லப்போகின்றார்களா என்ற கேள்வியே எழுகின்றது.

நன்றி - தமிழ்க்கதிர்

# நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் புலம்பெயர் தமிழ் மக்கள் மத்தியில் அந்நியப்பட்டு வருகின்றதா?

இதுவரை, புலம்பெயர் தமிழ்த் தேசிய தளங்களுடன் மோதல் போக்கைக் கடைப்பிடித்து வந்த நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் தற்போது, அதில் அங்கம் வகிக்கும் தமிழ்த் தேசிய செயற்பாட்டாளர்களை வெளியேற்றும் முடிவை எடுத்துள்ளதாக அதன் அவைத் தலைவராக அறிமுகப்படுத்தியுள்ள திரு. பொன் பால்ராஜன் அவர்கள் ஊடகங்களில் தெரிவித்துள்ளார்.

அவரது இந்த அறிவித்தல், புலம்பெயர் தமிழீழ மக்கள் மத்தியில் பெரும் அதிருப்தியைத் தோற்றுவித்துள்ளது. இந்த அறிவித்தலின் பின்னர், லண்டனில் நடைபெற்ற நிகழ்வு ஒன்றை மக்கள் புறக்கணித்து அதிர்ச்சி வைத்தியம் செய்துள்ளனர்.

தற்போது துவிச்சக்கர வண்டிப் பிரச்சாரம் ஒன்றை லண்டனில் மேற்கொண்டுள்ள நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் மாவீரர், முன்னாள் போராளிகள் குடும்ப நலம் பேணும் அமைச்சராக அறிவிக்கப்பட்ட திரு. உருத்திராபதி சேகர் அவர்களால் அழைப்பு விடுக்கப்பட்டு, வடமேற்கு லண்டனில் கூட்டப்பட்ட கூட்டம் ஒன்றில் 11 பேர் மட்டுமே கலந்து கொண்டனர். இவர்களில் 5 பேர் பிரித்தானிய தமிழர் பேரவை சார்பாகக் கலந்து கொண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது.

திரு. கே.பி. அவர்களால் முன்மொழியப்பட்டதாக இருந்தாலும், முள்ளிவாய்க்காலின் பின்னர் உலகளாவிய ஜனநாயகக் கட்டமைப்பின் அவசியத்தை உணர்ந்து கொண்ட தமிழ்த் தேசியவாதிகள் நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் உருவாக்கத்தை வரவேற்றதுடன், அதில் இணைந்து செயலாற்றவும் விரும்பினார்கள்.

ஆனால், நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தைத் தமது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்காக கே.பி. குழுவினர் மேற்கொண்ட தொடர் அராஜகம் காரணமாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தில் முழுமையாக இணைந்து பணியாற்றும் தமிழ்த் தேசியவாதிகளது எண்ணம் வீணாகிப் போனது.

நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தமிழீழ விடுதலைப் போராட்டத்திற்கான தளமாக அமைத்துக் கொள்ள விரும்பிய தமிழ்த் தேசியவாதிகளின் கோரிக்கைகள் அனைத்தும் நிராகரிக்கப்பட்ட நிலையில், தமிழ்த் தேசியவாதிகள் இரண்டாவது அமர்விலிருந்து வெளிநடப்புச் செய்து தமது அதிருப்தியை வெளிப்படுத்தினர். இதன் பின்னர் தொடர்ந்த அவை நடவடிக்கையின்போது மிகக் குறைந்த அங்கத்தவர்களே அவையில் இருந்த காரணத்தினால், அங்கு நிறைவேற்றப்பட வேண்டிய அரசியல் யாப்பு விவாதத்திற்கோ, அங்கீகாரத்துக்கோ விடப்படவில்லை.

ஆனாலும், தமது கைப்பிடி நழுவிவிடக் கூடாது என்ற கே.பி. குழுவினரால் அந்த அவையில் யாப்பு நிறைவேற்றப்பட்டதாக பொய்யான அறிவித்தல் கொடுக்கப்பட்டது. இது குறித்து, தமிழ்த் தேசியவாதிகளால் மதியுரைஞர் குழுவிடம் மேற்கொண்ட முறைப்பாட்டின் காரணமாக, அன்றைய நிகழ்ச்சிக் காணொளிப் பதிவைப் பல தடவைகள் போட்டுப் பார்த்து, தமிழ்த் தேசியவாதிகளின் குற்றச்சாட்டை ஒப்புக்கொண்டனர்.

மோசடியான தமது வார்த்தைகளை நியாயப்படுத்தும் விதமாக, மக்கள் பிரதிநிதிகள் அனைவரிடமும் அவையில் அங்கீகாரம் பெறாத யாப்பு மீது பதவிப் பிரமாணம் கோரப்பட்டது. இதனை, தமிழ்த் தேசியவாதிகள் முற்றாக நிராகரித்ததுடன், நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தொடர்ந்தும் பிழையான பாதையில் செல்வதை அனுமதிக்க முடியாது என்ற தீர்மானத்திற்கு வந்தனர். இதன்படி, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்திற்கான தேர்தல் நடைபெற்றது முதல் இதுவரை நடைபெற்ற முறைகேடுகள், ஜனநாயக விரோத செயற்பாடுகள் தொடர்பாக, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் பிரதமராகப் பதவி ஏற்றுள்ள திரு. ருத்திரகுமாரன் அவர்களுக்கு 10 அம்சக் கோரிக்கைகள் கொண்ட கடிதம் ஒன்று 17.02.2011 அன்று தமிழ்த் தேசியவாதிகளால் அனுப்பி வைக்கப்பட்டது. இதற்குப் பதிலளிப்பதற்காக திரு. ருத்திரகுமாரன் அவர்களுக்கு 14 நாட்கள் அவகாசம் வழங்கப்பட்டது.

இந்த நிலையில், தங்களது பிழைகளும். ஜனநாயக விரோத செயற்பாடுகளும் தமிழ்த் தேசியவாதிகளால் மக்கள் மத்தியில் அம்பலப்படுத்தப்பட்டுவிடும் என்ற அச்சம் காரணமாக, தம்மோடு இணைந்து பணியாற்ற மறுத்து, தமிழீழ விடுதலையை மட்டுமே ஓரே குறிக்கோளாகக் கொண்ட தமிழ்த் தேசியவாதிகளை, போலியான காரணம் ஒன்றினூடாக வெளியேற்றும் முயற்சி, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் அவைத் தலைவராக அறிமுகப்படுத்திக் கொண்ட திரு. பொன். பால்ராஜன் அவர்கள் மூலமாக மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் செயற்பாடுகளை அவதானித்துவரும் புலம்பெயர் தமிழ் மக்கள் மத்தியில் இந்த அறிவிப்பு மாறான விழைவுகளை ஏற்படுத்தியுள்ளது. முள்ளிவாய்க்காலுக்குப் பின்னரான அரசியல் கள நிலைகளுக்கு இசைவாக, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தமிழீழ விடுதலைக்கான தளமாக உருவாகும் என்ற புலம்பெயர் தமிழர்களின் எண்ணங்களில் விழுந்த அடியாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் செயற்பாடுகள் அமைவதால், அந்தத் தளம் மக்களால் புறக்கணிக்கப்படும் அபாயத்தில் உள்ளதையே அண்மைக்கால நிகழ்வுகள் உணர்த்துகின்றன.

**நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் செயற்பாடுகளை அவதானித்துவரும் புலம்பெயர் தமிழ் மக்கள் மத்தியில் இந்த அறிவிப்பு மாறான விழைவுகளை ஏற்படுத்தியுள்ளது. முள்ளிவாய்க்காலுக்குப் பின்னரான அரசியல் கள நிலைகளுக்கு இசைவாக, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தமிழீழ விடுதலைக்கான தளமாக உருவாகும் என்ற புலம்பெயர் தமிழர்களின் எண்ணங்களில் விழுந்த அடியாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் செயற்பாடுகள் அமைவதால், அந்தத் தளம் மக்களால் புறக்கணிக்கப்படும் அபாயத்தில் உள்ளதையே அண்மைக்கால நிகழ்வுகள் உணர்த்துகின்றன.**

காலங்கள் யாருக்காகவும் காத்திருப்பதில்லை. காலம் நமக்குக் கொடுத்துள்ள வாய்ப்புக்களைப் பயன்படுத்தி, எமது மண்ணையும், மக்களையும் மீட்டெடுக்கும் போராட்டத்தை நாம் அனைவரும் இணைந்தே மேற்கொள்வது அவசியமான தருணத்தில், சிங்கள தேசத்தின் விருப்பங்களுக்கு இசைவாக மக்களைப் பிளவு படுத்துவதும், புலம்பெயர் விடுதலைத் தளங்களைச் சிதைப்பதற்கான புதிய தளங்களை உருவாக்குதல், தமிழ்த் தேசியவாதிகளின் உணர்வுகளை நிராகரித்து, தனிப் பயணம் மேற்கொள்வது போன்ற தேசியச் சிதைவு நடவடிக்கைகளை நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் நிறுத்தி, மக்கள் மன்றங்களில் வாதங்களை முன் வைத்து தமிழீழம் நோக்கிய பாதையில் ஒன்றிணைந்து பயணிக்கும் முயற்சியில் நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் நேர்மையுடன் ஈடுபட வேண்டும்.

மக்களதும், தமிழ்த் தேசியவாதிகளையும் தொடர்ந்தும் நிராகரிப்பது, நாடு கடந்த தமிழீழ அரசு என்ற மதிப்பிற்குரிய சொற்பதத்தை செயலிழக்கச் செய்யும் முயற்சியாகவே மக்களால் உணரப்படும். இதுவே, அண்மைக்காலமாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் நிகழ்வுகளை மக்கள் புறக்கணிப்பதற்கான காரணமாக உள்ளது.

எனவே, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் மக்கள் பிரதிநிதிகள் அனைவரும் திறந்த மனத்துடன் கலந்துரையாடி, நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் தமிழீழ விடுதலைக்கான பாதையில் நேர்மையாகப் பயணிப்பதை உறுதிப்படுத்த வேண்டும்.

*– கரிகாலன்*

## மறக்க முடியுமா..?







வங்காலையில் மகிந்த சிந்தனை ஆட்சியில்
*08.06.2006 அன்று நடந்த மிகக்கொடூரமான படுகொலையை யாரும் மறந்திருக்க முடியாது. சந்தோசமாக வாழ்ந்த ஒரு குடும்பம் மிகக்கொடூரமாக கொல்லப்பட்ட நாள் இது. குழந்தைகளைக் கூட இத்தனை கொடூரமாகக் கொல்லும் வக்கிரம் கொண்ட சிங்களத் தலைமைகள் இந்தப் படுகொலைக்கான சிறு விசாரணையைக்கூட இன்றுவரை நடத்தவில்லை. இவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைக்கான நீதியை எங்கே தேடுவது..? கொல்லப்பட்ட எம் மக்களுக்கு நீதி கேட்க நாம் என்ன செய்கின்றோம்...?*
*இந்த அழிவுக்கு நியாயம் வேண்டாமா..? உலகத்தின் கதவுகளை ஓங்கித் தட்டுங்கள். இவர்களுக்கான நீதியைக் கேளுங்கள்!*



# புலம்பெயர் நாடுகளிலும் வெற்றி பெறுகின்றதா,

# சிங்கள தேசியவாதம்?

முள்ளிவாய்க்காலுக்குப் பின்னர் சிறிலங்கா அரசு தனது அத்தனை கவனத்தையும் புலம்பெயர் தமிழர்கள் மீது திருப்பியது. யுத்த பேரழிவுகளாலும், இராணுவ வன்முறைகளாலும் அச்சத்திற்குள் அடக்கப் பட்ட ஈழத் தமிழர்கள் மத்தியிலிருந்து தற்போதைக்கு எந்த எதிர்க்குரலும் எழப் போவதில்லை என்ற நிலையில், சிறிலங்கா அரசு மீது போர்க் குற்ற விசாரணை கோரியும், ஈழத் தமிழர்களுக்கு நீதி கோரியும் தொடர் போராட்டங்கள் நடாத்திவரும் புலம்பெயர் தமிழர்களது பலம் சிங்கள தேசத்தை அச்சுறுத்தியதால், அதற்கு எதிரான நடவடிக் கைகளில் சிறிலங்கா புலனாய்வாளர்களும், ஒட்டுக் குழு உறுப்பினர்களும் களம் இறக்கப்பட்டனர்.

சிறிலங்காவின் இந்த நகர்வுகளுக்குப் பின்னணியில் இந்திய உளவு நிறுவனமும் இணைந்து செயலாற்றி வருவது குறித்த தகவல்கள் கொழும்பு ஆங்கில ஊடகங்களால் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. உளவு நிறுவனங்களின் புலம் பெயர் தமிழர்கள் மீதான நடவடிக்கைகள் நான்கு பிரிவுக ளாகப் பிரித்து, நடைமுறைப்படுத்தும் திட்டம் வகுக்கப் பட்டது.

1) விடுதலைப் புலிகளது புலம்பெயர் கட்டமைப்புக்களை அச்சத்தினுள் வைத்திருப்பது. இதற்காக இந்தியா அமெரிக் காவின் உதவியையும் பெற்றுக்கொண்டது. இந்த நகர்வினை யடுத்தே புலம்பெயர் நாடுகளெங்கும் தமிழ்த் தேசிய பணி யாளர்கள் பலர் கைது செய்யப்பட்டு, தடுப்புக் காவல்களி லும் வைக்கப்பட்டனர். கடந்த சில நாட்களின் முன்னர் பாரிஸ் நகருக்கு வந்திருந்த ஜேர்மனியில் பலம்பெயர்ந்து வாழும் சிங்கள ஊடகவியலாளர்கள் உறுதிப்படுத்தியுள் ளார்கள். சனல் 4 இல் முதன்முதலில் வெளிவந்த தமிழ் இளைஞர்களைச் சுட்டுப் படுகொலை செய்யும் காணொ ளிக் காட்சிகளை அதற்கு வழங்கியவர்களும் இவர்களே என்பது குறிப்பிடத்தக்கது.

2) விடுதலைப் புலிகளது புலம்பெயர் கட்டமைப்புக்கள் மீதான புலம்பெயர் தமிழ் மக்களது நம்பிக்கையைச் சிதற டிக்கும் நகர்வுக்கு, விடுதலைப் புலிகளின் அதிருப்தியாளர் களும், சில இணையத் தளங்களும் புலனாய்வு அமைப்புக் களால் பயன்படுத்தப்பட்டது. முள்ளிவாய்க்காலின் பின்னர் அணி பிரிந்து கருத்து மோதல்கள் பரிந்தவர்களும் நிலை மையின் கொடூரம் புரியாமலேயே இந்தத் தளத்தில் இணைந் துகொண்டனர். ஆனாலும், இந்த உளவியல் போர் குறிப் பிடத்தக்க வெற்றியைப் பெற்றுக் கொடுக்கவில்லை. எனவே, இதற்காக உள்வாங்கப்பட்டவர்கள் மூலமாக, விடுதலைப் புலிகளின் புலம்பெயர் கட்டமைப்புக்களின் பலத்தைச் சிதைப்பதற்கான முயற்சியாக, புலம்பெயர் நாடுகளில் புதிய எதிர்த் தளங்கள் உருவாக்கப்பட்டன. அதற்கான பெரும் நிதியும் அவர்களுக்கு வழங்கப்பட்டது.

3) புலம்பெயர் தமிழர்கள் மத்தியில் பிளவுகளை உரு வாக்குவது. இதற்காக, நாடு கடந்த தமிழீழ அரசு குறி வைக்கப்பட்டது. கே.பி. அவர்களால் முன்மொழியப்பட்ட நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தில் கே.பி. குழுவினரே பலமான நிலையில் உள்ளார்கள். நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் பிரதமராக திரு. ருத்திரகுமாரன் அவர்கள் பதவி வகித்தாலும், அவர் கே.பி. குழுவினரின் முழுமை யான கட்டுப்பாட்டிலேயே வைக்கப்பட்டுள்ளார். இது, சிங்கள – இந்திய புலனாய்வாளாகளின் காய் நகர்த்தல்க ளுக்கு மிகவும் இலகுவானதாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் திட்டமிட்ட வகையில் வடிவமைக்கப்பட்டது. தமிழ்த் தேசிய கடும்போக்காளாகள் அங்கிருந்து வெளி நகர்த்தப்பட்டார்கள். கடந்த வார இறுதியில், நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்துடன் இந்திய உளவுத் துறையான 'றோ' நெருக்கமான தொடர்புகளைப் பெணி வருவதாக கொழும்பு ஊடகங்கள் வெளியிட்ட செய்தியினை நிராகரிக்க முடியாது.

4) தமிழ்த் தேசிய ஊடகங்கள் மீதான சிதைவு முயற் சிகள். அண்மைக் காலமாக, புலம்பெயர் தமிழ் ஊடகங்கள் மீது பல்வேறு அழுத்தங்கள் பிரயோகிக்கப்பட்டு வரு கின்றது. 'ஈழம் ஈ நியூஸ்' என்ற தேசிய இணைய ஊட கத்தின்மீது சைபர் தாக்குதல் நடாத்தப்பட்டது. பாரிசிலி ருந்து வெளிவரும் 'ஈழமுரசு' நிர்வாகி ஒருவர் மீது தாக்குதல் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. கொழும்பிலிருந்து வெளி வரும் தமிழ் ஊடகங்கள் மீது தேசிய விரோத செய்திகள், கட்டுரைகளை முதன்மைப்படுத்திப் பிரசுரிக்கும்படியும், தமிழீழம் சார்ந்த செய்திகளை இருட்டடிப்புச் செய்யும்படியும் உத்தியோகபூர்வமற்ற வகைளில் அழுத்தங்கள் பிரயோகிக் கப்பட்டிருப்பதை அதன் வாசகர்கள் உணர்ந்திருப்பார்கள்.

இந்த நிலையில், நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தேசியத்திற்கான பாதையில் நேர்படுத்தும் புலம்பெயர் தமிழர்களது விருப்பங்களும் பெரும் நெருக்கடியை எதிர் கொண்டுள்ளது. அமைதியான முறையில் மாற்றங்களை உருவாக்கி, நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தமி ழீழத்தை மீட்பதற்கான புலம்பெயர் போராட்டக் களமாக மாற்ற முற்பட்ட தமிழ்த் தேசிய உணர்வாளர்களது நியாய மான கோரிக்கைகள் நிராகரிக்கப்பட்டு, அச்சுறுத்தப்பட்டு, இரண்டாவது அமர்விலிருந்து வெளிநடப்பு செய்ய நிர்ப்பந் திக்கப்பட்டனர்.

இந்த நிலையிலும், நாடு கடந்த தமிழீழ அரசாங்கம் சிதைவுறுவதை விரும்பாத தமிழ்த் தேசிய உணர்வாளர் களை வெளியேற்றும் முயற்சியில் திரு. ருத்திரகுமாரன் நிர்ப்பந்திக்கப்பட்டார். இதனால், இரண்டாவது அமர்வில் விவாதிக்கப்பட்டு, அங்கீகரிக்கப்படாத அரசியல் யாப்பு மீது பதவிப் பிரமாணம் செய்யும்படி தமிழ்த் தேசிய உணர் வாளர்கள் மீது அழுத்தங்கள் பிரயோகிக்கப்பட்டது. இரண் டாவது அமர்வில் வெளிநடப்புச் செய்த 38 உறுப்பினர்கள் தவிர, அந்த அவையில் 45 பேரே இருந்த நிலையிலும், அங்கு அயசியல் யாப்பு மீதான பிரேரணையோ, அங்கீகாரமோ நடைபெறவில்லை என அதில் சமூகமளித்திருந்த மக்கள் பிரதிநிதிகளே தெரிவித்துள்ள நிலையில், அரசியல் யாப்பு மீதான பதவிப் பிரமாணத்தை விலியுறுத்துவதன் ஊடாக தமிழ்த் தேசியத்திற்காகப் பாடுபடும் மக்கள் பிரதிநிதிகளை வெளியேற்றும் முயற்சியும் அறிவிக்கப்பட்டுள்ளது.

சிங்கள – இந்திய சதி வலையில் சிக்கியுள்ள நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை மீட்டெடுத்து, அதனை முழுமை யான தமிழீழ விடுதலைக்கான தளமாக முன்னெடுக்கும் முயற்சியில் தமிழ்த் தேசிய உணர்வாளர்கள் அணி பிரியாது ஒன்றாகச் செயற்பட்டு சிங்கள – இந்தியச் சதி வலைகளை அறுத்தெறியும் பெரும் பொறுப்பு புலம்பெயர் தமிழர்களுக்கு உள்ளது. இந்தப் போர்க் களத்திலும் சிங்கள தேசியம் வெல்லுமானால், தமிழீழம் என்பது கனவாகவே கலைந்து விடும் என்பதை நாம் அனைவரும் உணர்ந்து கொள்ள வேண்டும்.

தேசியத்தின் பெயரால் திரு. ருத்திரகுமாரனிடம் புலம் பெயர் தமிழர்கள் பின்வரும் கோரிக்கைகளை முன்வைக்க வேண்டும்.

1) மக்களால் ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளின் தெரிவுகளை அங்கீகரிக்க வேண் டும். அல்லது, உடனடியாக அந்தத் தேர்தல் தொகுதிகளில் மீள் வாக்களிப்பு நடாத்த வேண்டும்.

2) அச்சுறுத்தப்பட்டு அல்லது வற்புறுத்தப்பட்டு இராஜி னாமா செய்ய வைக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகளை மீண் டும் உள்வாங்க வேண்டும்.

3) நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தேசிய பாதை யில் கொண்டு நகர்த்த முற்பட்டு, முரண்பாடு காரணமாக வெளிநடப்புச் செய்த பிரதிநிதிகளின் நியாயமான கோரிக்கைகள் நிறைவேற்றப்பட வேண்டும்.

4) நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் அவைக்கான 115 உறுப்பினர்களுக்கான தேர்தல்களும் நியாயமாக நடாத்தி முடிக்கப்பட்ட நிலையில், புதிதாகக் கூட்டப்படும் அமர் வில் அரசியல் யாப்பு முறையாக நிறைவேற்றப்பட வேண்டும்.

5) புலம்பெயர் தமிழ்த் தேசியக் கட்டமைப்புக்களுடன் முரண்பாடுகளையும், மோதல் போக்குக்களையும் நிறுத்தி, அனைத்துத் தளங்களுடனும் இணைந்து தமிழீழ விடுத லையை வென்றெடுக்கும் போர்க் களமாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை மாற்றி அமைக்க வேண்டும்.

6) நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின் இரண்டாவது அமர்விலிருந்து முரண்பாடு, அச்சுறுத்தல் காரணமாக வெளியேறிய கனடிய உறுப்பினர்கள் மீதான அசிங்கமான பிரச்சாரங்களையும், மிரட்டல் நடவடிக்கைகளையும் கட்டுப் படுத்தும் முகமாக, வெளிப்படையான கண்டனம் தெரி விக்க வேண்டும்.

7) நாடு கடந்த உறுப்பினர்கள் சிலர் மேற்கொள்ளும் கட்டுப்பாடுகளை மீறிய நடவடிக்கைகள் ஏனைய உறுப் பினர்களைப் புண்படுத்துவதுடன், குழு நிலைச் செயற்பாடு கள் மூலம் நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தின்மீதான மக்களது நம்பிக்கையைத் தகர்த்து வருகின்றது. அவர்களது குழுநிலைப் போக்கை நிறுத்தி, நாடு கடந்த தமிழீழ அர சாங்கத்தை அனைத்துத் தமிழீழ மக்களுக்குமான அதியுயர் ஜனநாயக பீடமாக உருவாக்க வேண்டும்.

இரண்டாவது அமர்வில் இடம்பெறாத அரசியலமைப்பு அங்கீகாரத்தின்மீது பதவிப் பிரமாணம் நடாத்தக் கோரும் நேர்மையற்ற, முறைகேடான அச்சுறுத்தல்களை நிறுத்த, தமிழ்த் தேசிய உணர்வாளாகளையும் இணைத்து, நாடு கடந்த தமிழீழ அரசை தேசியம் நோக்கிய பாதையில் நேர் படுத்த வேண்டும்.

தமிழ்த் தேசிய தளங்களையும், தமிழ்த் தேசிய உணர் வாளர்களையும் தொடர்ந்தும் நிராகரிப்பதன் மூலம், சிங்கள இனவாத தேசிய சிந்தனை புலம்பெயர் நாடுகளிலும் வெற்றி பெறுவதற்கு திரு. ருத்திரகுமாரன் அவர்களும், அவரைச் சார்ந்தவர்களும் காரணமாக இருக்கக் கூடாது என்பதை, எமது தாயகத்தின் விடுதலைக்காகத் தம்மை ஆகுதியாக்கிய மாவீரர்கள் பெயராலும், மக்கள் பெயராலும் வேண்டுகின்றோம்.

*– சுவிசிலிருந்து கதிரவன்*

**நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தைத் தமது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்காக கே.பி. குழுவினர் மேற்கொண்ட தொடர் அராஜகம் காரணமாக நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தில் முழுமையாக இணைந்து பணியாற்றும் தமிழ்த் தேசியவாதிகளது எண்ணம் வீணாகிப் போனது. நாடு கடந்த தமிழீழ அரசாங்கத்தை தமிழீழ விடுதலைப் போராட்டத்திற்கான தளமாக அமைத்துக்கொள்ள விரும்பிய தமிழ்த் தேசியவாதிகளின் கோரிக்கைகள் அனைத்தும் நிராகரிக்கப்பட்ட நிலையில், தமிழ்த் தேசியவாதிகள் இரண்டாவது அமர்விலிருந்து வெளிநடப்புச் செய்து தமது அதிருப்தியை வெளிப்படுத்தினர்.**

# THIS WEEKS FEA

## BURROWS HALL / MILNER

**$279,900**



**Bedrooms:** 4+1
**Washrooms:** 2
Over $55,000 In Renovations Upgrade. Pot Lights, Crown Mouldings, Laminate Floors In Liv/Din Rm; Open Concept Layout; Ceramic Floors



**SUGAN SIVARAJAH**
416-890-9999
sugan@futurerealtor.ca
www.futurerealtor.ca
HomeLife/Future Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
905-201-9977
905-201-9229



## BIRCHMOUNT/FINCH

**$205,000**



**Bedrooms:** 3
**Washroom:** 2
2 Washrooms Renovated In 2006, Newer Washer Drier And Stove 2005,2 Car Parkings, Indoor/Outdoor Swimming Pools,



**ASHOK RAGUPATHY**
647-401-9203
ashokhomes@gmail.com
HomeLife/Future Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## HARWOO

**$349,900**

**Bedrooms:** 3
**Washroom:** 3
5 Year Old House, Approx 1800 Sq Ft, Bright And Spacious, Modern Kitchen With Stainless Steel Appliances



Hom

## MARKHAM/DENISON

**$499,900**



**Bedrooms:** 4
**Washroom:** 4
Many Upgrades. Custom Kitchen.Bar Top And Spiral Stairs. 7 Panels Of Fence On Back Yard With Over 200 Sq Ft Of 'L' Shaped Party Deck.



**THAMIL SUBERAMANIAM**
416-358-6200
thamilrealtor@gmail.com
HomeLife/Future Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
905-201-9977
905-201-9229



## Marc

Mortgage பெற்றுக்கொள்வதில்
நடைமுறைக்கு வர உள்ளது !

- குறைந்த மாதாந்த கட்டு பண
- கூடிய பணத்தை Refinance
march 18 க்கு முதல் தொட



**Nithy Sathyakumar,** AMP
Mortgage Consultant
**416.728.2454**
nithy.s@bmsic.com

7 Eastvale Drive Unit #203
Markham, ON L3S 4N8
Office: 416-548-7475
Fax: 416-548-7496

**Bo**
**Mortga**

## WESTON/MAJOR MACKENZIE

**$769,900**



**Bedrooms:** 4+1
**Washroom:** 4
Approx. 3490 Sq.Ft Of Luxury And Only A Few Months New Main Floor.Den And Laundry, Entrance From Garage."No Side Walk",Lots Of Upgrade.



**PRASATH SATHIYANATHAN**
647-296-7932
prasath4homelife@gmail.com
HomeLife/Future Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
905-201-9977
905-201-9229



## HOOVER PARK / SANDIFORD

**$469,000**



**Bedrooms:** 3
**Washroom:** 3
Granite Countertop, Custom Faucet, Custom Backsplash * Rich Hardwood Thruout Main Floor *Oak Staircase *2nd Floor Laundry



**MATHAN MARKANDU**
416-888-5730
mathan7@gmail.com
HomeLife/Future Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
905-201-9977
905-201-9229



## MIDDLEFI

**$194,000**

**Bedrooms:** 2
**Washroom:** 2
Ensuite Laundry With Lots Of Cabinets. Two Full Washrooms. Steps To 24 Hrs Ttc, Park, Temples. Facilities:- Party/ Meeting Rm



# DON'T WAIT UNTIL YOU SAVE THE DOWNP

# TURED LISTING ...

## TAUNTON



GUNTHAN NADARAJAH
16-276-8025
nugunthan@gmail.com
www.RealHouse.ca
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## CORE/ COTTRELLE

**$549,900**



**Bedroom:** 4
**Washroom:** 3
Boasts 9 Ft Ceilings & Family Room, Walk Out Basment Ceramic In Kitchen And Wood Floors, Laundry Room On Upper Level.

JOY H SELVANAYAGAM
416-358-6928
dorinjoy2003@yahoo.ca
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## E-MARKHAM/N-14TH AVE

**$519,900**



**Bedrooms:** 4+2
**Washroom:** 4
Open Concept, Hardwoodfloors On Main Floor, 6 Parkingspaces, Can Accomodate Large Family, Newer Renovated Kitchen

SHANKAR MANICKAM
416-453-6666
ravi.viphome@gmail.com
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## n 18?

னமான மாற்றங்கள் march 18 முதல்

தை செலுத்துவதற்கும்

ம் பெற்றுக் கொள்வதற்கும்

கொள்ளவும்






Suren Nathan AMP
Mortgage Broker
416.723.2204
suren@bmsic.com

## DELANEY/CHURCH

**$439,000**



**Bedrooms:** 4
**Washroom:** 3
Main Fl Power Rom & Laundry W/Access To Double Car Garage.2nd Fl Features Master Bedroom W/Sitting Area. His/Hers Closet, Walk-In Closet

GNANA NAGULENDRAN
416 648 6561
gnagule@hotmail.com
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham ON, L3S 4N8
Bus: 905-201-9977
905-201-9229



## D & FINCH



SIVAPATHAM
6-895-4457
info@krishome.ca
www.krishome.ca
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## KENNEDY/ LAWRENCE

**$379,900**



**Bedrooms:** 3
**Washroom:** 3
Open Concept, Huge Family Size Kitchen. Finished W/O Basement. Fully Fenced Yard. Laminate Wood Floor; Oak Hardwood Staircase;

RASIAH SIVAKUMARAN
416-219-0032
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## STAINES/MORNINGSIDE

**$319,900**



**Bedrooms:** 3
**Washroom:** 2
Newly Painted! Eat In Kitchen W/ Ceramic Floor, Ceramic Backsplash & Wooden Cupboard! Fnshd Basement W/ Walk-Out To spectacular Garden

KIRUBA THANABALASINGHAM
416-894-9122
atkiruba@gmail.com
www.SoldHouse.ca
HomeLife/Future
Realty Inc., Brokerage
Independently Owned and Operated
7 Eastvale Road
Markham, ON L3S 4N8
Bus: 905-201-9977
Fax: 905-201-9229



## YMENT. $0 DOWNPAYMENT AVAILABLE



# S.P. IMPORTERS FURNITURE INC.

Importers & Distributers of High Quality Furniture & Mattresses

# FURNITURE SALE!!




























**OPEN 7 DAYS A WEEK 10AM – 9 PM** Check us online at - SPimporters.ca



















Over 15,000 sq. ft Showroom MORE than 2,000 items to choose...













Authorized Ashley & Sealy Dealer







We sell all kinds & sizes of mattresses including (orthopaedic, posturepedic & memory foam)

எஸ்.பி. இம்போட்டர்ஸ்

**2861 Lawrence Ave. East**
**@ Brimely, Scarborough**
**416-266-3077**

# 20வது ஆண்டு விருது விழா

தமிழர் தகவல் TAMILS' INFORMATION

# 20th Annual Awards Ceremony



கனடாவின் மூத்த ஊடகமாக அடையாளம் கொண்டுள்ள தமிழர் தகவல் சஞ்சிகையின் 20வது ஆண்டு பூர்த்தி நிகழ்வும் 20வது ஆண்டு விருதுகள் வழங்கும் வைபவமும் பெப்ரவரி 12ம் திகதி சனிக்கிழமை பிற்பகல் ரொறன்ரோ நகர மண்டப அங்கத்தவர் சபாபீடத்தில் நடைபெற்றது. மலர் வெளியீட்டுடன் நடைபெற்ற முதல் அமர்வுக்கு திரு. கதிர் துரைசிங்கம் தலைமை தாங்கினார். பொன்னையா விவேகானந்தன் ஆண்டு மலரை வெளியிட்டு வைத்து உரை நிகழ்த்தினார். 'வீணைமைந்தன்' கே.ரி. சண்முகராஜா சிறப்புரை வழங்கினார். தகவலின் முதன்மை ஆசிரியர் திரு எஸ். திருச்செல்வத்தின் உரையையடுத்து. விருதுகள் வழங்கும் வைபவம் நீதன் சண்முகராஜா தலைமையில் ஆரம்பமானது. தொடக்க உரையை பேராசிரியர் ஜோசப் சந்திரகாந்தன் நிகழ்த்தினார். திரு. சண் தயாபரன் வாழ்த்துரை வழங்கினார். பிரதம விருந்தினராக [illegible] சமய வரலாற்றுப் பேராசிரியர் பீற்றர் ஷால்க் (Prof. Peter Schalk) கலந்து கொண்டு சிறப்புரையாற்றினார். தமிழர் தகவலின் இந்த வருடத்திற்கான 'வாழ்நாள் சாதனையாளர் விருது'ம் பேராசிரியர் பீற்றர் ஷால்க் அவர்களுக்கே வழங்கப்பட்டது. மேலும் எண்மருக்கு இவ்வருட தமிழர் தகவலின் விருதுகள் வழங்கப்பட்டது. விருது [illegible]வின் புரவலர்கள் பிரதம விருந்தினரால் சிறப்புச் செய்யப்பட்டனர்.






# கச்சத்தீவு அருகே எண்ணெய் கிணறு தோண்டும் பிரித்தானிய நிறுவனம்!!

## அரிய வகை கடல்வாழ் உயிரினங்களுக்கும் மிகப் பெரிய அச்சுறுத்தல்!

கச்சத்தீவு அருகே பிரித்தானிய நிறுவனமான 'கெய்ர்ன் எனர்ஜி' எண்ணெய்க் கிணறுகள் தோண்டும் முயற்சியில் தீவிரமாக உள்ளது. இதனால் தமிழக மீனவர்களுக்கு ஆபத்து மேலும் அதிகரித்துள்ளதோடு, மன்னார் வள்ளைகுடாவில் உள்ள அரிய கடல்வாழ் உயிரினங்களுக்கும் பெரும் அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளதாக மீனவ அமைப்புகள், கடல் சூழல் ஆராய்ச்சியாளர்கள் அச்சம் தெரிவித்துள்ளனர்.

தமிழகத்துக்கு நேர் கிழக்கே உள்ள மன்னார் வளைகுடாப் பகுதி யுனெஸ்கோ அமைப்பால் கடல்சார் தேசிய பூங்காவாக அங்கீகரிக்கப்பட்டு, உயிர்க்கோள் காப்பகமாகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அரிய வகை பவளப் பாறைகள், கடல் தாவரங்கள், கடல் பசு, டொல்பின், கடல் அட்டை, கடல் ஆமை போன்ற அரிய கடல்வாழ் உயிரினங்களின் உறைவிடமாக இப்பகுதி திகழ்கிறது. எனவே, இங்குள்ள 21 குட்டித் தீவு பகுதிகளில் மீன் பிடிக்க அனுமதி மறுக்கப்பட்டுள்ளது.




இந்நிலையில், மன்னார் வளைகுடாவை ஒட்டிய கச்சத்தீவு பகுதியில், பிரித்தானியாவைச் சேர்ந்த 'கெய்ர்ன் எனர்ஜி பிரைவேட் லிமிடெட்' என்ற நிறுவனத்தின் துணை நிறுவனமான கெய்ர்ன் லங்கா என்ற நிறுவனம் எண்ணெய் வளம் குறித்த ஆய்வை மேற்கொண்டு வருகிறது. இல்ங்கையின் வடமேற்குப் பகுதியில் கச்சத்தீவு அருகே சுமார் 3 ஆயிரம் சதுர கிலோ மீற்றர் பரப்பளவில் இந்த ஆய்வை மேற்கொள்ள கெய்ர்ன் லங்கா நிறுவனத்துக்கு சிறீலங்கா அரசு 2008ம் ஆண்டு அனுமதி அளித்தது.

இதற்காக, அந்நிறுவனம் பூகம்பம் தொடர்பான முப்பரிமாண ஆய்வுகளை நடத்தி முடித்துள்ளதாகவும், இப் பகுதியில் 3 எண்ணெய்க் கிணறுகளை இந்த ஆண்டு மத்தியில் அமைக்க அந்நிறுவனம் முடிவு செய்துள்ளதாகவும் உறுதிப்படுத்தப்பட்ட தகவல்கள் வெளியாகியுள்ளன.

ஏற்கனவே, சிறீலங்காக் கடற்படையினரால் தமிழக மீனவர்கள் தொடர்ந்து தாக்கப்பட்டு வரும் நிலையில், இப் பகுதியில் எண்ணெய்க் கிணறுகள் அமைக்கப்பட்டால் தமிழக மீனவர்களின் பாதுகாப்பு மேலும் கேள்விக்குறியாகும் என அச்சம் தெரிவித்தார் கடலோர மக்கள் கூட்டமைப்பின் ஒருங்கிணைப்பாளர் எம்.புஷ்பராயன்.

'மீனவர்களை கடல் பகுதியிலிருந்து விரட்டிவிட்டு பன்னாட்டு நிறுவனங்களுக்கு கடல் பகுதிகளைத் தாரை வார்க்கும் முயற்சிதான் இது. மன்னார் வளைகுடா பகுதியில் எண்ணெய் எடுக்கும் முயற்சியில் இந்தியா, சிறீலங்கா நாடுகள் கூட்டாக ஈடுபட வேண்டும் என 1974 இந்தியா - சிறீலங்கா ஒப்பந்தத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில்தான் கச்சத்தீவு சிறீலங்காவிடம் தாரை வார்க்கப்பட்ட்து. ஆனால், அந்த ஒப்பந்தத்தை மீறி சிறீலங்கா செயல்படுகிறது. அதனை இந்திய அரசு வேடிக்கை பார்க்கிறது' என்றார் அவர்.

'கெய்ர்ன் எனர்ஜி பிரைவேட் லிமிடெட்' என்ற அந்த பிரித்தானிய நிறுவனம் இந்தியாவில் கெய்ர்ன் இந்தியா என்ற பெயரிலும், இலங்கையில் கெய்ர்ன் லங்கா என்ற பெயரிலும் துணை நிறுவனங்களை நடத்தி வருகிறத்து.

கச்சத்தீவு பகுதியில் எண்ணெய்க் கிணறுகள் அமைக்கப்பட்டால் அந்த திசைக்கே தமிழக மீனவர்கள் மட்டுமல்ல, இலங்கை மீனவர்கள் கூட செல்ல முடியாது. புயல், காற்று நேரத்தில் கூட அப் பகுதியில் ஒதுங்க முடியாத நிலை உருவாகும் என வல்லுநர்கள் எச்சரித்துள்ளனர்.

இந்த எண்ணெய்க் கிணறுகளால் மீனவர்களுக்கு மட்டும் ஆபத்து அல்ல, மன்னார் வளைகுடாவில் உள்ள அரிய வகை கடல்வாழ் உயிரினங்களுக்கும் மிகப் பெரிய அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளதாகக் கூறுகிறார் கடல் சூழல் ஆராய்ச்சியாளரான முனைவர் மன்னர் மன்னன். 'பாதுகாக்கப்பட்ட மன்னார் வளைகுடா தேசியப் பூங்காவுக்கு மிக அருகில் இந்த எண்ணெய்க் கிணறுகள் அமையவிருப்பதால், அரிய வகை உயிரினங்களுக்கு ஆபத்து ஏற்படும். மசகு எண்ணெய் உறிஞ்சி எடுக்கப்படும்போது, கசிவு ஏற்பட்டு கடலில் பரவ வாய்ப்புள்ளது. இளம் கடல்வாழ் உயிரினங்கள், நுண்ணியிரிகளை உண்டுதான் வாழ்கின்றன. எனவே நுண்ணியிரிகள் அழியும். அதன்மூலம் இளம் கடல்வாழ் உயிரினங்களும் அழிய நேரிடும்', என்றார் அவர்.

## வர்த்தகம் மூலதனம்

பெருமாள்

### லிபிய கலவரம் எரிபொருள் விலை அதிகரிப்பு

எண்ணெய் உற்பத்தி நாடுகளில் முக்கிய பங்கு வகிக்கும் லிபியா மற்றும் பஹ்ரைனில் மக்கள் போராட்டம் நடந்துவருவதால், எரிபொருள் உற்பத்தி மற்றும் ஏற்றுமதி பெருமளவு பாதிக்கப்பட்டுள்ளது. இதனால் ஒரு பரல் மசகு எண்ணெய் 107 டொலராக உயர்ந்துள்ளது. ஏப்ரல் வழங்கலுக்கான மசகு எண்ணெய் விலை 1.53 டொலர் வரை உயர்வு கண்டுள்ளது. கடந்த இரு ஆண்டுகளில் அதிகபட்ச விலை இதுவே.



நியுயோர்க்கின் லைட் ஸ்வீட் மசகு எண்ணெய் ஒரே நாளில் பரலுக்கு 7.20 டொலர் உயர்ந்துள்ளது. லிபியா மற்றும் பஹ்ரைனின் புரட்சி, தொடர்ந்து யேமன் உள்ளிட்ட மத்திய கிழக்கு நாடுகளிலும் பரவ ஆரம்பித்திருப்பதால், எண்ணெய் விலை மேலும் உயரக்கூடும் என்று கூறப்படுகிறது. இதையே காரணமாகக் கொண்டு பதுக்கல் நடவடிக்கைகளிலும் பெரும் நிறுவனங்கள் ஈடுபடத் தொடங்கியுள்ளன. ஐரோப்பாவின் முக்கிய நாடுகள் அனைத்துக்கும் மசகு எண்ணெய் ஏற்றுமதி செய்து வந்தது லிபியாதான் என்பது குறிப்பிடத்தக்கது. இப்போது லிபியாவின் நிர்வாகமே ஸ்தம்பித்துள்ளதால், அடுத்து என்ன செய்வதென்ற குழப்பத்தில் உள்ளன மேற்குலக நாடுகள்.

### ஜகுவார் லாண்ட் ரோவர் : 2000 பேருக்கு வேலை

அடுத்த இரண்டு ஆண்டுகளுக்குள் புதிதாக 2000 பேர் வேலைக்கு அமர்த்தப்பட இருப்பதாக ஜகுவார் லாண்ட் ரோவர் நிறுவனம் அறிவிப்பு வெளியிட்டுள்ளது. பொருளாதார நெருக்கடியில் சிக்கிய பிரித்தானியாவைச் சேர்ந்த பழமைவாய்ந்த சொகுசு கார் தயாரிப்பு நிறுவனமான ஜகுவார் லாண்ட் ரோவரை, டாடா மோட்டார்ஸ் நிறுவனம் கையகப்படுத்தியது. ஜகுவார் லாண்ட் ரோவர் நிறுவனத்தின் பங்குகளை டாடா மோட்டார்ஸ் வாங்கியது.







இதையடுத்து, நலிந்த நிலையில் இருந்த ஜகுவார் லாண்ட் ரோவர் நிறுவனத்தில், டாடா மோட்டார்ஸ் சிக்கன நடவடிக்கைகளை துவங்கியது. நிதி நெருக்கடியை சமாளிக்க தொழிலாளர்களின் எண்ணிக்கையை குறைக்க டாடா ஜாகுவார் நிறுவனம் முடிவு செய்தது. ஆனால், இதற்கு தொழிலாளர்கள் மத்தியில் கடும் எதிர்ப்பும், அதிருப்தியும் எழுந்ததால், தனது நிலையில் இருந்து டாடா மோட்டார்ஸ் பின்வாங்கியது.

இந்தநிலையில், ஜாகுவார் லாண்ட் ரோவரின் நிலைமை மாறி, அந்த நிறுவனம் தற்போது எழுச்சிப் பாதையில் செல்ல துவங்கியுள்ளது. மேலும், மார்க்கெட்டில் நிலைக்க புதிய மாடல்களை அறிமுகப்படுத்தவும், தொழிலாளர் எண்ணிக்கையை அதிகரிக்கவும் ஜகுவார் லாண்ட் ரோவர் திட்டமிட்டுள்ளது.

இதுகுறித்து ஜகுவார் லாண்ட் ரோவர் நிறுவனத்தின் இயக்குனர் கூறியதாவது, ?ஜகுவார் லாண்ட் ரோவர் சீரமைப்பு பணிகளுக்காக 6,000 கோடி ரூபாவை டாடா மோட்டார்ஸ் செலவிட உள்ளது. இதில், பெரும்பான்மையான தொகை புதிய மொடல்களை அறிமுகப்படுத்துவதற்கு தேவையான ஆராய்ச்சி மற்றும் வடிவமைப்பு பணிகளுக்கு செலவிடப்படும். தவிர, வரும் 2013ம் ஆண்டுக்குள் புதிதாக 2,000 பேர் வேலைக்கு அமர்த்தப்படுவர். இதன்மூலம், நிறுவனத்தின் தொழிலாளர் எண்ணிக்கை 18,000லிருந்து 20,000 ஆக உயரும். தொழிலாளர் எண்ணிக்கை அதிகரிப்பதன் மூலம், புதிய மொடல்களை விரைவில் அறிமுகப்படுத்த ஏதுவாகும். மேலும், ஒரு முறை சார்ஜ் செய்தால் 900 கி.மீ., செல்லும் மின்சாரக் காரை வரும் 2013ம் ஆண்டு அறிமுகப்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. இது எரிபொருள் மற்றும் பற்றியில் இயங்கும் இரட்டை எரிபொருள் தொழில்நுட்பம் கொண்ட காராக இருக்கும், என்று கூறினார்.



# முதலாம் ஆண்டு நினைவஞ்சலி

# கனகசபை மதியழகன் (மதி)

புங்குடுதீவு – 4 தமிழீழம்

பிறப்பு 08.08.1964 இறப்பு : 13.02.2010 திதி: 04-03-2011

நேற்றுப் போல், நீங்கள் எமைவிட்டு பிரிந்து ஓராண்டு சென்று மறைந்து விட்டது
எத்தனை யுகங்கள் சென்றாலும் உங்கள் நினைவு எமைவிட்டு என்றும் மறையாது
அன்னாரின் ஆத்ம சாந்தி வேண்டி நடைபெறும் (திவசம்) ஓராண்டு திதி நிகழ்வு
04.03.2011 வெள்ளிக்கிழமை மதியம் 12.00 மணிதொடக்கம் மாலை 17.00 மணிவரை

Salle Jeanne d'arc
50 rue Torcy, 75018 PARIS
Mo:- 12 MARX DORMOY BUS 60 , 65

என்ற முகவரியில் உள்ள மண்டபத்தில் நடைபெறும்

தகவல்:- தாய், மனைவி, பிள்ளைகள், சகோதரர்கள், மைத்துனர்கள், மைத்துனிகள்

தொடர்புகளுக்கு 01 48 68 71 43 - 01 49 37 10 99 - 06 64 50 92 02 - 06 50 06 29 91



**அருளுடைமை**

குறள் 248

**பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்**
**அற்றார்மற் றாதல் அரிது.**

பொருளை இழந்தவர் அதனை மீண்டும் தேடிப் பெறலாம். அருளை இழந்தால் இழந்ததுதான்? மீண்டும் பெற இயலாது.

# இளையோர் உலகம்

இளையோர்களே இது உங்களுக்கான உலகம். இங்கு உங்கள் ஆக்கங்களை, ஆரோக்கியமான விடயங்களை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளுங்கள். இது உங்களுக்கான களம்...

## புதிர்க் கதை: குருவியின் அறிவு

ஒரு அம்மாக் குருவி நெல் வயலில் கூடு கட்டியிருந்தது. கூட்டில் அது முட்டையிட்டு அடைகாத்தது. அப்பாக் குருவி துணையாக இருந்தது. முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளிவந்தன. அப்பாக் குருவியும், அம்மாக் குருவியும் குஞ்சுகளைப் போற்றி வளர்த்தன.

நாட்கள் கடந்தன. நெற்பயிர் நன்றாக விளைந்துவிட்டது. அறுவடை செய்வதற்கு விவசாயி எப்போது வேண்டுமானாலும் வரலாம். ஆனால் பெரிய குருவிகள் இரண்டும், குஞ்சுகளுக்கு இரை தேடிப் போகவேண்டும். இருவரும் இல்லாத நேரத்தில் அறுவடை செய்வதற்கு ஆட்கள் வந்து, கூட்டைக் கலைத்து குஞ்சுகளைக் கொன்றுவிட்டால் என்ன செய்வது? இதுதான் பெரிய குருவிகளின் கவலை.



ஒரு நாள் அம்மாக் குருவி தன் குஞ்சுகளிடம் சொன்னது: "பிள்ளைகளே, விவசாயி வயலுக்கு வந்தால், அவர் என்ன சொல்கிறார் என்று கவனமாகக் கேட்டு மாலையில் என்னிடம் சொல்லுங்கள்" பிறகு இரை தேடிப் பறந்து சென்றன.

இரண்டு குருவிகளும் மாலை நேரத்தில் திரும்பி வந்தன. உடனே குஞ்சுகள் அழுதபடிக் கூறின: "நாம் பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டோம். விவசாயி வந்திருந்தார். நெற்பயிர்களைக் கவனித்துப் பார்த்தார். பிறகு தன் மகனிடம், 'மகனே, நெற்பயிர் நன்றாக விளைந்துவிட்டது. நம் அண்டைவாசிகளிடமும், நண்பர்களிடமும் நாளைக் காலையில் வயலுக்கு வரும்படிச் சொல். நெற்பயிரை அறுவடை செய்வதற்கு அவர்களின் உதவி நமக்கு வேண்டும்' என்று சொன்னார். நாம் உடனே இங்கிருந்து போய்விட வெண்டும் அம்மா!"

அம்மாக் குருவி எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டது. பிறகு சொன்னது, "அஞ்சாதீர்கள் பிள்ளைகளே! அவர் அவ்வளவு சீக்கிரம் அறுவடைக்கு வந்துவிடமாட்டார்."

மறுநாள் காலையிலும் பெரிய குருவிகள் இரைதேடிப் புறப்பட்டன. புறப்படுவதற்கு முனபு குஞ்சுகளிடம் நினைவுபடுத்தின: "இன்று விவசாயி வந்தால், அவர் பேசுவதைக் கேட்டு மாலையில் எங்களிடம் சொல்லுங்கள்."

மாலையில் குருவிகள் திரும்பி வந்ததும், குஞ்சுக் குருவிகள் கூறின: "அம்மா இன்றும் விவசாயி வந்திருந்தார். அண்டைவாசிகளும், நண்பர்களும் வருவார்கள் என்று வெகுநேரம் காத்திருந்தார். யாரும் வரவில்லை. அதனால் திரும்பிப் போய்விட்டார்."

அப்பாக் குருவி கேட்டது: "போகும் முன்பு அவர் தன் மகனிடம் என்ன சொன்னார்?"

"மகனே, என் சகோதரர்களிடமும், சகோதரிகளிடமும், மற்ற உறவுக்காரர்களிடமும் சென்று நெற்பயிர் முற்றிவிட்டது என்ற தகவலைச் சொல். நாளை அறுவடை செய்வதற்கு எல்லோரும் வரவேண்டும் என்றும் சொல் என்றார்."

குஞ்சுக் குருவி சொன்னதையெல்லாம் கவனித்துக் கேட்ட அம்மாக் குருவி சொன்னது: "பிள்ளைகளே, நீங்கள் எதற்கும் பயப்படாதீர்கள்! அவர் நாளையும் அறுவடை செய்யமாட்டார்."

மறுநாளும் பெரிய குருவிகள் இரை தேடிப் புறப்பட்டன. குஞ்சுக் குருவிகள் கூட்டிற்குள் பதுங்கிக் கொண்டிருந்தன. அன்றும் விவசாயி வயலுக்கு வந்து பேசிக் கொண்டிருந்ததை நன்றாகக் கேட்டுக் கொண்டன அவை. மாலையில் திரும்பி வந்த பெரிய குருவிகளிடம், தாங்கள் கேட்டதையெல்லாம் கூறின:

"அம்மா, இன்றும் விவசாயி வயலுக்கு வந்தார். வெகுநேரம் வயலில் காத்திருந்தார். அவர் எதிர்பார்த்த யாரும் வரவில்லை. அப்போது அவர் மகனிடம் சொன்னார், 'மகனே, இப்படி மற்றவர்களுக்காகக் காத்திருப்பதில் எந்தப் பயனும் இல்லை. நம் வேலையை நாம் தான் செய்ய வேண்டும். நெற்பயிர்கள் எல்லாம் நன்றாக விளைந்திருக்கின்றன. நாளை நாமே வந்து அறுவடை செய்துவிடலாம்` என்று சொன்னார்."

பெரிய குருவிகள் இரண்டும் இதைக் கேட்டுத் திடுக்கிட்டன. பிறகு குஞ்சுகளிடம் ஏதோ ரகசியமாகக் கூறின.

பெரிய குருவிகள், தங்கள் குஞ்சுகளிடம் சொன்ன ரகசியம் என்னவென்று தெரிகிறதா ?

"நாம் செய்ய வேண்டிய வேலை, நாம் செய்தால்தான் நடக்கும். மற்ற யாராவது செய்து கொடுப்பார்கள் என்று காத்திருந்தால் நடக்காது. கடைசியில் விவசாயி இதைப் புரிந்துகொண்டார். அவரே இறங்கி அறுவடை செய்யவேண்டும் என்று முடிவெடுத்திருப்பதால், நாளை இங்கே அறுவடை நடக்கும். உடனே நாம் வேறு இடத்திற்குச் சென்றுவிடுவோம்" என்று பெரிய குருவிகள், குஞ்சுகளிடம் கூறின.

## எண்ணையில் தண்ணி வெடிப்பது ஏன் என்று தெரியுமா?

அடுப்பில் வைக்கப்பட்ட பாத்திரத்தில் உள்ள சூடான எண்ணையில் ஒரு துளி தண்ணீர் பட்டால் அது சத்தத்துடன் வெடித்துச் சிதறுகிறது. ஆனால் வெந்நீரில் ஒரு துளி எண்ணையை இட்டால் அது வெடித்துச் சிதறுவது இல்லை, ஏன்? நன்றாக சூடுபடுத்தப்பட்ட எண்ணையின் வெப்பநிலை 150 பாகை சென்டிகிரேட். அதே நேரம் நீரின் கொதிநிலை 100 பாகை சென்டிகிரேட். எனவே ஒரு துளி நீர் எண்ணையில் விழுந்தால் அது எண்ணையால் சூடாக்கப்பட்டு உடனே நீராவியாக மாறுகிறது. அப்போது 1000 முறை அது விரிவடைகிறது. அந்த உடனடி விரிவாக்கத்தின் காரணமாக வெடிப்புச் சத்தமும், எண்ணை சிதறுவதும் நேர்கிறது. அதே நேரம் கொதி நீரில் ஒரு துளி எண்ணையை விட்டால் அது வெடிக்காததற்குக் காரணம், அது தண்ணீரின் வெப்பநிலையால் ஆவியாவதில்லை என்பதால்தான்.



# தகவல் முற்றம்

**விலங்குகளின் அதிசயம்**

01. கோலா கரடிகள் ஒரு நாளைக்கு 22 மணி நேரம் தூங்கும்.
02. ஆல்பட்ராஸ் என்ற பறவை இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஒரே ஒரு முட்டையிடும்.
03. வயிறும், ஜீரண உறுப்பும் இல்லாத உயிரினம் ஈசல்.
04. ஆபிரிக்க யானைகளின் தந்தம் அதிக பட்சமாக 100 கிலோ வரை இருக்கும்.
05. சிங்கம் சாதாரணமாக 20 அடி தூரம் வரை பாயும் திறன் கொண்டது.
06. கங்காரு ஒரே தாவலில் 30 அடிகள் வரை தாண்டிவிடும்.
07. உணவு கிடைக்காதபோது தனது இனத்தையே கொன்று தின்னக் கூடியது தேள்.
08. கரப்பான் பூச்சி எப்போதும் சரியாக 16 முட்டைகளை இடுகின்றன.
09. தனது ஆயுட்காலம் வரை வளர்ந்துகொண்டே இருக்கும் உயிரினம் முதலை.
10. பெண் வண்ணத்துப் பூச்சிகள் முட்டையிட்டவுடன் இறந்து விடும்.

# விடுகதை

**சென்ற இதழின் விடைகள்**

01. தபால்பெட்டி
02. சப்பாத்திக்கள்ளி
03. நீர்க்குமிழி
04. காளான்
05. கிளி
06. எலுமிச்சம்பழம்
07. கடிகாரம்
08. வியர்வை
09. கரும்பு
10. வானம்

01. நடைக்கு உவமை, நளனுக்கு தூதுவன். அது என்ன?
02. நல்லவர் கொள்ளும் தானம் நாலு பேருக்குத் தர முடியாத தானம். அது என்ன?
03. மருத்துவர் வந்தாரு ஊசி போட்டாரு, காசு வாங்காமல் பறந்து போயிட்டாரு. அவர் யாரு?
04. வெள்ளை நிற சாமியார் தண்ணீரைக் கண்டால் தவமிருப்பார். அவர் யார்?
05. அரைசாண் ராணிக்கு வயிற்றில் ஆயிரம் முத்துகள். அது என்ன?
06. வெள்ளைப் பெட்டிக்குள் மஞ்சள் தங்கம். அது என்ன?
07. வேகமான ஓடுவான். அவன் ஓட்டத்தில் வரவும் உண்டு, செலவும் உண்டு. அது என்ன?
08. உத்தம ராணிகளின் வீ உச்சி மரத்தில் தொங்குது. அது என்ன?
09. பகலில் தூங்குவான் இரவில் கண் விழிப்பான். அவன் யார்?
10. அணிவகுத்துச் செல்வர் தடயம் தெரியாமல் செல்வர். அவர்கள் யார்?

விடைகள் அடுத்த இதழில்...

திரை உலகம்

# முதலமைச்சரானார் 'திருமாவளவன்'

விடுதலை சிறுத்தைகள் கட்சி தலைவர் தொல்.திருமாவளவன், 'மின்சாரம் என்ற படத்தில் முதலமைச்சராக நடித்துள்ளார். மாணவர் சக்தி மின்சாரம் போன்றது என்ற கருத்தை வலியுறுத்தும் படம் இது. இந்த படத்தில் தொழில்நுட்பக் கல்லூரி மாணவராக புதுமுகம் யுவராஜும், மாணவியாக மதுசந்தாவும் அறிமுகம் ஆகிறார்கள். இவர்களுடன் சவுகந்தி, சுஜிபாலா, 'என்னுயிர் தோழன்' ரமா, 'காதல்' சுகுமார், பாலாசிங், நெல்லை சிவா, கானா உலகநாதன் ஆகியோரும் நடித்துள்ளனர். தொல்.திருமாவளவன் முதலமைச்சராக நடித்ததுடன், ஒரு பாடலையும் எழுதியிருக்கிறார். கே.வி.சுரேஷ் ஒளிப்பதிவு செய்ய, டி.தேவன் இசையமைத்திருக்கிறார். என்.செல்வகுமாரன் இயக்கியுள்ளார். படம், விரைவில் திரைக்கு வர இருக்கிறது.

# 12 வேடங்களில் சந்தானம்

'சிங்கம்புலி' படத்தில் முதன்முறையாக ஜீவா இரட்டை வேடத்தில் நடித்துள்ளார். ஜீவாவுடன் திவ்யா ஸ்பந்தன், சந்தானம், லிவிங்ஸ்டன் உள்ளிட்ட பலர் நடித்துள்ளனர். நகைச்சுவையில் தனக்கென்று ஒரு பாணியை வைத்து கவுண்டமணியை போன்று லொள்ளு பண்ணிவரும் சந்தானம், இந்தபடத்தில் எம்.ஜி.ஆர், சிவாஜி, டி.ராஜேந்தர் என 12 வித்யாசமான பாத்திரங்களில் நடித்து அசத்தியிருக்கிறாராம். சந்தானம் 12 வித்யாசமான பாத்திரங்களில் நடிப்பது இதுவே முதல்முறை.

# 23 வருடங்களின் பின் தமிழில் 3டி

23 வருடங்களுக்குப்பின், (மை டியர் குட்டிச்சாத்தான் 1978 வந்த படத்துக்கு பிறகு) தமிழில் நேரடியாக ஒரு 3டி படம் உருவாகிறது. இந்த படத்துக்கு, 'அம்புலி' என்று பெயர் சூட்டப்பட்டு இருக்கிறது. ஹரிசங்கர் – ஹரீஸ் நாராயண் ஆகிய இருவரும் இந்த படத்தை இயக்குகின்றார்கள். 'அம்புலி' படத்தை பற்றி அவர்கள் கூறியதாவது, ஹஹ3டி படம் என்றாலே குழந்தைகளுக்கான படம் என்ற மாயையை உடைத்தெறியும் வகையில் இந்த படம் உருவாக்கப்படுகிறது. இதில், பார்த்திபன் கதாநாயகனாக நடிக்கிறார். கிராமத்தில் பேசப்படும் கட்டுக்கதைகள் நிஜமாவதில்லை என்பதை கிராம மக்களுக்கு புரியவைப்பதற்காக இரண்டு இளைஞர்கள் ஒரு கிராமத்துக்கு செல்கிறார்கள். அங்கு நடைபெறும் திகில் சம்பவங்களே 'அம்புலி' படத்தின் கதை என்றார் அவர்.

# தானுகப் பாடல் பாடிய மலேசியா வாசுதேவன் சாவு

# புகைக்கும் காட்சிக்கு சீனாவில் தடை!

# நீண்ட இடைவெளிக்குப்பின் இணைந்தனர்!

பின்னணி பாடகர் எஸ்.பி.பாலசுப்பிரமணியமும், பாடகி சித்ராவும் நூற்றுக்கணக்கான பாடல்களை இணைந்து பாடியிருக்கிறார்கள். கடந்த சில வருடங்களாக இருவரும் இணைந்து பாடுவதற்கான வாய்ப்பு அமையவில்லை. நீண்ட இடைவெளிக்குப்பின், 'சகாக்கள்' என்ற படத்துக்காக இருவரும் சேர்ந்து பாடினார்கள். 'குளிர்' படத்திற்காக எழுதப்பட்ட "இதுவரை நான் வாழ்ந்த வாழ்க்கை காற்றில் போனதே..." என்று தொடங்கும் அந்த பாடலை தயாரத்னம் எழுதி, இசையமைத்தார். எஸ்.பி.பாலசுப்பிரமணியமும் சித்ராவும் இணைந்து பாடினார்கள்.



## ஆண்டுக்கு 20,000 இந்தியர்களுக்கு பிரித்தானியாவில் அனுமதி

கணினி மென்பொருள் தொடர்பான கற்றல் அறிவைக் கொண்டிருக்கும் இந்தியர்களை, ஆண்டுக்கு 20 ஆயிரம் பேர் விதம் பிரித்தானியாவில் குடியேற அனுமதிக்கப்படவுள்ளதாக தகவல் வெளியாகியுள்ளது. ஐரோப்பிய ஒன்றியத்துடன் இந்தியா செய்து கொள்ள இருக்கும் தடையற்ற வர்த்தக ஒப்பந்தத்தின் கீழ் அவர்கள் பிரித்தானியாவிற்கு அழைத்துக்கொள்ளப்படுவார்கள் என்று கூறப்படுகின்றது. இந்த ஒப்பந்தம் குறித்து பெல்ஜியம் நாட்டு தலைநகர் பிரஸ்சல்சில் இருதரப்பினரிடையே பேச்சுவார்த்தை நடந்து வருகிறது. இந்த ஒப்பந்தம் வருகிற யூன் மாதம் கையெழுத்தாகிறது. இந்த ஒப்பந்தம் கையெழுத்தாவதன் மூலம் பிரித்தானிய நாட்டின் குடியேற்ற சட்டத்தால் ஏற்பட்ட பாதிப்பு ஒன்றுமில்லாமல் போய் விடும் என்று இந்திய தரப்பு செய்திகள் தெரிவிக்கின்றன.

## மாலியில் நெரிசலில் சிக்கி 36 பேர் பலி

வடமேற்கு ஆபிரிக்க நாடான மாலியில் இடம்பெற்ற நெரிசல் ஒன்றில் சிக்கி 36 பொது மக்கள் உயிரிழந்துள்ளனர். ஏராளமான



வர்கள் படுகாயங்களுக்கு உள்ளாகியுள்ளனர். மாலியின் பாமாகோ நகரில் ஒரு விளையாட்டு திடலில் மதபோதகர் ஒருவர் பேசுவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. அவரது பேச்சை கேட்பதற்காக பெரும் திரளாக மக்கள் திரண்டிருந்தனர். திடீர் என்று கூட்டத்துக்குள் தள்ளு



முள்ளு ஏற்பட்டது. அது எதனால் ஏற்பட்டது என்பது தெரியவில்லை. இதன்போது கூட்ட நெரிசலில் சிக்கி, 36 பேர் பலியானார்கள். பலியான அனைவரும் பெண்கள் என்று கூறப்படுகிறது. பலியானவர்களை அடையாளம் காண்பதற்காக பெரும்திரளான மக்கள் மருத்துவமனைகளில் கூடியிருந்தனர்.

## முஷரப்புக்கு மீண்டும் கைது உத்தரவு

பாகிஸ்தான் முன்னாள் பிரதமர் பெனாசிர் கொலை வழக்கை தீவிரவாத தடுப்பு நீதிமன்றம் விசாரித்து

→

## கைதான அமெரிக்கரும் கொல்லப்பட்ட பாகிஸ்தானியர்களும் உளவுத்துறை முகவர்கள்!

பாகிஸ்தானில் 2 பேரை சுட்டுக் கொன்றதாக கைதானவர் தூதரக அதிகாரி என்று கூறி அவரை விடுவிக்க வேண்டும் என்று அமெரிக்க அரசு கோரிவருகிறது. இதற்கிடையில் அவர் அமெரிக்க உளவுத்துறையின் முகவர் என்றும்



தூதரக அதிகாரி அல்ல என்றும் தெரியவந்துள்ளது.

கடந்த ஜனவரி மாதம் 27ம் திகதி பாகிஸ்தானில் உள்ள லாகூரில் காரில் சென்ற ரேமண்ட்ஸ் டேவிஸ் என்பவர் பாகிஸ்தானியர்கள் 2 பேரை சுட்டுக்கொன்றார். இதற்காக அவரை காவல்துறையினர் கைது செய்தனர். அவர் மீது வழக்கு தொடரப்பட்டுள்ளது. இந்த வழக்கு விசாரணையை அடுத்த மாதம் 14ம் திகதிக்கு தள்ளிவைக்கப்பட்டுள்ளது.

ரேமண்ட் டேவிஸ் தூதரக அதிகாரியாக செயல்பட்டு வந்தார். இதனால் அவருக்கு தூதர் அந்தஸ்து கொடுத்து வழக்கு விசாரணையில் இருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்று பாகிஸ்தான் அரசை அமெரிக்க அரசு கேட்டுக் கொண்டது. இதை பாகிஸ்தான் நீதிமன்றம் ஏற்க மறுத்து விட்டது. இதன்காரணமாக இருநாடுகளுக்கும் இடையேயான உறவு சிக்கலானது. பாகிஸ்தான் அதிபர் சர்தாரி அந்த நாட்டில் சுற்றுப்பயணம் செய்வதாக இருந்தது. இதற்கு அமெரிக்கா அனுமதி அளிக்க மறுத்து விட்டது.

இந்த நிலையில் ரேமண்ட் டேவிஸ் துப்பாக்கியால் சுட்டுக்கொன்றது சாதாரண மனிதர்கள் அல்ல என்பதும், அவர்கள் இருவரும் பாகிஸ்தானின் உளவுத்துறையான ஐ.எஸ்.ஐ.யின் முகவர்கள் என்பதும் தெரியவந்தது. இதைத்தொடர்ந்து கைதானவர் தூதரக அதிகாரி தானா என்பது குறித்து சந்தேகம் எழுந்துள்ளது. இது பற்றி அமெரிக்க உளவுத்துறை வட்டாரத்தில் விசாரித்த போது, அவர் தூதரக அதிகாரி அல்ல என்றும் அவர் அமெரிக்க உளவுத்துறையான சி.ஐ.ஏ.யின் முகவர்தான் என்பதும் தெரியவந்துள்ளது. இவர் அமெரிக்க இராணுவத்தில் தனி படைப்பிரிவில் இருந்தார் என்பதும் இராணுவப் பணியில் இருந்து ஓய்வு பெற்றதும், அவர் சி.ஐ.ஏ.யின் முகவராக வேலைக்கு சேர்ந்தார்.

டேவிசின் வேலை என்ன என்றால், தூதரக அதிகாரிகளுக்கு பாதுகாவலராக இருப்பதுதான். லாகூர் வரும் அமெரிக்க உயர் அதிகாரிகள், அமைச்சர்கள் ஆகியோருக்கு பாதுகாப்பு கொடுப்பது ஆகியவைதான் என்று கூறப்படுகிறது. அமெரிக்க தூதரகம் 2010ம் ஜனவரி மாதம் 20ம் திகதி பாகிஸ்தான் அரசாங்கத்தை தொடர்பு கொண்டு டேவிஸ் நிர்வாக மற்றும் தொழில்நுட்ப குழுவின் உறுப்பினர் என்றும் வியன்னா மாநாட்டின் அடிப்படையில் அவருக்கு தூதரக அந்தஸ்து அளிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது என்று அமெரிக்க அதிகாரி ஒருவர் கூறுகிறார். இதன் அடிப்படையில் அவருக்கு சட்டப்படியான நடவடிக்கையில் இருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்று கேட்பது நியாயமானது என்று கூறப்படுகிறது.

இதற்கிடையே, கொல்லப்பட்ட இபாத் உர் ரகுமான் என்பவரின் சகோதரர் புதிய சர்ச்சையை எழுப்பியுள்ளார். கொலை சம்பவத்தின் போது, ரேமண்ட் டேவிசை காப்பாற்ற வந்த கார் மோதியதால், தன் சகோதரர் இறந்ததாகவும், எனவே, அந்தக் காரின் சாரதியையும் கைது செய்ய வேண்டும் என்றும், காரை பறிமுதல் செய்ய வேண்டும் என்றும் லாகூர் நீதிமன்றில் வழக்கு தொடர்ந்துள்ளார். அந்த சாரதி, அமெரிக்க தூதரக ஊழியர் என்பது குறிப்பிடத்தக்கது.

இதற்கிடையே, அமெரிக்க தூதரக அதிகாரி ரேமண்ட் டேவிஸ் கடந்த ஜனவரி மாதம் 27ம் திகதி கைது செய்யப்பட்டதை தொடர்ந்து, பாகிஸ்தானில் தீவிரவாதிகள் மீது நடத்தி வந்த ஏவுகணை தாக்குதலை அமெரிக்கா நிறுத்தி வைத்தது. கடந்த திங்களன்று இந்தத் தாக்குதல் மீண்டும் தொடங்கியது. இந்த மாதத்தில் முதல் முறையாக ஏவுகணைத் தாக்குதல் நடந்தது. அமெரிக்க இராணுவத்தின் ஆள் இல்லாத விமானம் ஒன்று பாகிஸ்தானின் பழங்குடியினர் வசிக்கும் பகுதியில் ஏவுகணைகளை வீசி தாக்குதல் நடத்தியது. தெற்கு வசீரிஸ்தானில் அசம் வார் சாக் என்ற இடத்தில் 4 ஏவுகணைகள் வீசப்பட்டன. இதில் 7 பேர் பலியானார்கள்.

## இளவரசர் திருமணவிழாவில் 2000 சிறப்பு விருந்தினர்

பிரித்தானிய இளவரசர் வில்லியமுக்கும் அவரது காதலி கதே மிடில்டனுக்கும் வருகிற ஏப்ரல் 29ம் திகதி திருமணம் நடக்க இருக்கிறது. இந்த திருமணத்துக்கு 2000 பேருக்கு அழைப்பு அனுப்பப்பட்டுள்ளது. இந்த திருமண விழாவில் கால்பந்து வீரர் பெக்காம் தொடக்கம் மக்களின் எதிர்ப்புப் போராட்டத்தை எதிர்கொண்டுள்ள பகரைன் மன்னர் ஹமாத் வரையும் அடங்கியுள்ளனர். அத்துடன், இந்த விழாவில் அமெரிக்க ஜனாதிபதி ஒபாமா, பிரஞ்சு அதிபர் சர்கோசி ஆகியோர் கலந்து கொள்ள மாட்டார்கள் என்று கூறப்படுகின்றது.





சார்லஸ்சின் சித்தப்பா ஆன்ட்ரூவின் முன்னாள் மனைவி சாரா பர்கூசனுக்கு அழைப்பு அனுப்பப்படவில்லை. திருமணத்துக்கு யார் யாரை அழைக்க வேண்டும் என்ற பட்டியலை இளவரசர் வில்லியம் தயாரித்தார். இந்த பட்டியலை ராணி எலிசபெத்தும், தந்தை சார்லசும் பார்வையிட்டு ஒப்புதல் அளித்தனர். வில்லியம் ராணுவத்தில் பணியாற்றியபோது சாதாரண வாழ்க்கை தான் வாழ்ந்தார். இந்த சாதாரண நடைமுறை அவரது விருந்தினர் பட்டியலிலும் எதிரொலிப்பதாக கூறப்படுகின்றது.

குடும்பத்தினரும் நண்பர்களுமாக ஆயிரம் பேர் அழைக்கப்பட்டு இருக்கிறார்கள். அரச குடும்பத்தை சேர்ந்த 50 பேரும், வெளிநாட்டு அரச குடும்பத்தினர் 40 பேரும் அழைக்கப்பட்டுள்ளனர். பிரித்தானிய அரசாங்கம், நாடாளுமன்றம் தூதரக அதிகாரிகள் என 200 பேரும், அறக்கட்டளைகளை சேர்ந்த 80 பேரும், இராணுவ அதிகாரிகள் 30 பேரும், பொதுநலவாய நாடுகளை சேர்ந்த மூத்த தலைவர்கள் 60 பேரும் அழைக்கப்பட்டு இருக்கிறார்கள். திருமணம் முடிந்த பிறகு நடக்கும் மதிய விருந்துக்கு 600 பேர் பக்கிங்ஹாம் அரண்மனைக்கு அழைக்கப்பட்டுள்ளனர். மாலையில் இளவரசர் சார்லஸ் கொடுக்கும் விருந்துக்கு 300 பேர் அழைக்கப்பட்டுள்ளார்கள்.

## படகு விபத்தில் 12 பேர் பலி

வியட்நாம் தலைநகர் ஹனாய்க்கு அருகே உள்ள ஹலோங் விரிகுடா கடல் பகுதியில் இடம்பெற்ற விபத்தில் 12 பேர் பலியானார்கள். இந்த இடம் சுற்றுலா பயணிகளை கவரும் வகையில் அமைந்துள்ளது. இங்கு வந்த வெளிநாட்டு சுற்றுலா பயணிகள் கடலில் படகு சவாரி செய்தனர். படகு திடீர் என்று கவிழ்ந்ததில் படகில் இருந்தவர்கள் கடலில் விழுந்து தத்தளித்தனர். இதை அறிந்ததும் மீட்புக்குழுவினர் விரைந்தனர். அவர்கள் வெளிநாட்டு பயணிகள் 9 பேர் உள்பட 15 பேரை உயிருடன் மீட்டனர். அதோடு தண்ணீரில் மூழ்கி இறந்த 12 பேரின் உடல்களையும் பின்னர் கைப்பற்றினார்கள்.

சோமாலியா

## கடல் கொள்ளையனுக்கு 34 ஆண்டு சிறை

சோமாலிய கடல் கொள்ளையர் ஒருவருக்கு அமெரிக்க நீதிமன்றம் கடந்த வெள்ளியன்று 33 ஆண்டுகள் 9 மாதச் சிறை தண்டனை விதித்துள்ளது. 2009ம் ஆண்டு அமெரிக்க கொடியுடன் வந்த கப்பலையும் அதிலிருந்த அமெரிக்க மாலு



மியையும் சோமாலிய கடல் கொள்ளையர்கள் கடத்திச் சென்றனர். அமெரிக்க கப்பல் படையினர், மாலுமியை மீட்டதுடன் அப்துவாலி என்ற கொள்ளையனையும் உயிருடன் பிடித்திருந்தனர். அவர் மீது நியூயோர்க் நீதிமன்றத்தில் வழக்கு நடந்தது. கடத்தலில் ஈடுபட்டதை அப்துவாலி ஒப்புக் கொண்டதையடுத்து அவருக்கு 33 ஆண்டுகள் கடுங்காவல் சிறை தண்டனை விதித்து நீதிபதிகள் தீர்ப்பளித்தனர்.

இதுஇவ்வாறிருக்க, இந்து சமுத்திரக்கடலில் வைத்து அண்மையில் கடத்தப்பட்ட அமெரிக்க கப்பலின் மாலுமி உட்பட நால்வர் சோமாலியக் கடற் கொள்ளையர்களால் சுட்டுக்கொல்லப்பட்டுள்ளனர். சோமாலிய கடல் கொள்ளையர்கள் மீது அமெரிக்க கடற்படையினர் செவ்வாயன்று அதிரடி தாக்குதல் நடத்தினார்கள். அப்போது, நடந்த சண்டையில் இரண்டு கடற்கொள்ளையர்கள் சுட்டுக் கொல்லப்பட்டனர். 15 பேர் கைது செய்யப்பட்டனர். கொள்ளையர்களின் கப்பல் ஒன்றை கைப்பற்றிய போது, அதில் மேலும் இரண்டு கொள்ளையர்களின் சடலங்கள் கிடந்தன. இந்தத் தாக்குதலால்; ஆத்திரம் அடைந்த கடல் கொள்ளையர்கள், தங்களிடம் பணயக் கைதிகளாக இருந்த 4 அமெரிக்கர்களை சுட்டு கொன்று விட்டனர். இது குறித்து அமெரிக்க வெளியுறவு மந்திரி ஹிலாரி கிளிண்டன் கூறுகையில், அமெரிக்காவை சேர்ந்த 4 பேர் கொல்லப்பட்டது மிகவும் வேதனை அளிக்கிறது. கடல் பகுதிகளில் பாதுகாப்பை பலப்படுத்த கூடுதல் நடவடிக்கைகளை அமெரிக்கா மேற்கொள்ளும்`` என்றார். ஜனவரி மாத நிலவரப்படி, சோமாலியா கடற் கொள்ளையர்களிடம் பணயக் கைதிகளாக

750 மாலுமிகள் உள்ளனர் என்பது குறிப்பிடத் தக்கது.

இந்த கப்பல் ஜோன் ஸ்காட், ஆடம் என்ற இருவருக்கு சொந்தமானது. 58 அடி நீளமுள்ள இந்த கப்பலில் அவர்கள் 2004ம் ஆண்டு உலகப்பயணத்தை தொடங்கினார்கள். இந்த கப்பல் இந்தியாவில் இருந்து ஓமான் நாட்டுக்கு சென்றபோது தான் கடத்தப்பட்டது.

## இராணுவத்தினரின் விந்தணுவை பாதுகாக்க முடிவு!

ஆப்கானிஸ்தானில் போருக்கு செல்லும் இராணுவத்தினரின் விந்தணுக்களை சேமிக்க பிரித்தானிய இராணுவத் தலைமையகம் நடவடிக்கை எடுத்து வருகிறது. ஆப்கானிஸ்தானில் போருக்கு செல்லும் படையினர் இறந்தாலோ, அல்லது படுகாயம் அடைந்து தாம்பத்ய வாழ்க்கையில் ஈடுபட முடியாத நிலை ஏற்பட்டாலோ அவர்களின் குடும்பத்துக்கு அது பெரிய இழப்பாகிறது. படையினரின் இளம் மனைவிகள், காதலிகள் குழந்தை பெற முடிவதில்லை. இந்த



நிலையை தவிர்க்கும் வகையில், ஆப்கானிஸ்தானில் போருக்குச் செல்லும் படையினரின் விந்தணுக்களை சேமித்து வைக்கும்படி, தனியார் விந்தணு வங்கியிடம் பிரித்தானிய இராணுவம் கூறியுள்ளது. ஒரு படையினரின் விந்தணுக்களை உறைந்த நிலையில் சேமித்து வைக்க ஏற்படும் செலவை இராணுவ தலைமையகமே ஏற்றுள்ளது.

இது குறித்து இராணுவத்தினர் ஒருவரின் மனைவி கூறுகையில், எனது கணவர் இறந்தால், அவரது உயிரணுவை பயன்படுத்தி நான் குழந்தை பெற்றுக்கொள்ள அனுமதி கொடுத்திருக்கிறார். இதுவும் ஒரு காப்புறுதி போன்ற திட்டம்தான் என்றார்.

ஆப்கானிஸ்தான்

## தலிபான் தலைவர்களுடன் அமெரிக்கா இரகசிய பேச்சு

தலிபான் தலைவர்களுடன் அமெரிக்க நேரடியான இரகசிய பேச்சுவார்த்தையில் ஈடுபட்டுள்ளது. இத்தகவலை நியூயோர்க்கிலிருந்து வெளியாகும் பத்திரிகைகள் வெளியிட்டுள்ளன. ஆப்கானிஸ்தானில் அமைதி நிலவ அரசியல் ரீதியான தீர்வு கான வேண்டியது அவசியம். அதைக் கருத்தில் கொண்டே தலிபான் தலைவர்களுடன் பேச்சு நடத்தப்படுவதாக வெளியுறவு அமைச்சர் ஹிலாரி கிளின்டன் தெரிவித்தார். தலிபான் தலைவர்களுடன் நேரடியான மறைமுக பேச்சுவார்த்தையை அதிபர் ஒபாமா நிர்வாக அதிகாரிகள் மேற்கொண்டுள்ளதாக பத்திரிகைகளில்

(38ம் பக்கம் பார்க்க)

# நிலநடுக்கத்திற்கு நூற்றுக்கும் மேற்பட்டோர் பலி

நியூசிலாந்தில் கடந்த 22ம் திகதி செவ்வாயன்று ஏற்பட்ட பாரிய நிலநடுக்கத்திற்கு நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் பலியாகியுள்ளனர். மேலும் ஏராளமானவர்கள் இடிபாடுகளில் சிக்கி படுகாயங்களுக்கு உள்ளானார்கள். காயமடைந்தவர்கள் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களின் எண்ணிக்கை 200ற்கும் அதிகமாக இருக்கும் என்று மீட்புக் குழு அதிகாரி ஒருவர் கூறினார். மருத்துவமனையில் இடம் இல்லாமல் நெரிசல் ஏற்பட்டு இருப்பதாகவும்





அவர் தெரிவித்தார்.

நியூசிலாந்து நாட்டின் தெற்கு பகுதியில் கிரைஸ்ட்சர்ச் நகரம், அந்நாட்டின் 2வது பெரிய நகரமாகும். இந்த நகரில் அந்நாட்டு நேரப்படி மதியம் 12.51 மணிக்கு 6.3 ரிக்டர் அளவில் பலத்த பூமி அதிர்ச்சி ஏற்பட்டது.

இதனால் கட்டடங்கள் உடைந்து விழுந்தன. வீடுகள் சரிந்து விழுந்தன. வீதிகளில் நீண்ட பிளவுகள் ஏற்பட்டன. மக்கள் பதட்டத்துடன் வீடு



களில் இருந்து வெளியே ஓடி வந்தனர். கிரைஸ்ட்சர்ச் நகரில் இருந்து 5 மைல் தூரத்தில் 4 கிலோ மீற்றர் ஆழத்தில் இதன் மையம் இருந்ததாக புவியியல் நிலையம் தெரிவித்தது.

இந்த பூமி அதிர்ச்சிக்கு 100ற்கும் மேற்பட்டவர்கள் பலியாகி இருப்பதாக அதிகாரிகள் தெரிவித்தனர். மேலும் ஏராளமானவர்கள் இடிபாடுகளில் சிக்கியுள்ளனர். அவர்களை மீட்கும் பணி வேகமாக நடந்து வருகிறது.

நியூசிலாந்து பிரதமர் ஜோன் கீ இதுபற்றி கூறியதாவது, கடந்த 5 மாதங்களில் 2வது தடவையாக இப்போது பூமி அதிர்ச்சி நடந்து இருக்கிறது. இது ஒரு கறுப்பு நாள். இந்த நகரில் உள்ள 4 இலட்சம் பேரும் மிகவும் பாதிக்கப்பட்டு இருக்கிறார்கள். மிகச்சிறிய நேரத்துக்குள் பெரிய கட்டடங்கள் கூட தரைமட்டத்துக்கு வந்து விட்டன. பூமி அதிர்ச்சி ஏற்பட்ட நேரம், அனைவருக்கும் பகல் உணவு வேளை ஆகும். எனவே ஏராளமானவர்கள் உணவு சாப்பிட்டுக் கொண்டு இருந்தபோதே பலியாகி இருக்கிறார்கள். மீட்பு பணியில் இராணுவத்தினரும், காயம் அடைந்தவர்களுக்கு சிகிச்சை அளிக்கும் பணியில் இராணுவ மருத்துவர்களும் ஈடுபட்டு வருகிறார்கள் என்று அவர் தெரிவித்தார்.

இதுஇவ்வாறிருக்க, பூகம்பம் எப்போது, எங்கு ஏற்படும் என்பதை செயற்கைக்கோள் மூலம் முன்கூட்டியே தெரிந்து கொள்வதற்கான திட்டத்தில் விஞ்ஞானிகள் ஈடுபட்டுள்ளார்கள். இதற்கான ஒப்பந்தத்தில் பிரித்தானிய மற்றும் ரஷ்ய விஞ்ஞானிகள் கையெழுத்திட்டுள்ளனர். இந்த திட்டத்தில் மொஸ்கோ நகரில் இருந்தபடி இரு நாட்டு விஞ்ஞானிகளும் ஈடுபட இருக்கிறார்கள். இதற்காக 2 செயற்கைக்கோள்களை ரஷ்யா - பிரித்தானிய விஞ்ஞானிகள் விண்ணுக்கு அனுப்ப இருக்கிறார்கள். இவர்கள் அனுப்பும் செயற்கைக் கோள்கள் பூமியை சில நூறு கி.மீ. தூரத்துக்கு மேல் தனித்தனியே சுற்றி வந்தபடி பூமியின் எந்த பகுதியில் நடுக்க நடவடிக்கைகளையும், எரிமலை நடவடிக்கைகளையும் கண்காணிக்கும். செயற்கைக் கோள்களில் இருந்து கிடைக்கும் தகவல்களை வைத்து முன் கூட்டியே சம்பந்தப்பட்ட நாடுகளை விஞ்ஞானிகள் எச்சரிப்பார்கள். இதன் மூலம் பூகம்பத்தால் உயிர் இழப்பு ஏற்படுவது தடுக்கப்படும் என்று கூறப்படுகின்றது.

இதுஇவ்வாறிருக்க, பூகம்பத்தில் சிக்கி 400 பேர் வரை காணாமல் போயுள்ளதாக கூறப்படுகின்றது. இடிபாடுகளில் சிக்கிய பலரது கை, கால்களை அகற்றியே மீட்கப்பட்டனர். இரவு முழுதும் மீட்பில் ஈடுபட்டு 120 பேரை உயிரோடு மீட்க முடிந்தது என மூத்த காவல்துறை அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

சிலர் இடிபாடுகளில் தாங்கள் உயிருடன் இருப்பதாக செல்பேசியில் செய்தி, டுவிட்டர் செய்தி மூலம் தகவல் தெரிவித்துள்ளது அவர்கள் உற்றார் உறவினரிடையே ஆறுதலை அளித்துள்ளது. எனினும் தொடர்ச்சியான சிறு நிலநடுக்கங்களில் இடிபாடுகளுக்கு இடையே உயிருடன் உள்ளவர் நிலை மோசமடைவதற்குள் மீட்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது என காவல்துறையினர் தெரிவித்தனர்.

காணாதவர்களில் பலர் இடிபாடுகளில் சிக்கி இறந்திருக்கலாம் என அஞ்சப்படுகிறது. இறந்தவர்களில் 75 பேர் உடல்கள் மீட்கப்பட்டுள்ளன. பூகம்பத்தைத் தொடர்ந்து பல தொடர் நிலநடுக்கங்கள் நிகழ்ந்து வருவதால் மீட்புப் பணிகள் மந்தமாக நடக்கிறது. மீட்புப் பணியாளர்கள் செவ்வாய் இரவு முழுதும் தேடுதல் பணியில் ஈடுபட்டனர். 500-க்கும் மேற்பட்ட பணியாளர்கள் இடிபாடுகள் இடையே எவரேனும் உயிரோடு இருக்கின்றனரா, எனத் தேடி வருகின்றனர்.

வருகிறது. இந்த வழக்கில் குற்றஞ்சாட்டப்பட்டுள்ள முன்னாள் அதிபர் பர்வேஷ் முஷரப் ஆஜராக வேண்டும் என்று நீதிமன்றம் அவருக்கு கைது உத்தரவு பிறப்பித்தது. இந்த வழக்கு விசாரணைக்கு வந்தபோது, காவல்துறையினர் தரப்பில், முஷரப் பிரித்தானியா நாட்டில் வசித்து வருவதால், இந்த கைது உத்தரவை அவரிடம் வழங்க முடியவில்லை என்று தெரிவிக்கப்



பட்டது. இதை தொடர்ந்து மீண்டும் கைது உத்தரவை நீதிமன்றம் பிறப்பித்துள்ளது. இந்த உத்தரவின் பிரதியை இஸ்லாமாபாத்தில் உள்ள முஷரப்பின் வீட்டிலும், இலண்டனில் உள்ள வீட்டிலும் வழங்கும்படி நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது.

## வாடகை செல்பேசிக்கு அனுமதி இரத்து

வடகொரியா வரும் வெளிநாட்டு சுற்றுலா பயணிகள் வசதிக்காக வாடகைக்கு செல்பேசிகளை அளிக்கும் திட்டம் 2008ல் தொடங்கப்பட்டது. இப்போது எகிப்து உட்பட மத்திய கிழக்கு நாடுகள், ஆபிரிக்க நாடுகளில் ஜனநாயக அரசை ஏற்படுத்தக் கோரி ஆட்சிக்கு எதிராக நடக்கும் போராட்டங்களால் வடகொரியா அதிர்ச்சி அடைந்துள்ளது. எகிப்து அதிபர் முபாரக் பதவி விலகியது உட்பட பல நாடுகளில் நடைபெறும் மக்கள் எழுச்சிகள் பற்றிய செய்திகளை வடகொரியா இதுவரை வெளியிடவில்லை. இந்நிலையில், வெளிநாட்டினருக்கு வாடகைக்கு செல்பேசி கொடுத்தால், தங்கள் நாட்டினருடன் தொடர்பு கொண்டு போராட்ட விவரங்களை வடகொரியாவில் பரப்பிவிடக் கூடும் என்று அரசு அஞ்சுகிறது. எனவே, வாடகைக்கு செல்பேசி அளிக்கும் வசதியை வடகொரியா இடைநிறுத்தியுள்ளது.

## முபாரக்கை விரட்டிய 'பேஸ்புக்'!

எகிப்தைச் சேர்ந்த நபரொருவர் தனது மகளுக்கு பேஸ்புக் எனப் பெயரிட்டுள்ளார். ஜமால் இப்ராஹிம் (20) என்ற அந் நபர், அண்மையில் நடந்த ஆர்ப்பாட்டங்களை நினைவு கூறும் முகமாகவே இப்பெயரினை தனது மகளுக்கு சூட்டியுள்ளார். அப்பெண் குழந்தையின் முழுப்பெயர் பேஸ்புக் ஜமால் இப்ராஹிம் ஆகும்.

அந் நாட்டு முன்னாள் அதிபர் முபாரக் பதவி விலகக்கோரி இடம் பெற்ற ஆர்ப்பாட்டங்களின் போது பேஸ்புக் வலையமைப்பானது முக்



கியமானதோர் பங்கை வகித்திருந்தது. ஆர்பாட்டக்காரர்களை ஒன்று திரட்டுவதிலும், செய்திகளை பரிமாறிக்கொள்வதிலும் அதன் சேவைகள் அளப்பரிய




தாக இருந்தன. மத்திய கிழக்கில் உள்ள மற்றைய நாடுகளை விட எகிப்திலேயே அதிக பேஸ்புக் பாவனையாளர்கள் உள்ளனர். அங்கு சுமார் 5 மில்லியன் பேர் பேஸ்புக் பாவனையாளர்களாக உள்ளதுடன் அவ்வார்ப்பாட்டத்தைத் தொடர்ந்து அவ்வெண்ணிக்கை வேகமாக அதிகரித்தும் வருகின்றது. பேஸ்புக் ஸ்தாபகர் மார்க் ஷக்கர் பேக்கினை எகிப்தில் இடம்பெற்ற ஆட்சி மாற்றத்தின் பங்கிற்காக எகிப்தியர் நன்றி செலுத்தியிருந்தமை குறிப்பிடத்தக்கது.

### அரபு உலகத்தின் முயற்சி ஒரு வீட்டோவால் நாசமாகியது

பலஸ்தீன காஸா பகுதியில் இஸ்ரேலின் அத்துமீறலைக் கண்டித்து சுமார் 130 வரையான நாடுகளின் ஆதரவுடன் ஐ.நாவின் பாதுகாப்பு சபைக்கு வந்த பிரேரணையை மறுபடியும் வீட்டோ பாவித்து அமெரிக்கா தடை செய்துள்ளது. பாதுகாப்பு சபையில் உள்ள 15 உறுப்புரிமை நாடுகளில் 14 நாடுகள் ஆதரிக்க, அமெரிக்கா மட்டும் வீட்டோ பாவித்து இந்த முயற்சியைத் தடுத்துள்ளது. வீட்டோவைப் பாவித்த பின்னர் அமெரிக்காவின் ஐ.நா பிரதிநிதி சூசன் றைஸ் கூறும் போது இரண்டு தரப்பும் கடும் போக்கைக் கடைப்பிடிப்பதால் வீட்டோவை பாவிப்பதாக தெரிவித்தார்.

அரபு கூட்டமைப்பு பல்வேறு நாடுகளுடன் உருவாக்கிய மேற்கண்ட பிரேரணை ஒரேயொரு வீட்டோவால் சிதறடிக்கப்பட்டது. ஐ.நாவின் கட்டமைப்பு தவறானது என்பதையும், அங்கு ஐந்து நாடுகள் மட்டும் வீட்டோ அதிகாரத்துடன் இருப்பதுமே இன்றைய உலகின் மோசமான அவலங்களுக்குக் காரணம் என்ற வேதனைகள் இன்னொரு தடவை அமெரிக்க வீட்டோவால் உறுதி செய்யப்பட்டுள்ளது.

### *சீனாவில் 60 ஆயிரம் இணையத் தளங்கள் தடை*

ஆபாச இணையத்தளங்களை தடைசெய்யும் நடவடிக்கையில் இறங்கியுள்ள சீனா சுமார் 60,000 வரையான இணையத்தளங்களை தடைசெய்துள்ளது. மேலும் இதனுடன் தொடர்புடையவர்கள் என

→



செய்திகள் வெளியாகியுள்ளன.

புலிட்ஸர் பரிசு பெற்ற பத்திரிகையாளர் ஸ்டீவ் கோல் இது தொடர்பாக எழுதிய கட்டுரையில், முன்பு எத்தகைய சூழலில் அமைதி பேச்சுவார்சத்தைக்கு தலிபான் தலைவர்களில் எவர் ஒப்புக் கொண்டனர் என்பதை ஒபாமா நிர்வாக அதிகாரிகள் ஆய்வு செய்து வருகின்றனர். அவ்விதம் ஆர்வமாயிருந்த தலிபான் தலைவர்களிடம் இப்போது பேச்சு நடத்த முடிவு செய்யப்பட்டுள்ளது. அப்போது அவர்கள் எத்தகைய நிபந்தனைகளை விதித்தனர் என்பது குறித்தும் ஆராயப்பட்டு வருகிறது.

இதனிடையே ஆசிய சங்கத்தில் பேசுகையில் ஹிலாரி கிளிண்டன் பேசியது, ஆப்கனிஸ்தானில் அமெரிக்க படைகளை அதிகரித்ததற்குக் காரணமே அல்-ஹைடா அமைப்புடன் தலிபான் தீவிரவாதிகளை பிரிப்பதற்காகத்தான். இவ்விதம் பிரிந்த தலிபான் தலைவர்களிடம் ஆப்கானிஸ்தானில் நிரந்தர அமைதிக்கு அரசியல் தீர்வு அளிக்கும்படி பேச்சு நடத்தப்படுகிறது.

2001ம் ஆண்டில் பழமைவாத இஸ்லாமிய தலைமையை அமெரிக்கா தலையிட்டு அகற்றிய போதே தலிபான் அமைப்பினருக்கு ஒரு வாய்ப்பு கிடைத்தது. ஆனால் இந்த அமைப்பின் தீவிரவாத தலைவர்கள் அல்-ஹைடாவுடன் கூட்டு சேர்ந்ததால் அந்த வாய்ப்பு கைநழுவிப் போனது என்று கிளிண்டன் குறிப்பிட்டார். இப்போது அளிக்கப்பட்ட வாய்ப்பையும் தலிபான் தலைவர்கள் ஏற்கவில்லையெனில் சர்வதேச சமூகத்தால் புறக்கணிக்கப்படும் ஆபத்துள்ளது. அல்-ஹைடா தீவிரவாத அமைப்போடு சேர்த்து தலிபான் அமைப்பும் சர்வதேச நாடுகளால் வெறுக்கப்படும் அபாயம் உருவாகும் என்றும் எச்சரித்தார் ஹிலாரி கிளிண்டன்.

## அரசாங்கம் அமைக்கக்கோரி ஆடை களைந்து போராட்டம்

பெல்ஜியத்தில் தேர்தல் நடைபெற்று 250 நாட்கள் கடந்த நிலையிலும் இதுவரை அரசாங்கம் ஒன்று அமைக்கப்படாதமைக்கு எதிர்ப்பு தெரிவிப்பதற்காக பலர் தங்களது ஆடைகளை களைந்து விட்டு உள்ளாடைகள் மாத்திரம் அணிந்தவாறு ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டனர். பெல்ஜியத்தில் பிரதம மந்திரி யூவ்ஸ் லெட்டர்மி பதவி விலகி 249 நாட்கள் கடந்துவிட்ட போதிலும் அங்கு புதிய அரசாங்கம் அமைக்கப்படவில்லை. பொதுத்தேர்தலில் எந்தவொரு கட்சிக்கும் பெரும்பான்மை கிடைக்கவில்லை. இந்நிலையில் அரசாங்கம் அமைப்பதற்காக கட்சிகளிடையே நடைபெறும் பேச்சுவார்த்தைகள் இழுபறிப்பட்டு நீண்டு செல்கின்றன.

இதனால் உலகில் அதிக நாட்கள் (250) அரசாங்கம் இல்லாதிருந்த நாடாக பெல்ஜியம் சாதனை படைத்துள்ளது.

இந்நிலையில் கெந்த் நகரில் அதே எண்ணிக்கையான மக்கள் இணைந்து தங்களது ஆடைகளை களைந்துவிட்டு இந்த போராட்டத்



தில் ஈடுபட்டனர். பெல்ஜியத்தின் மற்ற நகரங்களில் சிப்ஸ், பெல்ஜியத்தின் தேசிய உணவு போன்றவற்றை இலவசமாக வழங்கி கவனத்தை ஈர்த்தன. பிரெஞ்சு மொழி பேசுகின்றவர்கள் வாழும் நகரமான லூவெய்ன் லா நேவியூவில் இலவசமாக பெல்ஜிய பியர்கள் வழங்கப்பட்டன. இந்த நிகழ்வுகளுக்கான தகவல்கள் குறுந்தகவல், பேஸ்புக் மற்றும் ட்விட்டர் ஆகியவை மூலம் பரப்பப்பட்டன. கடந்த யூன் மாதம் தேர்தல் நடந்து 8 மாதங்களாகிவிட்ட போதிலும் மொழி ரீதியாக பிரிந்துள்ள கட்சிகளினால் அரசாங்கம் அமைப்பதற்கான கூட்டணியொன்றை அமைப்பதற்கு முடியாமலுள்ளது.

அண்மையில்; கட்சிகளின் ஒற்றுமையின்மையால் கோபம் கொண்ட சோசலிசக் கட்சியின் செனட்டர் மார்லீன் டெம்மெரமன் பேச்சுவார்த்தையில் ஈடுபட்டுள்ள கட்சித்தலைவர்கள் விரைவில் பேச்சுவார்த்தையை முடித்து அரசாங்கம் அமைக்க முன்வரவேண்டும். இல்லாத பட்சத்தில் அதுவரை அவர்களின் மனைவிகள் தங்கள் கணவர்களுடன் உடல் உறவு வைத்துக்கொள்ளாமல் வேலை நிறுத்தம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. 2009ம் ஆண்டு இதுபோன்ற ஒரு நிலைமை கென்யா நாட்டில் ஏற்பட்டபோது இதுபோன்ற உறவுக்கு தடை விதிக்கப்பட்டது என்றும் அவர் சுட்டிகாட்டியிருந்தார்.




## சூயஸ் கால்வாயில் போர்க் கப்பல்கள் – அமெரிக்கா கவலை

ஈரான் நாட்டில் 1979ம் ஆண்டு புரட்சி ஏற்பட்ட பிறகு அந்த நாட்டு கப்பல்கள் எகிப்தின் சூயஸ் கால்வாய் வழியாக செல்வது கிடையாது. ஆனால், முபாரக் விரட்டியடிக்கப்பட்டதன் பின்னர் எகிப்து நாட்டின் ஆளும் இராணுவ ஆணையாளர் ஈரான் கப்பல்கள் சூயஸ் கால்வாய் வழியாக செல்வதற்கு அனுமதி அளித்துள்ளார். இதனால் இப்போது தான் முதல் முறையாக ஈரான் போர்க்கப்பல்கள் அந்த கால்வாய் வழியாக சென்று வருகின்றன. இது குறித்து இஸ்ரேல் தன் கவலையை வெளிப்படுத்தியுள்ளது.

இந்நிலையில், இதுகுறித்து அமெரிக்கா கவலை தெரிவித்துள்ளது. மத்தியதரைக் கடல் பகுதியில் ஈரான் போர்க்கப்பல்கள் வலம் வருவதையும், அதன் நடவடிக்கையையும் தொடர்ந்து கண்காணித்து வருவதாகவும் அந்நாடு கூறியுள்ளது.

ஈரானின் இச்செயலை அத்துமீறிய செயலாகவே கருதுகிறோம். இதனால் அக்கப்பல்கள் எங்கெல்லாம் செல்கின்றன என்பதை எச்சரிக்கையோடு கவனித்து வருகிறோம் என்று அமெரிக்காவின் வெளியுறவுத் துறை செய்தித் தொடர்



பாளர் பிலிப் குரோவ்லே தெரிவித்துள்ளார். ஈரான் எப்போதும் தங்களுக்கு எதிராகவே செயல்பட்டு வருவதாக இஸ்ரேல் கருதுகிறது. இதனால் அந்நாட்டு போர்க்கப்பல்கள் மத்திய தரைக் கடல் பகுதியில் வலம் வருவதற்கும் அந்நாடு அதிருப்தி தெரிவித்துள்ளது.

ஈரான் போர்க்கப்பல்களால் அச்சுறுத்தல் ஏற்பட்டாலும் ஆச்சர்யப்படுவதற்கில்லை. அப்படி ஏற்பட்டால் அதை எதிர்கொள்ளத் தயாராக இருங்கள் என்று தமது நாட்டு கடற்படைக்கு இஸ்ரேல் உத்தரவிட்டுள்ளது.

ஆனால் தங்களது நாட்டு போர்க்கப்பல்கள் மத்தியதரைக் கடல் பகுதியில் வலம் வருவது வழக்கமான ஒன்றுதான் என்று ஈரான் தெரிவித்துள்ளது. இதனிடையே, எகிப்துடன் பகைமை கொண்டிராத எந்த ஒரு நாட்டின் போர்க்கப்பலும் சூயல் கால்வாயை கடந்து மத்தியதரைக் கடலில் வலம் வரலாம் என்று சூயஸ் கால்வாய் நிர்வாகம் தெரிவித்துள்ளது.

# அமெரிக்க மருத்துவ காப்புறுதியில் நடந்த மிகப் பாரிய மோசடி

அமெரிக்காவில் மருத்துவ காப்புறுதித் திட்டத்தில் 163 மில்லியன் டொலர் மோசடி தொடர்பாக, 6 இந்திய மருத்துவர்கள் உள்பட 111 மருத்தவர்களும், தாதிகளும் கைது செய்யப்பட்டுள்ளனர். அமெரிக்காவில், 'மெடிகேர்' என்ற மருத்துவ காப்புறுதித் திட்டம், அரசாங்கத்தால் அமல்படுத்தப்பட்டு வருகிறது. இது, 65



வயதுக்கு மேற்பட்ட அமெரிக்கர்களுக்கான திட்டம். இதில், சுமார் நான்கரைக் கோடி முதியவர்களும், மாற்றுத்திறனாளிகளும் சேர்க்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு தனியார் மருத்துவமனைகளில் அளிக்கப்படும் சிகிச்சை செலவுகளை சம்பந்தப்பட்ட மருத்துவமனை நிர்வாகமும், மருத்துவர்களும் அரசாங்கத்திடம் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

ஆனால், இந்தத் திட்டத்தை பயன்படுத்தி, சிகிச்சை அளிக்காமலே, சிகிச்சை அளித்ததாக போலி துண்டுக மூலம் 163 மில்லியன் டொலர் அரசுப்பணம் பெறப்பட்டுள்ளதை அமெரிக்க அரசு கண்டுபிடித்துள்ளது. இதையடுத்து, அமெரிக்க புலனாய்வு அமைப்பான எப்.பி.ஐ.யின் அதிகாரிகள் 700 பேர் நாடு முழுவதும் ஒரே நாளில் அதிரடி வேட்டையில் ஈடுபட்டனர். இதில், 6 இந்திய மருத்துவர்கள் உள்பட 111 மருத்துவர்கள், தாதிகள், மருத்துவமனை உரிமையாளர்கள், மருந்துக்கடை உரிமையாளர்கள் கைது செய்யப்பட்டனர். புருக்ளின், சிகாகோ, டல்லாஸ், டெட்ராய்டு, ஹஸ்டன், லாஸ் ஏஞ்




சல்ஸ், லூசியானா, மியாமி, தம்பா ஆகிய 9 நகரங்களில் இவர்கள் கைது செய்யப்பட்டனர். அமெரிக்காவில் நடந்த மிகப்பெரிய மருத்துவ மோசடி இதுதான் என்று அரச தலைமை வழக்கறிஞர் எரிக் ஹோல்டர் தெரிவித்தார்.

## மரம் நடுகை

பிலிப்பைன்சின் கமெரின் மாநிலத்தில் பாரிய மரம் நடுகைத் திட்டம் கடந்த புதன்கிழமை அமுல்படுத்தப்பட்டது. கடந்த ஆண்டு 50 ஆயிரத்து 33 மரங்களை ஒரே நாளில் நட்டு சாதனைபடைத்த இந்தியாவின் கின்னஸ் சாதனையை முறியடிக்கும் வகையில் இந்த மரம் நடுகைக்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. எனினும், இதுவரை நடப்பட்ட மரங்களின் எண்ணிக்கை எவ்வளவு என்பது தெரியவரவில்லை.



## இறுதி உரிமையையும்...

அனுமதிக்க இயலாது. நீங்கள் வந்த அதே விமானத்தில் திரும்பிச் செல்லுங்கள்' என்று வற்புறுத்தினர்.

பிரபாகரனுக்கு மட்டுமின்றி இனமான உணர்வுள்ள ஒவ்வொரு தமிழனுக்கும் அன்னையாய் விளங்கும் பார்வதி அம்மாளுக்கு அஞ்சலி செலுத்துவதற்குக்கூட அனுமதிக்காத ராஜபட்சேவையும் சிங்கள இனவெறி அரசையும் விடுதலைச் சிறுத்தைகள் மிக வன்மையாகக் கண்டிக்கிறது. பார்வதி அம்மாள் இறப்பையொட்டி ஈழத்தில் கறுப்புக்கொடிகள் ஏற்றக்கூடாது எனவும் அவரின் உருவப்படங்களை வைத்து அஞ்சலி செலுத்தக் கூடாது எனவும் ராஜபட்சேவின் இராணுவ அரசு கெடுபிடி செய்து வருகிறது.

இந்நிலையில் இந்திய, தமிழக அரசுகள் ராஜபட்சே கும்பலைக் கடுமையாக எச்சரிக்க வேண்டுமென விடுதலைச் சிறுத்தைகள் கேட்டுக்கொள்கிறது. மேலும் தமிழகத்திலுள்ள இலங்கைத் தூதரகத்தை உடனடியாக அப்புறப்படுத்த வேண்டுமெனவும் விடுதலைச் சிறுத்தைகள் வற்புறுத்துகிறது. நேரிலே அஞ்சலி செலுத்த முடியாவிட்டாலும் அன்னை பார்வதி அம்மாளுக்கு லட்சோபலட்சக் கணக்கான விடுதலைச் சிறுத்தைகளின் சார்பில் எமது வணக்கத்தை தமிழகத்திலிருந்து செலுத்துகிறோம் என்று திருமாவளவன் கூறியுள்ளார்.எவர் இறந்துபோனாலும் அவரது உடலத்துக்கு உரிய மரியாதை தந்து இறுதிச் சடங்கு செய்வது என்பது மனிதகுலத்தின் மிகப்பழமையான நாகரீகம்! ஒருவரது இறந்து போன உடலைச் சிதைப்பதும், அவமானப்படுத்துவதும் மிகவும் இழிவுக்குள்ளான ஒரு செயலாகவே இதுவரை சமூகத்தின் அனைத்து நாகரீகங்களிலும் பார்க்கப்படுகின்றது. 'அதையெல்லாம் மனிதனுக்குச் சொல்லுங்கள்: எங்களுக்கல்ல!' என்று சிங்களம் மீண்டும் ஒருமுறை உரத்துக் கூவியிருக்கின்றது.

பேரன்னை பார்வதியம்மாளின் அஸ்தி கடந்த செவ்வாய்க்கிழமை இரவு இனந்தெரியாதோரால் மிகவும் கேவலமான முறையில் நாசமாக்கப்பட்டுள்ளது. அவரை எரியூட்டிய இடத்தில் நாய்களை துப்பாக்கியினால் சுட்டுப் போட்டதுடன் அவரது அஸ்தியும் தாறுமாறாக அள்ளி வீசப்பட்டிருந்தது. பார்வதியம்மாளின் பூதவுடல் அஞ்சலி நிகழ்வுக்குப்பின்னர் ஊறணி மயானத்தில் தகனம் செய்யப்பட்டது. இரவு 7 மணிக்குப்பின்னர் அங்கு கூடியிருந்த மக்கள் கலைந்து சென்றனர். மறுநாளான நேற்றுமுன்தினம் மயானத்துக்குச் சென்று பார்த்த வேளை அவரது அஸ்தி எரியூட்டப்பட்ட இடத்தில் இருந்து அள்ளி தாறுமாறாக வீசப்பட்டிருந்தது. அத்துடன் மூன்று நாய்கள் துப்பாக்கியால் சுடப்பட்டு அரைகுறையாக எரிக்கப்பட்ட நிலையில் அவரது அஸ்தியுடன் போடப்பட்டும் இருந்தது. அதேவேளை, செவ்வாய்க்கிழமை மாலை மயானத்திற்கு வந்த சிலர் இறுதிக்கிரியைகளை நடத்திய பூசகர் யார் என சிங்களத்தில் மிரட்டும் தொனியில் விசாரித்ததாகவும் தெரிவிக்கப்படுகிறது. அத்துடன், இறுதிக்கிரியையின் போது, அங்கு பூட்டப்பட்ட கடைகளின் உரிமையாளர்கள் இராணுவத்தினரால் அழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டனர் என்றும் தெரிவிக்கப்படுகின்றது.

முன்னதாக பார்வதி அம்மாளின் உடல் வைக்கப்பட்டிருந்த வல்வெட்டித்துறை வீட்டில் இருந்து எரியூட்டும் மைதானம் வரை வழியெங்கும் ராணுவத்தினரும் புலனாய்வாளர்களும் நிறுத்தப்பட்டிருந்தனர். அஞ்சலி செலுத்த வந்தவர்களை ராணுவத்தினர் தொடர்ந்து புகைப்படம் மற்றும் வீடியோ எடுத்தனர். ஆங்காங்கே கட்டப்பட்டிருந்த கறுப்புக் கொடிகளையும் சுவரொட்டிகள், பதாதைகள் அனைத்தையும் அகற்றியதுடன், இவற்றைக் கட்டிய இளைஞர்களை இராணுவப் புலனாய்வாளர்கள் கடத்திச் சென்றதாகவும் சிலர் விசாரணையின் பின்னர் எச்சரிக்கை செய்யப்பட்ட பின்னர் விடுவிக்கப்பட்டதாகவும், சிலர் இன்னும் விடுவிக்கப்படவில்லை எனவும் தகவல்கள் தெரிவிக்கின்றன. இந்நிலையில், நேற்றுமுன்தினம் நள்ளிரவு வல்வெட்டித்துறையில் இருந்து பயணிகளை ஏற்றிக்கொண்டு கொழும்பு நோக்கிச் சென்ற தனியார் பேருந்து ஒன்று அநுராதபுரம் பகுதியில் வைத்து சிங்களக் காடையர்களின் கல்வீச்சுக்கு உள்ளாகி சேதமடைந்துள்ளது. சாரதியின் சாமர்த்தியத்தால் பயணிகள் காயமெதுவுமின்றி காப்பாற்றப்பட்டனர். இந்நிலை தொடருமாயின், தமிழரின் நிலை அவலத்திற்குரியதாகிவிடும். அடி உதவுவது போல அண்ணன் தம்பி உதவமாட்டான்.

கருதப்படும் 5000 பேரை கைது செய்துள்ளது. ஆபாச இணையத்தளங்களால் சிறுவர்கள் உளரீதியாக பாதிக்கப்படுவதாக இந் நடவடிக்கையில் ஈடுபட்டுள்ள சீன அதிகாரிகள் தெரிவித்தனர். இதன்போது சுமார் 1.79 மில்லியன் இணையத்தளங்கள் பரிசிலிக்கப்பட்டுள்ளதுடன் 350 மில்லியன் ஆபாச நிழற்படங்கள், ஒளிப்பதிவுகள், கட்டுரைகள் என்பன அழிக்கப்பட்டுள்ளன. ஏற்கனவே பாதுகாப்பு காரணங்களின் பேரில் சீனாவில் யூரியூப், டுவிட்டர், பிளிக்கர் மற்றும் பேஸ்புக் ஆகிய இணையத்தளங்கள் தடைசெய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## நேபாள கொங்கிரசின் நிபந்தனை

நேபாளத்தில் மாவோயிஸ்டு கொம்யூனிஸ்ட் - ஐக்கிய மார்க்சிஸ்ட் கூட்டணி ஆட்சி நடைபெறுகிறது. மாவோயிஸ்டு தலைவர் பிரசந்தா மற்றும் பிரதமர் ஜலாநாத் கனால் ஆகியோருக்கு இடையே 7 அம்ச ஒப்பந்தம் கையெழுத்தானது.



இந்த நிலையில், நேபாள கொங்கிரஸ் கட்சிக்கும் ஆட்சியில் சேர அழைப்பு விடுக்கப்பட்டது. ஆனால், 7 அம்ச ஒப்பந்தத்தை இரத்து செய்தால் மட்டுமே கூட்டணி அரசில் பங்கேற்க முடியும் என நேபாள கொங்கிரஸ் தெரிவித்துள்ளது. அந்த ஒப்பந்தமானது, இடைக்கால அரசியலமைப்பு சட்டம் மற்றும் கூட்டு அமைதி ஒப்பந்தம் ஆகியவற்றுக்கு எதிரானது என்பதால் உடனடியாக இரத்து செய்ய வேண்டும்' என வலியுறுத்தி இருக்கிறது.

## அதிகமான காய்கறி விளைவித்தவருக்கு அபராதம்

அமெரிக்காவில், அளவுக்கு அதிகமான காய்கறிகளை விளைய வைத்ததாக கூறி, ஒரு விவசாயிக்கு ஆயிரக் கணக்கான டொலர்கள் அபராதம் விதிக்கப்பட்டுள்ளது. அட்லாண்டா மாகாணம் டிகல்ப் மாவட்டத்தைச் சேர்ந்த அந்த விவசாயியின் பெயர் ஸ்டீவ் மில்லர். அவர், தனக்கு சொந்தமான 2 ஏக்கர் நிலத்தில் அதிகமான காய்கறிகளை பயிரிட்டு அறுவடை செய்தார். அப்படிச்செய்வது, உள்ளூர் சட்டத்தை மீறிய குற்றம் என்று அவருக்கு மாவட்ட நிர்வாகம் அபராதம் விதித்துள்ளது. இதை எதிர்த்து போராடப்போவதாக ஸ்டீவ் மில்லர் அறிவித்துள்ளார்.



அமெரிக்கா

## 4.36 கோடி பேர் ஏழைகளாக வாழ்கின்றனர்

உலகின் வல்லரசு நாடுகளில் ஒன்றும், பணக்கார எட்டு நாடுகளில் ஒன்றுமான அமெரிக்காவில் 4.36 கோடி பேர் ஏழைகள். இது அமெரிக்க மக்கள் தொகையில் 7 பேரில் ஒருவர். இதனை அந் நாட்டு மக்கள்தொகை கணக்கெடுப்பு அமைப்பு அண்மையில் தெரிவித்துள்ளது. 2009ம் ஆண்டில் மக்களின் பொருளாதாரத் தரம் தொடர்பான அறிக்கையை அந்த அமைப்பு கடந்த வியாழக்கிழமை வெளியிட்டது. இதில், கடந்த ஆண்டு ஏற்பட்ட கடும் பொருளாதார



நெருக்கடி காரணமாக அமெரிக்காவில் 14.3 சதவீதம் பேர் (4.36 கோடி பேர்) ஏழ்மையில் இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. 2008ல் 13.2 சதவீதம் பேர் (3.98 கோடி பேர்) ஏழைகளாக இருந்தனர் என்றும் அந்த அறிக்கையில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. நவம்பர் 2ல் அமெரிக்காவில் இடைத் தேர்தல்கள் நடைபெறவுள்ள நிலையில், இந்த அறிக்கை ஒபாமா அரசுக்கு நெருக்கடி அளிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இதேவேளை, அந்நாட்டில் வேலை வாய்ப்பின்மை 1965க்கு பின் தற்போதுதான் மோசமான நிலையை அடைந்துள்ளது. இதற்கிடையே, அமெரிக்காவில் தயாரிக்கப்பட்ட பொருட்களையே அமெரிக்க நாடாளுமன்ற உறுப்பினர்கள் அனைவரும் வாங்குவதை கட்டாயம் ஆக்கும் 2 மசோதாக்கள், அமெரிக்க பிரதிநிதிகள் சபையில் நிறைவேற்றப்பட்டுள்ளன. உலகம் முழுவதும் அமெரிக்கப் பொருட்கள். ஆனால், அமெரிக்கப் பொருட்களுக்கு மட்டும் அமெரிக்காவில் முன்னுரிமை.

சீனா

## குடும்பக் கட்டுப்பாட்டிற்கு 30 வயது

உலக மக்கள் தொகையில் முதலிடத்தில் சீனா உள்ளது. இதனால் சீனாவில் மிக கடுமையான சட்டம் அமலில் இருக்கிறது. இதற்காக, 1980ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் 'ஒரு குடும்பம், ஒரு குழந்தை' என்ற சட்டம்கொண்டு வரப்பட்டது. அதன்படி, குடும்பத்துக்கு ஒரு குழந்தை மட்டுமே பெற்றுக் கொள்ள முடியும். இரண்டாவது குழந்தையைப் பெற்றுக் கொண்டால் அதிக அளவில் அபராதம், சம்பளத்தில் வெட்டு அல்லது வேலையில் இருந்து விலக்கல் உட்பட பல்வேறு தண்டனைகள் கிடைக்கும். இதையும் மீறி, கள்ளத்தனமாக இரண்டாவது குழந்தையை பெற்றாலும் பாடசாலையில் சேர்க்க தடை விதிக்கப்படும். இப்போது இரண்டாவது குழந்தையை மறைத்துவைத்திருந்தால் எதிர்காலத்தில் குடியுரிமையும் வழங்கப்படமாட்டாது என அறிவித்துவிட்டது. மக்கள் தொகையை கட்டுப்படுத்த சீன அரசு மேற்கொண்டுள்ள இந்தக் கடுமையான சட்டம் அமலுக்கு வந்து கடந்த 25ம் திகதி சனிக்கிழமையுடன் 30 ஆண்டுகள் நிறைவடைகிறது. இதற்கிடையே, சீனாவில் 100 ஆண்களுக்கு 119 பெண்கள் என்ற விகிதத்தில் மக்கள் தொகை இருப்பதால், 2020ம் ஆண்டில் இரண்டரை கோடி இளைஞர்கள் திருமணத்துக்கு பெண் கிடைக்காமல் அவதிப்படுவார்கள் என ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

சீனா

## அதிகரிக்கும் விவாகரத்துக்கள்

சீனாவில் விவாகரத்து அதிகரித்து வருகிறது. கடந்த ஆண்டின் முதல் 6 மாதங்களில் மட்டும் 8 இலட்சத்து 48 ஆயிரம் தம்பதிகள் விவாகரத்து கோரி மனு தாக்கல் செய்துள்ளனர். இது 10 சதவீத உயர்வு ஆகும். விவாகரத்து அதிகமாக இருக்கும் பகுதிகளில் ஷின்ஜியாங் உய்க்குர் மாநிலம் தான் முதலிடத்தில் உள்ளது. பீஜிங் நகரம் விவாகரத்து அதிகம் உள்ள நகரங்களில் 8வது இடத்தில் உள்ளது. ஷாங்காய் நகரம் 6வது இடத்தில் உள்ளது. 2010 ஆண்டு மட்டும் 24 இலட்சத்து 70 ஆயிரம் சோடிகள் விவாகரத்து பெற்றுள்ளனர். 2005ம் ஆண்டு முதல்



2009ம் ஆண்டு வரை ஆண்டு தோறும் 7.6 சதவீதம் சோடிகள் என்ற விகிதத்தில் விவாகரத்து செய்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. கணவன் ஒரு இடத்திலும் மனைவி ஒரு இடத்திலும் வேலை செய்வதும், வேலை பார்க்கும் இடங்களில் சக பணியாளர்களுடன் திருமணத்துக்கு வெளியே கொள்ளும் உறவுகளும், வேறு வேறு இடங்களை சேர்ந்தவர்களை திருமணம் செய்துகொள்வதும் விவாகரத்துக்கு காரணமாக கூறப்படுகிறது.

கனடா

## உலகில் சிறந்த சுற்றுலா தலம்

உலக அளவில் சிறந்த மதிப்பு மிக்க சுற்றுலா தலங்கள் பட்டியலில் அமெரிக்காவை பின்னுக்குத் தள்ளி கனடா முதலிடம் பிடித்தது.



அதிகமான சுற்றுலா பயணிகளை கவர்ந்து இழுப்பதுடன், சுற்றுலா மூலம் வர்த்தகத்தை வளர்க்கும் நாடுகளை உலக சுற்றுலா சந்தை (டபிள்யூ.டி.எம்.) தேர்ந்தெடுத்து பரிசு வழங்குகிறது. அந்த வரிசையில் 2010ம் ஆண்டின் சிறந்த மதிப்பு மிக்க சுற்றுலா தலமாக கனடாவின் வன்கோவரை அறிவித்துள்ளது.

நாட்டில் சுற்றுலாவை மேம்படுத்த கனடா அரசு ஒவ்வொரு ஆண்டும் அதிகமான தொகையை செலவழிக்கிறது. 2006ல் இந்த பட்டியலில் 12ம் இடம் பிடித்த கனடா, தற்போது முதலிடம் பிடித்தது.

## அதிக குழந்தை பெறுங்கள்!

ஒரு குழந்தைக்கு மேல் பெறுவதற்கு சீனா தடைவிதித்துள்ளது. ஆனால் அருகிலுள்ள தாய்வா



னிலோ அதிக குழந்தைகளைப் பெறுமாறு அரசாங்கம் குடும்பங்களை உற்சாகப்படுத்துகின்றது. தாய்வானின் பிறப்பு வீதம் மிகவும் குறைந்து செல்கின்றது. உலகில் குழந்தைகள் பிறப்பு வீதம் மிகக் குறைந்த நாடாக உள்ளதாகவும் கணிக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் பிறப்பு வீதம் அதிகரிக்கச் செய்வதற்கு தாய்வான் அரசு புதிய பிரச்சாரம் ஒன்றை முன்னெடுத்துள்ளது. புதிய இணைகளே அதிக குழந்தைகளைப் பெற்றெடுங்கள் என்று உற்சாகமூட்டும் விளம்பரங்களை வெளியிட்டு வருகின்றது. இதற்கும் சரிவராது போனால் அடுத்த கட்டம் சலுகைகள்தான் என கூறுகின்றார்கள்.




படம் ஆவணம் - மகிந்த காலில் விழுந்துகிடப்பவர் பல்வேறு அடிதடிகள் வன்முறைகளில் சம்பந்தப்பட்ட அமைச்சர் மேர்வின் சில்வா.




# குடிகாரக் குதிரை!

மனிதர்கள்தான் மதுவுக்கு அடிமையாகி அதனை நாடிச் செல்கின்றார்கள் என்றால் குதிரை ஒன்றும் மதுபான நிலையத்திற்கு சென்று மது அருந்துகின்றது. பிரித்தானியா பர்ட்டன் நகரில் உள்ள பாசில் என்ற குதிரை மதுபானம் குடிப்பதில் அதிக ஆர்வம் கொண்டுள்ளது. இந்த குதிரை ஞாயிறுதோறும் ஒரு குறிப்பிட்ட மதுபான விடுதிக்கு சென்று மதுபானம் அருந்துகின்றது. இந்த குதிரைக்காக தனியாக ஒரு கிண்ணம் அந்த விடுதியில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இதில்தான் அந்த குதிரை மதுவை குடிப்பது வழக்கம். குதிரையின் உரிமையாளர்கள் இங்குதான் மதுகுடிப்பது வழக்கம். அவர்கள் குடிப்பதை பார்த்து விட்டுத்தான் இந்த குதிரையும் மது குடிக்க தொடங்கியது. பல ஆண்டுகளாக அது இங்கு வந்து மது குடிக்கிறது. இதற்கு மது வழங்க விடுதியின் உரிமையாளர்கள் தவறுவது இல்லை. இது பற்றி இதன் உரிமையாளர் ஹார்வி மைல்னஸ் கூறுகையில், நான் இந்த விடுதிக்கு வந்து மதுக் குடிக்கும்போது, பாசில் (குதிரையின் பெயர்) தன் உதடுகளை கோப்பையின் வாயில் வைப்பது வழக்கம். அதற்கு அந்த பானத்தின் வாசனை பிடித்து இருந்தது. இதனால், ருசி பார்ப்பதற்காக கொஞ்சம் கொடுத்தேன். பாசிலுக்கு அது பிடித்து போய்விட்டது என்றார்.



# பச்சோந்திப் பேனா!

இடத்திற்கும் தேவைக்கும் ஏற்றதுபோல் நிறம்மாறும் பச்சோந்திகள் போல் தேவைக்கேற்ப நிறம்மாறும் பேனா ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது. தொழில்நுட்ப மாற்றங்களுக்கு முடிவே கிடையாது. அதற்கு இந்த பேனா ஒரு உதாரணம் என்று கூறப்படுகின்றது. கலர் பிக்கர் பென் (ஊழடழச ?உைமநச ?நஒ ) என்ற இந்தப் பேனாவை வடிவமைத்தவர் கொரியாவைச் சேர்ந்த ஜின்சன் பார்க். இதில் கலர் சென்சார், அதை இயக்கும் பட்டன், தேர்ந்தெடுத்த கலரை காட்டும் பகுதி, பேனா முனை, ஆர்ஜிபி மையை சேமிக்கும் இடம், ஆர்ஜிபி சென்சார் (படங்களைப் பார்க்கவும்) என வியக்கத்தக்க தொழில்நுட்ப பகுதிகள் உள்ளன. விரும்பிய வர்ணத்தைப் பெற அதற்கான பொருளின் முன் ?கலர் சென்சாரை?க் காட்டி ?ஸ்கான் பட்டனை? அழுத்த வேண்டும். உதாரணமாக, இலையின் அருகே சென்சாரை காட்டியபடி ஸ்கான் பட்டனை அழுத்தினால், விநாடியில் இலையின் பச்சை நிறம் ஸ்கான் ஆகிவிடும். வர்ண டிஸ்பிளே பகுதியில் அந்த வர்ணம் வெளியில்கூடத் தெரியும். பிறகு, பேனா முனையால் எழுதினாலோ, வரைந்தாலோ இலையில் நிறத்தில் மை வெளிவரும். ஸ்கான் செய்யப்பட்ட கலரை ஆர்ஜிபி கலர் சென்சார் கிரகித்து அதே நிறத்தில் மையைக் கலந்து விடும். இதனால், விரும்பும் நிறத்தினை துல்லியமாக பெற முடியும்.



# 17 வயதில் 254 கிலோ!





பிரித்தானியாவைச் சேர்ந்த ஜோர்ஜியா டேவிஸ் என்ற 17 வயது சிறுமி இந்த வயதில் 254 கிலோ நிறையை எட்டியுள்ளார். அண்மையில் அமெரிக்கா சென்று சிகிச்சை எடுத்ததில் 95 கிலோ நிறையைக் குறைத்துள்ளார். எனினும், கடந்த இரண்டு ஆண்டுகளில் 45 கிலோ நிறை கூடிவிட்டதாக கவலை வெளியிட்டுள்ளார். நிறை அதிகமாக இருக்கிறதே என்ற கவலையிலேயே நான் அதிகமாக சாப்பிட்டு மேலும் குண்டாகி விட்டேன் என்று கவலைப்படுகிறார்.

# காதலர் தினத்தில் முத்த மழைதாய்லாந்தில் புதிய சாதனை!

காதலர் தினமான கடந்த 14ம் திகதி தாய்லாந்தில் நடந்த உதட்டோடு உதடு பதித்து தொடர்ந்து முத்தம் கொடுக்கும் போட்டியில் 33 மணி நேரத்துக்கு மேல் முத்த மழை பொழிந்து 7 ஜோடிகள் உலக சாதனை படைத்துள்ளனர். காதலர் தினத்தை முன்னிட்டு தாய்லாந்தின் பாட்டயா கடற்கரையில் உதட்டோடு உதடு முத்தம் கொடுக்கும் மரதன் போட்டி நடந்தது. கடந்த ஞாயிற்றுக்கிழமை காலை ஆறு மணிக்கு தொடங்கிய போட்டி மறுநாள் மாலை வரை தொடர்ந்தது.?ஒரு ஜோடிக்கு ஒரு சதுர மீற்றர் இடம் வழங்கப்பட்டது.?அதற்குள் நின்றே முத்தமிட வேண்டும். உட்காரவோ, வெளியேறவோ, தூங்கவோ கூடாது என்பது விதி. அவசரங்களுக்கு மட்டும் போய்வர குறிப்பிட்ட நேரம் அனுமதி. ஒரேயளவு உயரமற்ற ஜோடிகளுக்கு உயரத்துக்கு தக்கவகையில் ஏறிநிற்பதற்கான பெட்டிகள் வழங்கப்பட்டன. இடையில் குழாய் மூலம் உணவு, குடிநீர் கொடுக்கப்பட்டது. போட்டியில் கலந்து கொண்ட 14 ஜோடிகளில் போட்டியில் பங்குபற்றிய பெண்ணொருவர் போட்டி ஆரம்பமாகி அரை மணித்தியாலயத்திற்குள்ளேயே மயங்கி விழுந்தார். மேலும் 6 ஜோடி ஒவ்வொரு இடைவெளி இடையே நிர்ணயித்த விதியை மீறியதால் வெளியேறினர். இறுதிவரை சளைக்காமல் நின்று ஏழு ஜோடிகள் வென்றனர்.வெற்றி பெற்றவர்களுக்கு ஒரு இலட்சம் பாத் ரொக்கப் பணமும், 50 ஆயிரம் பாத் (1500 ஈரோ) பெறுமதியான வைர மோதிரமும் வழங்கப்பட்டது. இதற்கு முன்னர் ஜேர்மனியைச் சேர்ந்த பெலிக்ஸ் வெர்த் (32), தாய்லாந்தை சேர்ந்த உரைரத் (21) என்ற ஜோடி 32 மணி, 7 நிமிடங்கள், 14 வினாடிகள் இணைந்து தொடர் முத்த மழை பொழிந்தது சாதனையாக இருந்தது.






**முள்ளிவாய்க்காலில் இறுதி வரை நின்று போராடிய போராளியின் அனுபவப் பதிவு இது. பாதுகாப்பான தளம் ஒன்றை இவர் சென்றடையும் வரை இவரது விபரங்களை தவிர்த்துக்கொள்கின்றோம்.**

# யாழ்குடாவில் நிலைகொண்டிருந்த போராளிகளுக்கு வழங்கப்பட்ட புதிய உத்தரவு

ரணில் அரசுடன் செய்துகொள்ளப்பட்ட சமாதான உடன்படிக்கையின் பின் ஏற்பட்ட அமைதிக் காலத்தில் லெப்.கேணல் தியாகராஜன் யாழ்ப்பாணத்தில் நின்று செயற்பட்டவர். அரசியல் வேலைத்திட்டங்களுடன் தன்னுடைய வேவுப் பணிகளையும் அங்கு திறம்படச் செய்துகொண்டிருந்தார். குறிப்பாக விடுதலைப் போராட்டத்திற்கு எதிரான செயற்பாடுகளில் ஈடுபடுபவர்கள், சிறீலங்கா துணை இராணுவக் குழுக்களின் நடவடிக்கைகள் குறித்து இவர் தனது வேவு நடவடிக்கைகளை மேற்கொண்டிருந்தார். தனது நடவடிக்கைகளுக்காக இவர் அதிகமாக கரவெட்டி, நெல்லியடி பகுதிகளில்தான் நிலைகொண்டிருந்து செயற்பட்டுக் கொண்டிருந்தார். அதனால், இப்பிரதேசத்தின் பகுதிகள் இவருக்கு அத்துப்படியாகத் தெரிந்திருந்தன. பின்னர் வன்னி திரும்பியிருந்த தியாகராஜன், போர் இடம் பெற்றுக்கொண்டிருந்த காலப்பகுதியில் மீண்டும் படையினர் மீதான தாக்குதல் நடவடிக்கைகளுக்காகவும், புலனாய்வுச் செயற்பாடுகளுக்காகவும் யாழில் தனது அணியினுடன் சென்று தரையிறங்கியிருந்தார்.

யாழில், சற்று தொய்வடைந்திருந்த தாக்குதல்கள் தியாகராஜனின் வருகைக்குப் பின்னர் மீண்டும் புத்துயிர் பெறத்தொடங்கின. மீண்டும் சிறீலங்காப் படையினரின் முகாம்கள், ஊர்திகள், ரோந்து அணிகள் மீதான தாக்குதல்கள் அதிகரித்தன. நாள்தோறும் யாழில் படையினர் மீது அங்கு தாக்குதல், இங்கு தாக்குதல் என வெளிவந்த செய்திகளுக்குப் பின்னால் தியாகராஜனின் கைவரிசை இருந்தது. அதிகரித்த இந்தக் தாக்குநல்களால் திக்குமுக்காடிய சிறீலங்காப் படையினர், தங்களைப் பாதுகாக்க ஈ.பி.டி.பி உட்பட தமது துணை இராணுவக் குழுக்களை களத்தில் இறக்கினார்கள்.



சிறீலங்கா துணை இராணுவ ஒட்டுக் குழுக்கள், விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாக செயற்படுபவர்களையும், விடுதலைப் புலிகளுடன் தொடர்புடையவர்கள் எனக் கருதுபவர்களையும் படுகொலை செய்யவும், கடத்தவும், கைது செய்யவும், அச்சுறுத்தவும் தொடங்கினார்கள். நாளும் படுகொலை, கடத்தல்கள் எனும் அளவிற்கு இது மிக மோசமான கட்டத்தை அடைந்தது. குடும்பமாகவும் பலர் இந்தப் படுகொலைக்கு பலியானார்கள். ஒட்டுக் குழுக்களின் இந்நடவடிக்கையால் மக்கள் மத்தியில் ஒரு அச்சம் ஏற்படத்தொடங்கியது. இராணுவ நகர்வுகள் தொடர்பாக மக்கள் விடுதலைப் புலிகளின் புலனாய்வாளர்களுக்கு வழங்கிய தகவல்களும் இதனால் குறைவடையத் தொடங்கின.

இதனால், புலனாய்வுப் போராளிகளே களத்தில் இறங்கி தகவல்களை சேகரிக்கவும் நடவடிக்கையில் ஈடுபடவும்வேண்டிய நிலை எழுந்தது. வேவு நடவடிக்கைகளை மக்களோடு மக்களாக இணைந்திருந்தே மேற்கொள்ளவேண்டிய நிலையில், படையினர் மற்றும் ஒட்டுக்குழுவினரால் அடையாளம் காணப்பட்டு போராளிகள் இழப்புக்களைச் சந்திக்கத் தொடங்கினார்கள்.

மேஜர் புவியரசன் நெல்லியடி கொற்றாவத்தை என்னும் இடத்தில் வைத்து சிறீலங்காப் படையினரால் சுட்டுக்கொல்லப்படுகின்றார். மேஜர் கவியரசன், கப்டன் வினோத் ஆகிய போராளிகளும் தொடர்ச்சியாக நடந்த சம்பவங்களில் வீரச்சாவடைகின்றார்கள். இவ்வாறு போராளிகளின் இழப்புக்களால் யாழில் நடவடிக்கைகள் மீண்டும் மந்த நிலையை அடைகின்றது. இந்நிலையில், தாக்குதல் நடவடிக்கைகளைவிட வேவுத் தரவுகளே அப்போதைய நிலையில் அவசியமாகக் கருதப்பட்டதால், தாக்குதல் நடவடிக்கைகளை தியாகராஜன் கைவிட்டு, எஞ்சியிருந்த தனது ஒரு சில போராளிகளுடன் வேவு நடவடிக்கையில் இறங்குகின்றார்.

மக்களோடு மக்களாக வாழ்ந்து வேவுத் தரவுகளை சேகரிக்கின்றார். அத்துடன், சிறீலங்காப் படை அதிகாரிகள் தங்கியிருக்கும் முகாம்கள், கனரக ஆயுத வெடிபொருள் களஞ்சியம், படை முகாம் நிலைகள், ஆட்லறி தளங்கள் என்பனவற்றை தனது வேவு நடவடிக்கை மூலம் அடையாளம் கண்டு பொறுப்பானவர்களுக்கு தகவல்களை வழங்குகின்றார்.

யாழ்குடாவிற்கு மேலும் அதிகளவான வேவு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவேண்டிய நிலையில், அடுத்த கட்டமாக விடுதலைப் புலிகளின் கடற்புலிகளின் வேவுப்படை அணிகள் தரையிறக்கப்படுகின்றன. தீவுப் பகுதிகள் ஊடாகவும் மற்றும் பருத்தித்துறை பகுதி ஊடாகவும் யாழப்பாணத்தில் கடல்வழியாக தரை இறங்கிய அவர்கள் ஆங்காங்கே நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றார்கள்.

இதன்போது புலனாய்வுத்துறை அணியின் போராளி ஒருவர் சிறீலங்காப் படையினருக்கு எதிரான நடவடிக்கைக்காக தன்னை தயார்படுத்தி செல்லும் வேளை, படையினரின் சுற்றிவளைப்புக்குள் அகப்பட்டு சயனைட் அருந்துவதற்கான கால அவகாசம்கூட இல்லாதளவிற்கு உயிருடன் பிடிபடுகின்றார். கடுமையான சித்திரவதை விசாரணைகளால் இவரிடம் இருந்து சில வெடிபொருட்கள் வைத்திருக்கும் இடங்களையும், சில ஆதரவாளர்களையும் படையினர் இனம்கண்டுகொள்கின்றார்கள். இது யாழ்குடாவின் நடவடிக்கையில் ஒரு இக்கட்டான நிலையை ஏற்படுத்துகின்றது.

இதனால், அடுத்தகட்ட முடிவொன்றை விடுதலைப் புலிகள் அவசரமாக எடுக்கின்றார்கள். அதாவது படையினரிடம் எதிர்பாராமல் அகப்பட்டுக்கொண்டால் விடுதலைப் புலிகளின் கொள்கைக்கு அமைய சயனைட் அருந்துவதற்கு பதிலாக வெடிகுண்டை வெடிக்க வைத்து வீரச்சாவைத் தழுவிக்கொள்வது. இதன்மூலம் தானும் உயிரிழப்பதுடன், எதிரிக்கும் சேதங்களை ஏற்படுத்தமுடியும். அத்துடன், குப்பியைக் கடித்து வீரச்சாவைத் தழுவினாலும் இதனால், மேலும் சில நெருக்கடிகள் இருந்தன. குப்பியைக் கடித்து வீரச்சாவைத் தழுவும் போராளிகளிடம் இருக்கும் சில தடயங்கள் மற்றும் சில தரவுகளை வைத்துக்கொண்டு ஆதரவாளர்களை இனம் கண்டுகொள்கின்ற, விடுதலைப் புலிகளின் அடுத்த கட்ட செயற்பாடுகள் குறித்து ஆராய்கின்ற நடவடிக்கையில் சிறீலங்காப் படையினர் ஈடுபட்ட நிகழ்வுகளும் நடந்தேறியுள்ளன.

இதனால், யாழ்குடாவில் நடவடிக்கைகளுக்கு செல்பவாகளுக்கென உடலோடு பொருத்தப்படும் ஜக்கற் (வெடிகுண்டு) புதிதாக வடிவமைக்கப்படுகின்றது. அத்துடன், யாழ்ப்பாணத்தில் நிற்கும் அனைத்துப் போராளிகளுக்கும், இதுதொடர்பாக புலனாய்வுத்துறையினரின் தலைமைப்பீடத்தினால் கட்டளையும் வழங்கப்படுகின்றது. எக்காரணம் கொண்டும் எதிரியின் கையில் உயிருடன் பிடிபடக்கூடாது. உங்களை அழித்துக்கொள்ளவேண்டிய அவசியம் எழுந்தால், அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி இரண்டு எதிரியையாவது அழிக்கவேண்டும் என்றும் அவர்களுக்கு கட்டளை வழங்கப்படுகின்றது. இதனையடுத்து, யாழ்ப்பாணத்தில் நடவடிக்கையில் நின்ற, புதிதாகச் செல்லும் அனைத்து போராளிகளுக்கும் ஜக்கற் வழங்கப்படுகின்றது

இவ்வாறு இறுக்கமான காலகட்டத்தில் இறுக்கமான நிலமையில்தான் யாழ்ப்பாணத்தில் புலனாய்வுப் போராளிகளின் செயற்பாடுகள் நடைபெற்றுக்கொண்டிருக்கையில், கரவெட்டி அரசடிப் பகுதியில் தியாகராஜனை அடையாளம் கண்டுகொண்ட சிறீலங்காப் படையுடன் சேர்ந்தியங்கும் ஒட்டுக்குழுவினர் அவர் மீது துப்பாக்கிசூடு நடத்துகின்றார்கள். இதன்போது லெப்.கேணல் தியாகராஜன் வீரச்சாவைத் தழுவிக்கொள்கின்றார்.

இதேவேளை, போராளிகள் இருக்கும் இடமொன்றை அறிந்துகொண்ட சிறீலங்காப் படையினர், மிக இரகசியமாக அப்பகுதியைச் சுற்றிவளைத்து அவர்களை உயிருடன் கைது செய்யும் நடவடிக்கையில் இறங்கியிருந்தனர். இதன்போது, நிலைமையை உணர்ந்துகொண்ட போராளிகள், மிகவும் பொறுமையோடு தங்கள் இலக்குக்குள் படையினர் வரும்வரை காத்திருந்து, தங்களிடம் இருந்த குண்டுகளை வெடிக்க வைத்து தங்களைத் தாங்களே அழித்ததுடன், கைது செய்யவந்த படையினர் சிலரையும் உயிரிழக்கவும் வைக்கின்றார்கள். தங்களையும் அழித்து, தங்களிடம் இருந்த வெடிபொருட்கள், மற்றும் வேவுத் தரவுகளையும் அழித்து எதிரிக்கும் அழிவை ஏற்படுத்தி, இந்த மண்ணிற்காக ஒரு அற்புதமான தியாகத்தைப் புரிந்துகொண்டார்கள் அந்தப் போராளிகள்.

இதேவேளை, படையினரிடம் அகப்படும் நிலையில், அவர்கள் முன் தாங்கள் கட்டியிருந்த ஜக்கற் குண்டினை வெடிக்க வைத்து வீரச்சாவடையும் சம்பவங்களும் இதனால், படையினர் இழப்புக்களைச் சந்திக்கின்ற சம்பவங்களும் அதிகரிக்கத் தொடங்கின. இவை சிறீலங்காப் படையினர் மத்தியில் அதிர்ச்சியையும், அச்சத்தையும் அத்துடன், பல புதிய சிக்கல்களையும் இது ஏற்படுத்தியிருந்தது. தங்களையும் அழித்து எதிரிக்கும் அழிவை ஏற்படுத்தும் ஒரு கரும்புலிகள் அணிபோன்று யாழ்குடாவில் நிலைகொண்டிருந்த போராளிகள் செயற்பட்டுக் கொண்டிருந்தது, சந்தேகத்தின் பேரில் ஒருவரை கைது செய்வதற்கு படையினர் அஞ்சுகின்ற அளவிற்கு நிலைமையை கொண்டுசென்றிருந்தது.

**போராளிகள் இருக்கும் இடமொன்றை அறிந்துகொண்ட சிறீலங்காப் படையினர், மிக இரகசியமாக அப்பகுதியைச் சுற்றிவளைத்து அவர்களை உயிருடன் கைது செய்யும் நடவடிக்கையில் இறங்கியிருந்தனர். இதன்போது, நிலைமையை உணர்ந்துகொண்ட போராளிகள், மிகவும் பொறுமையோடு தங்கள் இலக்குக்குள் படையினர் வரும்வரை காத்திருந்து, தங்களிடம் இருந்த குண்டுகளை வெடிக்க வைத்து தங்களைத் தாங்களே அழித்ததுடன், கைது செய்யவந்த படையினர் சிலரையும் உயிரிழக்கவும் வைக்கின்றார்கள்.**

*(தொடரும்...)*




**முள்ளிவாய்க்காலில் இறுதி வரை நின்று போராடிய போராளியின் அனுபவப் பதிவு இது. பாதுகாப்பான தளம் ஒன்றை இவர் சென்றடையும் வரை இவரது விபரங்களை தவிர்த்துக்கொள்கின்றோம்.**

# விடுதலைப் புலிகளின் அடுத்தகட்ட நகர்வுகளுக்கு நெருக்கடி ஏற்படுத்திய ஆள ஊடுருவும் படையணி

யாழ்ப்பாணத்தின் நிலைமை இவ்வாறிருக்க, கிழக்கிலும் இவ்வாறான நிலைமையே ஏற்பட்டிருந்தது. அங்கும் போராளிகள் இராணுவத்தினரிடம் பிடிபடும்போது அவர்களுக்கு இழப்பை ஏற்படுத்தி உயிரை அர்ப்பணிக்கும் வகையில் குண்டுபொருத்திய ஜக்கற்றுடன் செயற்படத் தொடங்கியிருந்தார்கள். இராணுவக் கட்டுப்பாட்டுப் பகுதிகளில் நிலைமை இவ்வாறிருக்க, வன்னியில் புதிய போராளிகளின் அணிகள் பெருகிக்கொண்டிருந்தன. போராளிகளாக பலர் தாமாகவும், பெற்றோர்களாலும் ஒப்படைக்கப்பட்டுக் கொண்டிருந்தனர். அதிகமானவர்கள் வந்து இணைந்ததால் ஒருகட்டத்தில் அவர்களுக்கு பயிற்சி வழங்குவதற்கு போதியளவு பயிற்சி ஆசிரியர்களின் இல்லாமை ஒரு பெரும் பிரச்சினையாக மாறியிருந்தது.

அன்றைய பயிற்சி முகாம்களை எடுத்து கொண்டால் 200 பேர் பயிற்சி பெறுவதற்கு ஏற்றவகையில் அமைக்கப்பட்டிருந்தன. காட்டுக்குள் அமைக்கப்பட்ட முகாமிற்கு கிணறு வசதி, கழிப்பிடவசதி, பயிற்சி இடைவேளையிலான பொழுதுபோக்குவசதி என அனைத்தும் நிறைந்து காணப்படுகிறது. அத்துடன், அவர்களுக்கு பயிற்சிக்குத் தேவையான சத்தான உணவுகளும் வழங்கப்பட்டன. அதனைவிட கல்வி அறிவு, பொது அறிவு வகுப்புகள் எல்லாம் இந்த முகாம்களில் அடிக்கடி நடைபெறும். ஒவ்வொரு போராளிக்கும் சூட்டுபயிற்சிக்காக சுமார் 30


காலித்துறைமுகம் மீதான தாக்குதல்

ரவைகள் வழங்கப்பட்டன. ஆண், பெண் இருபாலருக்கு ஏற்றவகையில் இது நடைமுறைபடுத்தபட்டது. இந்த அடிப்படைப் பயிற்சித் தளங்கள் தளபதி கேணல் கடாபி அவர்கள் பொறுப்பில் நேரடியாக நடைபெற்றன.

இவ்வாறான பயிற்சித் தளங்களை சிறீலங்கா படையின் உளவு விமானங்கள் கண்டறிந்து தகவல்களைக் கொடுத்தும் இருந்தன. இந்தப் படங்களைக் கொண்டு விடுதலைப் புலிகள் சிறுவர்களுக்கு பயிற்சி கொடுக்கின்றார்கள் என சிறீலங்கா பிரச்சாரங்களை மேற்கொண்டதுடன், அவற்றின் மீது சிறீலங்கா வான் படையினர் வான் தாக்குதல்களையும் மேற்கொண்டனர். இந்தத் தாக்குதல்களினால் அச்சமடைந்த இளைஞர், யுவதிகள் சிலர் பயிற்சியில் இருந்து விலகிச்சென்ற நிகழ்வுகளும் நடந்தன.

பயிற்சித் தளங்கள் மீது தாக்குதல் நடத்திய அதேவேளை, விடுதலைப் புலிகளின் முக்கிய தளபதிகளைக் கொல்வதற்காக ஆள ஊடுருவும் படையணியையும் களத்தில் இறக்கியது சிறீலங்கா. நீண்டதூரம் ஊடுருவி காத்திருந்து விடுதலைப் புலிகளின் தளபதிகள், பொறுப்பாளர்களை இலக்குவைத்து தாக்கும் நடவடிக்கைக்காக பெருமளவான ஆள ஊடுருவும் படையினர் இறக்கப்பட்டிருந்தனர். சிறீலங்காவின் இந்த நடவடிக்கையானது, அடுத்த கட்டத் தாக்குதல்களை முன்னெடுப்பதற்கு ஒரு தடைக்கல்லாகியது. தாக்குதல்களை முன்னெடுப்பதற்கு முன்பாக, விடுதலைப் புலிகள் தமது படையணியை இன்னொரு பக்கத்திற்கு திசை திருப்பவேண்டிய நிலையை இது ஏற்படுத்தியது. தளபதிகளின் பாதுகாப்பிற்காக பெருமளவு போராளிகளை ஒதுக்கப்பட்டனர். விடுதலைப் புலிகளின் பின் தளங்களுக்குள் இந்த ஆள ஊடுருவும் படையணி ஊடுருவிவிடாமல் தடுப்பதற்கு பெருமளவான போராளிகளை நிறுத்தவேண்டிய நிலையும் ஏற்பட்டிருந்தது. போராளிகள் நிறுத்தப்பட்டு பின்தளங்கள் பாதுகாக்கப்படுகின்றன.

அதேவேளை, முதன்மை வீதிகளில் 100 மீற்றருக்கு ஒரு காவலரண் அமைக்கப்பட்டு, பொதுமக்களை கொண்ட உள்ளக பாதுகாப்பு கட்டமைப்பு உருவாக்கப்பட்டது. அதன்மூலம் வீதிப் பாதுகாப்பு நடைமுறைப்படுத்தப்படுகிறது. அதாவது வன்னியில் உள்ள திருமணம் செய்தவர்கள், தொழில்புரிபவர்கள் மக்கள் படைகட்டுமானம் மூலம் பயிற்சி கொடுக்கப்பட்டு, ஒரு மாதத்திற்கு ஏழு நாட்கள் என்ற முறையில் கட்டாய பாதுகாப்பு பணியில் ஈடுபடுமாறு பணிக்கப்படுகின்றார்கள். இந்தக் கடமையில் ஈடுபட மறுப்பவர்களுக்கு தண்டப்பணம் அறிவிடப்பட்டது.

**வன்னியில் உள்ள திருமணம் செய்தவர்கள், தொழில்புரிபவர்கள் மக்கள் படைகட்டுமானம் மூலம் பயிற்சி கொடுக்கப்பட்டு, ஒரு மாதத்திற்கு ஏழு நாட்கள் என்ற முறையில் கட்டாய பாதுகாப்பு பணியில் ஈடுபடுமாறு பணிக்கப்படுகின்றார்கள். இந்தக் கடமையில் ஈடுபட மறுப்பவர்களுக்கு தண்டப்பணம் அறிவிடப்பட்டது.**

வன்னியை பொறுத்தமட்டில், பெரும்பாலான இடங்கள் பெரும் காடுகளால் நிறைந்துள்ளது. காடுகளுக்கு ஊடாகத்தான் பல வீதிகள் செல்கின்றன. இவ்வாறு இந்த வீதியினை பாதுகாக்கவே இவர்கள் கட்டாயத்தின் பெயரில் அழைக்கப்படுகின்றார்கள். ஆனால் நகர்புற வீதிகள் காவல்துறை உறுப்பினர்களை கொண்டு பாதுகாக்கபடுகின்றது. ஒரு கிலோ மீற்றருக்கு ஒரு காவலரண் அமைக்கப்பட்டு காலை, மாலை சுற்று ரோந்து செய்யப்பட்டு நகர்புற வீதிகள் பாதுகாக்கப்படுகின்றன.

இவ்வாறு விடுதலைப் புலிகளின் உள்ளக பாதுகாப்பிற்கென ஏராளமான ஆயுதங்கள், அணிகள் ஒதுக்கப்படுகிறன. இதனால் நிர்வாக தேவை அதிகரிக்கின்றது. ஆயுதப் பற்றாக்குறை நிலவுகிறது. பழுதடைந்த ஆயுதங்கள் திருத்தி பாவிக்கும் அளவிற்கு நிலைமை தள்ளப்படுகிறது. உதாரணமாக கூறுவதானால் வீதிப் பாதுகாப்பில் உள்ள உள்ளக பாதுகாப்பு படையினருக்கு ஆயுதம் போதாத நிலை காணப்படுகிறது. 500 மீற்றர் தூரத்திற்கு ஒரு காவலரண் அமைக்கப்படுகிறது. அதில் மூன்று நாலு பேர் காவலில் ஈடுபடுத்தப்படுகிறார்கள். இவர்களில் இருவருக்குத்தான் ஆயுதம் வழங்கபட்டிருக்கும். வன்னியில் உள்ள வீதிகளின் நீளத்தைக் கணக்கெடுத்து பார்த்தால் தெரியும் எத்தனை காவாலரண்கள் அமைக்கப்பட்டிருக்கும், எத்தனை பேர் அதற்குத் தேவைப்பட்டிருப்பார்கள் என்பது. விடுதலைப் புலிகளின் தளபதிகள் நடமாடும் அனைத்து வீதிகளும் இவ்வாறு பாதுகாக்கப்படுகின்றன.

இதேவேளை, பாதுகாப்புக் கடமைக்கு ஆட்கள் போதாமல் இருக்கையில், பண வசதி படைத்தவர்கள் காவல் கடமைக்குச் செல்லாமல் தண்டப் பணத்தினை கட்டினார்கள். இதனால், உள்ளக பாதுகாப்பிற்கான ஆளணி பற்றாக்குறை மேலும் அதிகரித்தது. இதனால், சில வீதிகள் பாதுகாப்பில் இருந்து நீக்கப்படுகிறது. அத்துடன், ஒரு கட்டத்தில் சுற்றிச்சுற்றி உள்ள பாதுகாப்பு பணிக்காக ஒரு சில பொது மக்களே போகவேண்டிய நிலையும் ஏற்படுகின்றது. இதனால், அவர்களிடையே ஒரு கசப்புணர்வு தோன்றியது. இது பாதுகாப்பில் பலவீனத்தை ஏற்படுத்தியது. இவை அன்று நடந்த உண்மைகள். மக்களின் இவ்வாறான செயற்பாட்டிற்கு அன்று சில பொறுப்புகளில் இருந்த பொறுப்பாளர்களும் காரணம் என்பதும் மறுப்பதற்கில்லை.

வன்னியின் நிலைமை இவ்வாறிருக்க, விடுதலை புலிகள் தென்னிலங்கை மீது தமது தாக்குதல்களைத் தொடருகின்றார்கள். காலித்துறைமுக முகாம் மீதான தாக்குதல் இதில் முக்கியமானது. 2006 ஒக்டோபர் 18ம் திகதி அதிகாலை நடந்த இந்தத் தாக்குதலில் ஐந்து படகுகளில் வந்த 15 வரையான கடற்புலிகள் தாக்குதலில் ஈடுபட்டதாக சிறீலங்கா படை தரப்பு தெரிவித்திருந்த போதிலும், அவர்கள் தாக்குதலை நடத்திவிட்டு எவ்வாறு தப்பிச்சென்றார்கள் என்பது குறித்து தெரிவிக்கவில்லை. இதில் சிறீலங்கா கடற்படையினருக்கு பெரும் இழப்புகளும் ஏற்பட்டன. பலம் பொருந்தியதாகக் கருதப்பட்ட காலித் துறைமுகத்தில் நுழைந்து தாக்கிவிட்டு தப்பியும் சென்றது சிறீலங்காவிற்கு பெரும் அவமானத்தை ஏற்படுத்தியிருந்தது. இந்தத் தாக்குதலால் அதிர்ச்சியடைந்த சிறீலங்கா, காலியில் உள்ள தமிழர்களின் வர்த்தக நிலையங்களைத் தாக்கியழித்து தனது ஆத்திரத்தை தீர்த்துக்கொண்டது.

அத்துடன் கடற்படையினருக்கு ஏற்பட்ட இழப்பினை ஈடுகட்ட கடற்புலிகள் மீது தாக்குதல் நடத்தவும் சிறீலங்கா திட்டமிட்டது. அப்போது விடுதலைப் புலிகளின் கடற்புலித் தளங்கள் வடமராட்சி கிழக்குப் பகுதியிலேயே அதிகளவில் செயற்பட்டுக்கொண்டிருந்தன.

*(தொடரும்...)*










OPEN: MON TO SUN 5A.M. TO MIDNIGHT
(HOLIDAY NOVEMBER 27TH HEROS DAY)






# BABU

FOR TASTE & FLAVOUR OF THAMIL EELAM

CATERING - TAKEOUT - BAKERY

9590 McCowan Rd. Unit 3-5
Markham, ON. L3P 8M1
(McCowan & Bur Oak)

4800 Sheppard Ave., Unit #20-206
Scarborough, ON. M1S 4N5
(McCowan & Sheppard)

**416.298.BABU(2228)**
**www.babudelivery.ca**

## Dinner For 2
## $16.95

1 Biryani Rice | 1 Butter Chicken
1 Any Meat Curry | 1 Mix Vegetable Curry
1 Naan (4 Pieces) | 2 Dessert (Sweets)



## Dinner For 5
## $44.95

## $5.00 OFF
With $ 25 Purchase From Regular Priced Items
Valid only with coupon. Can't be combined with other offers or discounts. Expires March 15, 20011

## 10 SAMOSAS FREE
Buy 15 Samosas For $5 And Get 10 Samosas FREE
Valid only with coupon. Can't be combined with other offers or discounts. Expires March 15, 20011

## FREE NAAN
Buy Midium Butter Chicken & Get A FREE Naan
Valid only with coupon. Can't be combined with other offers or discounts. Expires March 15, 20011

## FREE ROTI (5 Pieces)
Buy 5 Roti's For 4.95 And Get 5 FREE Roti's
Valid only with coupon. Can't be combined with other offers or discounts. Expires March 15, 20011

## FREE TANDOORI CHICKEN LEG
Buy A Rice Combo & Get A FREE Tandoori Chicken Leg
Valid only with coupon. Can't be combined with other offers or discounts. Expires March 15, 20011

# சிறீலங்கா வான்படையின் இரண்டு கிபீர் விமானங்கள் நடுவானில் மோதி வெடித்தன













4 ஆம் கட்ட ஈழப்போரின் போது இரசாயன குண்டுகள் உட்பட உலக நாடுகளினால் தடை செய்யப்பட்ட குண்டுகளை வீசி ஆயிரக்கணக்கான பொதுமக்களை பலிகொண்ட சிறிலங்க விமானப் படையின் விமானியான மொனாஷ் பெரேரா என்பவரே இந்தவிபத்தில் கொல்லப்பட்டார்